# கல்கி

KALKI
23.1.2000
ரூ. 5.00



தி.மு.கவின்
உட்கட்சி
சவால்கள்!

# ஆல்ரவுண்டர் அட்சயா!

# ஆண்டு தொடக்கம் தரும் ஆனந்தம்

# ஆயுள் முழுவதும் தொடர TDFC யில் சேமியுங்கள்!



**13.14%**

36 மாதம் அதற்குமேல்
13% மாதாந்திர வட்டி உண்டு
1வருடம் 12.12% மற்றும்
25 மாதங்கள் 12.63% காலாண்டிற்கு



**18.18%**

60 மாதங்களுக்கு
வருடவட்டி 13% மாதந்தோறும்
கூட்டுவட்டி முறையில் கணக்கிடப்படும்.

* Rating from CRISIL FA(+) indicates adequate safety.
* Registered with RBI as NBFC vide Regn. No.: 07.00403



## தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.

**தொலைபேசி : 8292059, 8292917, 8293351, பேக்ஸ் : (044) 8237876**

**தந்தி :TAFCON. P.B.No.719.** E-mail:tdfc@giasmd01.vsnl.net.in

கிளைகள் :
* அரசு விரைவு பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044. தொலைபேசி : (0422) 497102
* அரசு விரைவு பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001. தொலைபேசி:(0431) 464188
* ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001. தொலைபேசி: (0452) 741686
* முனிசிபல் அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001. தொலைபேசி :(0424) 258204

- உள்ளூர் காசோலைகள் மற்றும் சென்னை வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
- காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்.

**உங்களது முதலீடு "டிடிஎப்சி" யில் பாதுகாப்பானது – பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 29.9.99 தினசரிகளில் வெளியிடப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

*"Details are also available on the Internet" : www.tn.gov.in / www.chennaionline.com*

DIPR/19/DIS/2000/ELEGANT

# தி.மு.க.வின் உட்கட்சி சவால்கள்!

அரசு மற்றும் கூட்டுறவுத் துறையில் பல்வேறு பொறுப்புகளிலுள்ள கழகப் பிரமுகர்கள் ஏதேனும் ஒரு பொறுப்பை மட்டும் வைத்துக் கொண்டு மீதியை ராஜினாமா செய்தால்தான் கட்சித் தேர்தலில் போட்டியிடலாம் என்று தி.மு.க. தலைமை அறிவித்து விட்டதல்லவா? இப்போது நூற்றுக்கணக்கான கழகப் பிரமுகர்கள் எதை விடுவது; எதை வைத்துக் கொள்வது என்ற குழப்பத்தில் இருக்கிறார்கள். குறிப்பிட்ட சிலர் எந்தப் பொறுப்புகளையும் விட மனதில்லாமல் கட்சித் தேர்தலில் போட்டியிடாமல் ஒதுங்க நினைக்கிறார்கள். ராஜ்ய சபைக்கு வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக கூடிய நிர்வாகக் குழுவில் கட்சிப் பதவியை கறிவேப்பிலையாக நினைக்கும் கழகப் பிரமுகர்களை ஒரு பிடி பிடித்தார் கலைஞர்.

"ஒரு பகுதிச் செயலாளர் நெடுங்காலம் பதவியில் இருந்து விட்டதாகவும் கட்சித் தேர்தலில் இருந்து ஒதுங்குவதாகவும் சொல்லியிருக்கிறார். இதைக் கண்டு நான் வெட்கப்படுகிறேன். கட்சிப் பொறுப்புகளை விட மற்ற பொறுப்புகளை முக்கியமாக நினைக்கும் இவர்களைப் போன்றவர்களால் கழகம் எப்படி வளரும்?" என்று கேட்ட கலைஞர், பாக்கெட்டிலிருந்து சின்னத் துண்டு பேப்பரை எடுத்து, "ராஜ்ய சபைக்கு நமது கழகத்தின் சார்பில் திருச்சி சிவாவும் கோவை சுப்பையாவும் போட்டியிடுவார்கள்" என்று அறிவித்தார். ஒரு காலியிடம் தமக்காக ஒதுக்கப்படுமென நினைத்த மதுரை மாநகரச் செயலாளர் காவேரி மணியத்தின் முகம் சோர்ந்து போயிற்று. யாரிடமும் பேசாமல் வெளிவந்த காவேரி மணியம், வெளியே வந்து மதுரைக்குத் தொலைபேசினார். அன்று இரவே காவேரி மணியம் உட்பட, மதுரை நகர கழகப் பிரமுகர்கள் தங்கள் கட்சிப் பொறுப்புகளையும், அரசுப் பொறுப்புகளையும் ராஜினாமா செய்வதாக ஃபேக்ஸில் சொன்னார். ''ராஜினாமா ஏற்றுக் கொள்ளப்பட்டது'' என்றார் கலை



ஞர் கடுப்புடன்.

பல வருடங்களுக்குப் பிறகு அதிருப்தியாளர்கள் தைரியமாகத் தங்கள் முகங்களைக் காட்டியிருக்கும் இந்தச் சம்பவம் குறித்து கழகப் பிரமுகர்கள் கிசுகிசுத்த குரலில் பேசிக் கொள்கிறார்கள். காலியான ராஜ்ய சபா இடங்களுக்கு விருப்பப்பட்டவர்கள் நிறையப் பேர். மிசா கணேசன், கவிஞர் வைரமுத்து, காவேரி மணியம் தவிர ஒன்றிரண்டு தொழிலதிபர்களும் முயற்சி செய்தார்கள் என்று பேச்சு அடிபடுகிறது. ஒரு பெண்மணிக்குக் கொடுக்க வேண்டும் என்று நிர்வாகக் குழுவில் பேசினார் சற்குண பாண்டியன். 'திருச்சி சிவாவுக்கு ஓர் இடம் நிச்சயம்' என்பது முன்பே தெரிந்த ஒன்றுதான். மாணவரணிச் செயலாளராக இருக்கும் சிவா, ஸ்டாலினுக்கு மிக வேண்டியவர் மட்டுமல்ல; தகுதியான நபர்தான் என்று கழகப் பிரமுகர்களே பரவலாக ஒப்புக் கொள்கிறார்கள்.

ஆனால் சுப்பையன் பற்றி இருவிதமான கருத்துக்கள் இருக்கின்றன. அவர் ஒரு ஒயிட் காலர் கழகத் தொண்டர் என்கிறார்கள் சிலர். 'மாறனுக்கு வேண்டியவர்' என்றும் சொல்கிறார்கள். "இல்லையில்லை... சமீப காலமாக சேலம், கோவை ஆகிய இடங்களுக்கு அடிக்கடி விசிட் செய்து கழக விவகாரங்களில் அக்கறை எடுத்துக் கொள்ளும் கலைஞரின் மூன்றாவது மகன் தமிழரசு செய்த சிபாரிசு இது" என்றும் சொல்கிறார்கள். இறால் மற்றும் ஹோட்டல் பிஸினஸ் செய்து வெற்றிகரமாக வராத நிலையில், ரெடிமேட் ஆடைகள் தொழிலில் பிஸியாக இருக்கும் தமிழரசு இதுபோன்று நடவடிக்கையில் ஈடுபடவும் மாட்டார்; அவருக்கு நேரமும் கிடையாது என்றும் சிலர் சொல்கிறார்கள். அன்பழகனும், ஆற்காட்டாரும் இணைந்து கலைஞரை சுப்பையனுக்கு ஆதரவாகத் திருப்பி விட்டதாகவும் பேச்சு இருக்கிறது.

இந்த நிலையில் மதுரையிலிருந்து ஆபரேட் ஆகும் அழகிரி, காவேரி மணியத்தை கலைஞர் கைவிட்டதால் தாம் வஞ்சிக்கப்பட்டதாக நினைக்கிறாராம். அவரது தூண்டுதலின்பேரில்தான் மதுரை மாநகர கழகப் பிரமுகர்கள் ராஜினாமா செய்தார்களாம். கழகத்தில் எந்தவித பொறுப்பிலும் இல்லாமலேயே தெற்குப் பகுதியில் கழக விவகாரங்களில் ஆர்வம் காட்டும் அழகிரி இந்த விஷயத்தில்

காவேரிமணியத்துக்கு ராஜ்யசபா சீட் இல்லை என்றதும் தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்க மாவட்ட செயற்குழு உறுப்பினர் பதவியை மேயர் குழந்தைவேலுவும், மாவட்டச் செயலாளர் பதவியை காவேரி மணியமும், இளைஞரணி மாவட்டச் செயலாளர் பதவியை மன்னனும் மற்றும் மாவட்டப் பொருளாளர் பதவியை தர்மலிங்கமும்... இப்படியே கூண்டோடு ராஜினாமா செய்து தலைமையை அதிர வைக்கலாம் என்று நினைக்க.... 'ராஜினாமா கடிதங்களை ஏற்றுக் கொண்டோம்' என்று வேறொன்று நடக்க... ஐந்து தி.மு.க. தொண்டர்கள் தீக்குளிக்க ரெடியானார்கள்!

அப்படி தீக்குளிக்கப் போனவரை 'ஏன் இப்படி?' என்று கேட்டோம்... ஜாமீனில் இருந்த அவர் பெயர் எம். டோனா என்ற ஞானவேல். பதற்றம் குறையாமல் சொல்லத் தொடங்கினார், "இந்த 33 வது வார்டுல இளைஞரணி அமைப்புச் செயலாளரா 9 வருஷமா இருக்கேன். கட்சி மேலும், தலைவர் மீதும் என்னோட வீட்டுல உள்ளவங்களுக்கு மேல அபிமானமும் நம்பிக்கையும் வச்சிருக்கேன். தி.மு.க. மாவட்ட அலுவலகமும் மாவட்டச் செயலாளரும் எங்க வார்டா இருக்கறதால பிரியம் ஜாஸ்தி. எங்களையெல்லாம் கட்சியில அரவணைத்துக் கொண்டது ஐயா காவேரி மணியம்தான். அதனால கட்சிரீதியா மட்டுமில்லாம தனிப்பட்ட முறையிலும் எனக்கும் எங்க 33வது வார்டைச் சேர்ந்த மற்ற இளைஞரணி நண்பர்களுக்கும் ஐயா மேல மதிப்பும் மரியாதையும் உண்டு. தாங்க ரொம்ப வருஷமா ஐயாவுக்கு ஏதாவது சீட்டு, பதவி கிடைக்கும்னு எதிர்பார்த்தோம். ஆசைப்பட்டோம். ஆனா கிடைக்கவே இல்லை. ஐயா காவேரி மணியம் பதவி மேல ஆசைப்படுறவர் இல்லை. ஆனால் என்னைப் போன்ற இளைஞர்களுக்கு இவ்வளவு அரசியல் அனுபவமுள்ள, நல்லவரான காவேரிமணியம் ஐயாவுக்கு ராஜ்யசபா எம்.பி. சீட் கிடைக்கணும்ங்கிற ஆர்வம் அதிகமா இருந்துச்சு.


• டோனா

# ''கட்சின்னா நாலு பேர் அமுக்கத்தான் செய்வான்!''

ஆனா இந்த முறையும் அவருக்கு பதவி இல்லைன்னு தெரிஞ்சதும் உணர்ச்சி வசப்பட்டுட்டோம். எல்லோருடனும் சேர்ந்து பதவியை ராஜினாமா செய்தும் மனசு ஆறலை... எப்படியாவது மேலிடத்துக்கு எங்க உணர்வுகளைத் தெரியப் படுத்தணும்னு 33 வது வார்டிலுள்ள இளைஞரணி உறுப்பினர்களுடன் தீக்குளிக்க முயற்சி செய்தோம். நான், இளைஞரணி துணைச் செயலாளர் சுந்தர், டி.எம். கோர்ட் மணி, பாலு, மணி எல்லோரும் சேர்ந்து பொது மக்கள் பார்க்க தீக்குளிக்க முயன்றோம். ஆனால் போலீஸார் தடுத்துக் கைது செய்து விட்டனர். நாங்க ஆளும்கட்சி என்று தெரிந்தும் எப்.ஐ.ஆர். பதிவுசெய்து விட்டார்கள். இப்போது பெயிலில் வந்து


• நவநீதகிருஷ்ணன்


• ஜோதிராம்

தான் உங்களோடு பேசிக் கொண்டிருக்கிறேன்...''

**வா**ர்த்தைக்கு வார்த்தை காவேரி மணியத்தை ஐயா, ஐயா என்றுதான் மதுரை தி.மு.க.வினர் மரியாதையோடு அழைக்கிறார்கள். நாம் காவேரிமணியத்தைத் தொடர்பு கொண்டு, 'ராஜினாமா...?' என்ற போது 'சென்னைக்கு கிளம்பிக் கொண்டிருக்கிறேன்' என்றார்.

தி.மு.க. உடன்பிறப்புகள் இதுபற்றிப் பேச மறுத்ததால்... மாவட்ட அளவிலுள்ள மற்ற கட்சிக்காரர்கள் என்ன நினைக்கிறார்கள் என்று கேட்டோம்.

சோ. நவநீதக் கிருஷ்ணன். மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றச் செயலாளர். முன்னாள் துணை மேயர். முன்னாள் பால்வளத் தலைவர். ''இது அப்படியே ஜோடிக்கப்பட்ட நாடகமுங்க'' என்றவர் தொடர்ந்து, ''இவங்க எல்லாம் ராஜினாமா கூப்பாடு போடுறாங்களே, எதை ராஜினமா செஞ்சாங்க? கட்சி கொடுத்த பொறுப்பைத்தானே ராஜினாமா செஞ்சாங்க... இவங்க வேகத்தையும் கோபத்தையும் உண்மையிலேயே காமிக்கிற ஆளாயிருந்தா அரசாங்க பொறுப்பை ராஜினாமா செய்யச் சொல்லுங்க பார்ப்போம். மேயர், துணை மேயர், மண்டலத் தலைவர், பால்வளத் தலைவர்னு ராஜினாமா செஞ்சிருந்தா... நியாயம். மேயர் தேர்தலப்ப எனக்கு சீட் கிடைக்கும்னு நினைச்சேன். காளிமுத்துதான் நின்னாரு. ஆனா நான் சந்தோசமா வேலை செஞ்சேன். கட்சினு இருந்தா நாலு பேரு அமுக்கத்தான் செய்வான். நம்ம திறமையிலதான் எழுந்து நிற்கணும். பொதுவா தி.மு.க. கட்சித் தலைமைக்கு 'காவேரி மணியம் செயல் திறமை இல்லாதவர்'னு ஒரு கருத்து உண்டு. அதனால கூட அவருக்கு சீட்டு தராம போயிருக்க வாய்ப்புண்டு.''

சி.ஐ.டி.யு. மாவட்டச் செயலாளர் க. ஜோதிராம், ''இந்த ராஜினாமா நாடகத்துல கலைஞருக்கு பங்கு உண்டுங்க. மத்த கூட்டணிக் கட்சிகளை திசை திருப்ப காவேரிமணியத்தை பகடைக்காயா ஆக்கிட்டாரு. 'தனக்கே தகராறாம் இதுல தம்பிக்கு பலகாரமாம்'னு திருநாவுக்கரசு, வாழப்பாடி ராமமூர்த்தி பேசாம இருக்க இது ஒரு ராஜதந்திரமுங்க... 71ல எம்.எல்.ஏ.வா இருந்ததோட சரிங்க. அதுக்கப்புறம் காவேரி மணியத்தை தி.மு.க. தலைமை கண்டுக்கவே இல்லை...'' என்றார்.

– குசும்பன்

இதுவரை எதுவும் வாய் திறக்கவில்லை.

'மிசா' காலத்திலேயே சிறைக்குப் போனவர் காவேரி மணியம். மதுரை நகர கழகத் தொண்டர்களிடம் நன்கு அறிமுக மானவர். தலைமை தம்மைத் தொடர்ந்து அலட்சியப்படுத்தி வருவதாக நண்பர் களிடம் வருத்தப்படுகிறார். ம.தி.மு.க.வுக்குச் சென்று வந்த பொன்முத்துவுக்குத் தேர்தல் சீட் கொடுத்தது; மதுரை புறநகர் செய லாளராக இருக்கும் அக்கினி ராஜுவுக்கு ராஜ்யசபா சீட் கொடுத்தது' என தொடர்ந்து மற்றவர்களை ஊக்குவிக்கும் தலைமை தம்மைக் கண்டுகொள்ளாதது ஏன்? என்று அவர் புலம்புவதில் தவறில்லை என்றும் சிலர் கருதுகிறார்கள்.

"இப்போது நியமிக்கப்பட்டுள்ளவர் கள் இரண்டு வருடம்தான் பணியாற்றுவார் கள். முழு பதவிக் காலம் கொண்ட வேகன்ஸி வரும் போது காவேரி மணியம் கவனிக்கப்படுவார்" என்று கலைஞர் கொஞ் சம் 'சாப்ட்' ஆனதின் பேரில் ராஜினாமாக் கள் வாபஸ் பெறப்பட்டன. என்றாலும் கழகக் குடும்பத்தில் அதிருப்திக் குரல்கள் இனி எந்தவிதமான தங்குதடையுமில்லாமல் வெளிப்படும் என்பதையே இந்தச் சம்பவம் சுட்டிக்காட்டுவதாகப் பேசப்படுகிறது. அதுவும் கழக நிர்வாகிகள் தேர்தல் தமிழக மெங்கும் நடக்கின்ற நிலையில் பல்வேறு மட்டங்களில் கசப்புணர்வுகள் வெளிப்படத் துவங்கியிருக்கின்றன.

"தி.மு.க. எடுக்கும் முடிவுகள் எல்லாமே ஜனநாயகத் தோற்றத்துடன் எடுக்கப்படும் சர்வாதிகார முடிவுகள்தான்" என்று சொல் கிறார் ஒரு கழகப் பிரமுகர். செயற்குழு, நிர் வாகக் குழு, பொதுக் குழு என்று எல்லாம் கூடும்; ஆனால் மேலிடத்தில் எடுத்த முடிவு கள் தகவலாகச் சொல்லப்பட்டு அங்கீகாரம் பெற்றதாக அறிவிக்கப்படும். மற்ற கட்சி களோடு ஒப்பிடும்போது இந்த அளவிலா வது ஜனநாயகம் இருக்கிறதே என்று சந் தோஷப்பட வேண்டியதுதான்" என்றார் அவர். கழகத்தைத் தம் கட்டுக்கோப்பில் கலைஞர் வைத்துள்ளதைப் போன்று எதிர் காலத்திலும் உறுதியான தலைமையைக் கழகம் பெறுமா?

அதற்கான முயற்சியில் ஸ்டாலின் இறங்கியிருக்கிறார் என்கிறார்கள் கழகப் பிரமுகர்கள். கட்சித் தேர்தல்களில் தமக்கு நம்பிக்கையானவர்கள் வென்று வர வேண் டும் என்பதில் தீவிர கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறார் அவர். பல மாவட்டங் களில் 'இவர்தான் என் ஆள்' என்று அடை யாளம் காட்டுகிறார். அந்தக் குறிப்பு சொல் லாத செய்தி 'யாரும் அவரை எதிர்த்து வேலை செய்யக் கூடாது' என்பதுதான். கழகம் நிறையவே சவால்களை சந்திக்க வேண்டிய சங்கடத்தில் இருக்கிறது.

— நமது நிருபர்கள்

---

"இந்த அலுவலகத்தில், Y2K- பிரச்னை இல்லை'னு போர்டு வச்சிருக்காங்களே...?"

"இங்கே கம்ப்யூட்டரே இல்லைங்கிறதைத் தான் அப்படி எழுதியிருக்காங்க!"

*சீர்காழி வி.ரேவதி*





"மாப்பிள்ளைப் பையன் நடத்தை யெல்லாம் எப்படி?"

"என்ன அப்படி கேட்டுட்டீங்க? நாலு நாள் முன்னாடிதான் நன்னடத்தையிலே விடுதலை ஆகி இருக்கான்னா பார்த் துக்குங்களேன்...!"

*– கந்தசாமி*



# உலகப் படவிழா!

இப்போது டெல்லியில் தொடங்கியிருக்கும் சர்வதேசத் திரைப்பட விழாவில் கதாநாயக இயக்குநர், ரோபர்ட்டோ ரோஸலினி என்கிற இத்தாலியர்தாம். உலக சினிமா பிரிவில் இடம்பெறும் எழுபது படங்களில் பதின்மூன்று படங்கள் ரோஸலினி இயக்கியவைதான்.

ஓப்பன்சிட்டி, வாயேஜ் இன் இட்டலி, ஸ்ட்ரோம்போலி என்ற இவரது மூன்று படங்கள் உலக யுத்தப் பின்னணி கொண்டவை. ரோஸலினியின் அமர படைப்புகளில் ஒன்று, 'ஜெர்மனி தஇயர் ஜீரோ'. நாஜிக்களின் பிடியில் சிக்கியுள்ள ஜெர்மனியில், ஹிட்லரின் உபதேசங்களெல்லாம் வேதமாகக் கருதப்படுகின்றன. அந்தச் சூழ்நிலையில் தத்துவவாதி நீட்சேயின் கருத்துக்களைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு, தனது சர்வாதிகார ஆட்சியை நியாயப்படுத்துகிறான் ஹிட்லர். இதுதான் கதை என்றாலும் கதை ஒரு சிறுவனைச் சுற்றியே நடப்பதாகக் காட்டப்படுவதால் கவித்துவமாகிறது.

ஒரு சிறுவன். அவனுக்கு அக்கா, அண்ணன், தம்பி, அப்பா, அம்மா என்று ஐந்து பேர் கொண்ட குடும்பம் அச் சிறுவனுடையது. அண்ணன் தலைமறைவாக இருப்பதால் ரேஷன் அட்டையில் அவன் பெயரைக் காட்ட முடியாது. எனவே, ரொட்டிக்கும் வெண்ணெய்க்கும் மணிக்கணக்கில் ரேஷன் கியூவில் நின்று வாங்கி வரப்படும் நான்கு பேருக்கான ரேஷனில் ஐந்து பேர் சாப்பிட வேண்டிய நிலை. இதைப் படம்பிடித்திருக்கும் கேமரா, பிரமிப்பைத் தருகிறது.

இந்த நிலையில் நோய்ப் படுக்கையில் கிடக்கும் அப்பாவால் குடும்பத்துக்கோ சமூகத்துக்கோ ஒரு பயனும் இல்லையென்றும் அப்படிப்பட்டவர்களைக் கொன்று விடுவதுதான் பிறரின் சமூகக் கடமையென்றும் அந்தச் சிறுவனுக்குப் போதனை செய்கிறார் நாஜி ஆசிரியர். அதனால் மூளைச் சலவை செய்யப்பட்ட சிறுவன், தனது தந்தைக்கு விஷம் கொடுத்து விடுகிறான். பிறகு மனச்சாட்சி உறுத்த, ஓர் உயர் மாடிக் கட்டடத்தின் உச்சியில் நின்று கொண்டு தவிக்கிறான் சிறுவன். இதுதான் கதை.

ஒரு சிறுவனைச் சுற்றிய ஒரு கதையில் கூட அவன் சார்ந்த நாட்டின் அரசியல் அவலத்தையும் அதனால் ஏற்படும் சமூக பாதிப்புகளையும் இத்தனை அழகாகச் சொல்ல முடியும் என்று நிரூபித்துக் காட்டி, விரல் விட்டு எண்ணக்கூடிய உலக இயக்குநர்கள் வரிசையில் கம்பீரமாக இடம்பிடித்து விடுகிறார் ரோஸலினி.



• கனூரு ஹெக்கடிதி

மேலும் பல சிறப்பான படங்களும் உண்டு. Boys don't cry என்ற அமெரிக்கப் படம் அற்புதம். ஒரு சிறுமி, தான் ஆணாக வேண்டும் என்கிற ஆசையில் செக்ஸ் மாற்ற அறுவைச் சிகிச்சை செய்து கொள்கிறாள். பிறகுதான், தான் பெண்ணாக இல்லாததால் இழந்த பல விஷயங்களை உணர்கிறாள். இதை அற்புதமாகச் சொல்லியிருக்கிறார் டைரக்டர் கிம்பெர்லே பெய்ர்சின்.

கிரிஷ் கர்னார்டின் கன்னடப் படமான 'கனூரு ஹெக்கடிதி'யில் பெண்கள் தங்கள் அடையாளங்களைத் தேடும் விதத்தைப் பிரமாதமாகச் சொல்லியிருக்கிறார்.

அது சரி, தமிழில் இதுபோன்ற படங்கள் எப்போது வரும்?

— வெங்கட்



— பின்னணிச் செய்திகள்!

# தப்பி வந்த கர்மாப்பா!

இப்போது சீனாவிலிருந்து டெல்லிக்குத் தப்பியோடி வந்த கர்மாப்பா என்பவர் யார்? ஏன் தப்பியோடி வந்தார்? இதன் பின்னணி என்ன?

ஆங்கிலேயர்களின் ஆதிக்கம் அகன்ற பிறகும் சீனாவின் ஆதிக்கத்திலேயே உழல வேண்டிய நிலை திபேத்துக்கு. சீனாவுடன் நேரு செய்து கொண்ட ஒப்பந்தம் சீனாவின் திபேத்திய ஆக்ரமிப்பை அங்கீகரித்ததோடு, இந்தியாவுக்கு ஆங்கிலேயர்கள் வழங்கிய திபேத்திய பகுதிகளையும் சீனாவுக்கே விட்டுக் கொடுத்து விட்டது!

அதைத் தொடர்ந்து பௌத்த கர்மாப்பா லாமா வழித் தலைமைக்கு யாரை நியமிப்பது என்பதில் சீனா தலையிட ஆரம்பித்தது. தான் நியமிப்பவரையே அங்கீகரிக்க வேண்டுமென்று வற்புறுத்தவும் செய்கிறது. இந்திய-சீன நல்லுறவு கெட்டுவிடக் கூடாது என்பதால் இந்தியா இதில் தலையிடுவதில்லை.

இதில் இந்திய அங்கீகாரத்துக்கு என்ன முக்கியத்துவம் இருக்கிறது என்கிற கேள்வி எழலாம். நமது சிக்கிம் மாநிலத்திலுள்ள ரும்டெக் பௌத்தாலயத்தில் ஒரு கறுப்புத் தொப்பி இருக்கிறது. இது பெண் கடவுளர்களின் தலை முடியிலிருந்து நெய்யப்பட்டதாக பௌத்தர்கள் நம்புகிறார்கள். பௌத்த தலைமை அதிகார பீடத்தின் ஒரு குறியீடாகவும் இதைக் கருதுகிறார்கள். அதனால் சிக்கிமிலுள்ள பௌத்தர்கள்-இந்த கறுப்புத் தொப்பி மத அதிகார பீடத்தின் கீழ் உள்ளவர்கள்-அங்கீகாரமின்றி, சீனா நியமிக்கும் கர்மாப்பாக்களுக்கு மரியாதை கிடையாது. அதனால்தான் சீனாவுக்கு இவ்விஷயத்தில் இந்தியாவின் அங்கீகாரம் தேவைப்படுகிறது.

ஏற்கெனவே தலாய்லாமா ஒரு கர்மாப்பாவைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். பஞ்சன் லாமா ஒரு கர்மாப்பாவைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். இந்த இரண்டு கர்மாப்பாக்களும் இந்தியாவின் ஆதரவு வேண்டி, சிம்லா மற்றும் இமாசலப்பிரதேச பௌத்த மடாலயங்களில் இருக்கிறார்கள்.

இப்போது சீனாவும் ஒரு கர்மாப்பாவைத் தேர்ந்தெடுக்கவே, திபேத்திலுள்ள காக்யுபா வழி பௌத்த தலைமைக்கு மூன்று கர்மாப்பாக்கள்!

எல்லாம் சரி, சீனா தேர்ந்தெடுத்த கர்மாப்பா இந்தியாவுக்குத் தப்பிவர என்ன காரணம்? அப்படி தப்பியோடி வந்தவருக்கு மத அங்கீகாரம் அளித்து அடைக்கலம் தரக் கூடாது என்று சீனா மிரட்டுவதற்கும் என்ன காரணம்?

இதுதான் புதிராக உள்ளது. ஒருவேளை, சீனாவே இந்த கர்மாப்பாவைத் தப்ப வைத்து இந்தியாவுக்கு அனுப்பி நம்மை ஆழம் பார்க்கிறதோ என்று நமது ராஜதந்திரிகள் சந்தேகப்படுகிறார்கள். ஆனால் சீனாவோ இவர் தப்பி வருவதற்கு இந்தியாதான் உதவி செய்திருக்கிறது என்று தாம் எண்ணுவது போன்ற வதந்தியைப் பரப்பி விட்டிருக்கிறது!

இந்நிலையில் இந்தியாவின் நிலை என்ன? தப்பி வந்த கர்மாப்பாவுக்கு அரசியல் அங்கீகாரமோ மத அங்கீகாரமோ அளிக்காமல், வெறும் அகதி என்கிற அந்தஸ்து மட்டுமே அளிக்கும் என்று தெரிகிறது. இதனால், இந்தியா தனது கைக்கு வந்த பந்தை சாமர்த்தியமாகச் சீனாவின் மைதானத்துக்கே திருப்பியனுப்பி விடும் என்கிறார்கள்.

— வெங்கட்

## ரூ.510/- விலை மதிப்புள்ள இங்கிலீஷ் கோர்ஸ் ரூ.150/- மட்டுமே!

3 டிவிஷன்களின் பேக்கேஜ்

| டிவிஷன்-1 | டிவிஷன்-2 | டிவிஷன்-3 | ரூ. |
|---|---|---|---|
| ரூ. 130/- | ரூ. 170/- | ரூ. 210/- | 510/- |

**டிவிஷன் -1** ABCD முதற்கொண்டு இங்கிலீஷில் படிக்கவும் எழுதவும் கற்றுத்தந்து ஒவ்வொருவருக்கும் தேவையான நிலையில் ஸ்டாண்டர்டு இங்கிலீஷ் கற்பிக்கப்படுகிறது. இந்த கோர்ஸின் ஃபீஸ் ரூ. 130/-

**டிவிஷன் -2** பிழைகள் இன்றி ஆங்கிலம் எழுத தேவையான இங்கிலீஷ் இலக்கணம் முறையாக, கலை சூத்திரங்களால், எளிமையாக கற்பிக்கப்படுகிறது. இந்த கோர்ஸின் ஃபீஸ் ரூ. 170/-

**டிவிஷன் -3** வெகு சரளமாக எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் தயாராகவும், பிழைகளின்றி, மிகவும் சரளமாக பேச கற்பிக்கப்படுகிறது. இந்த கோர்ஸின் ஃபீஸ் ரூ. 210/-

## 12 மொழிகளின் கோர்ஸ்கள்

(12 இன் 1 பாக்கெட் சைசில்) ஃப்ரீ

1. ஹிந்தி ஸ்பீக்கிங் கோர்ஸ் 2. தெலுங்கு ஸ்பீக்கிங் கோர்ஸ் 3. கன்னடம் ஸ்பீக்கிங் கோர்ஸ் 4. மலையாளம் ஸ்பீக்கிங் கோர்ஸ் 5. பெங்காலி ஸ்பீக்கிங் கோர்ஸ் 6. மராத்தி ஸ்பீக்கிங் கோர்ஸ் 7. பஞ்சாபி ஸ்பீக்கிங் கோர்ஸ் 8. குஜராத்தி ஸ்பீக்கிங் கோர்ஸ் 9. அரபிக் ஸ்பீக்கிங் கோர்ஸ் 10. உருது ஸ்பீக்கிங் கோர்ஸ் 11. ஓரியா ஸ்பீக்கிங் கோர்ஸ் 12. சான்ஸ்கிரிட் ஸ்பீக்கிங் கோர்ஸ்

## 8 ஃபென்டாஸ்டிக் கிஃப்ட் கோர்ஸ்கள்

(8 இன் 1 பாக்கெட் சைசில்) ஃப்ரீ

1. ஈஸி மணி எர்னிங் கோர்ஸ் (சுலபமாக பணம் சம்பாதித்தல்)
2. சீக்ரெட் மேஜிக் கோர்ஸ் (நீங்களும் மேஜிக் செய்யலாம்)
3. மெண்டல் ஸ்மார்ட்னெஸ் கோர்ஸ் (ஆள்களின் மனநிலையை அறிவதற்கு)
4. பியூட்டி ட்ரீட்மெண்ட் கோர்ஸ் (அழகாகத் தோற்றமளிப்பது எப்படி)
5. சக்சஸ்புல் கோம்பிடேஷன் கோர்ஸ் (தேர்வுகளுக்கு தயார் செய்யும் கோர்ஸ்)
6. யோகா கோர்ஸ் (வெவ்வேறு யோகாசனங்களின் விளக்கங்கள்)
7. "பாமிஸ்ட்ரி" கோர்ஸ் (உங்களது கைரேகை கூறும் எதிர்காலம்)
8. கிச்சன் ட்ரீட்மெண்ட் கோர்ஸ் (சமையலறையில் பெண்களின் வைத்தியம்)

## 4 கோர்ஸ் கிஃப்ட் புத்தகங்கள்

(4 இன் 1 பாக்கெட் சைசில்) ஃப்ரீ

1. வர்டு பவர் (ஆங்கில சொற்களின் அற்புத சக்தி)
2. லெட்டர் ரைட்டிங் பிராக்டீஸ் (இங்கிலீஷில் கடிதம் எழுதும் முறை)
3. அப்ரிவேஷன்ஸ் டிக்ஷனரி (டெக்னிகல் சொற்களின் டிக்ஷனரி)
4. வெர்ப்ஸ் டிக்ஷனரி (வினை சொற்கள்-அதன் ரூபங்கள்)

## புத்தாண்டுப்பரிசு
## ஒரு டைரி இலவசம்!
## + 24 மினி கோர்ஸ்கள்




**இக்கூப்பனை பூர்த்தி செய்து உடனே அனுப்பவும்**

**STUDENTS' ENGLISH INSTITUTE**

15/1, Parthasarathipuram' Extn. T. Nagar, Chennai - 600 017.

ஐயா, டிவிஷன் 1, டிவிஷன் 2, டிவிஷன் 3, (மொத்தம் 3 டிவிஷன்கள்) தற்பொழுதைய ரூ. 510/- விலை மதிப்புள்ள இங்கிலீஷ் கோர்ஸ் இலவச பாக்கெட்சைஸ் புத்தகங்கள் அனைத்தும் (8+12+4) மற்றும், புது வருட டைரியையும், அனைத்து புத்தகங்களையும் சேர்த்துரூ. 150/-க்கான வி.பி.பி அனுப்பவும். போஸ்ட்மேனிடம் பணம் தந்து எனது பேக்கேஜை பெற்றுக்கொள்கிறேன்.

639

Name ........................................................

Address ........................................................

........................................................

........................................Pin Code







காட்டுவளவு வல்வெட்டித்துறையைச் சேர்ந்த திரு **கெ. வைத்தீஸ்வரன், சாந்தமணி** தம்பதிகளின் புதல்வன் **வாகீசன்** B.Eng.Hon(LONDON)னுக்கும், பருத்தித் துறையைச் சேர்ந்த **செல்லையா கமலாதேவி** தம்பதிகளின் புதல்வி **சுமதிக்கும்** சங்கம் ஹோட்டல் திருச்சியில் **22.10.99** அன்று திருமணம் இனிதே நடந்தேறியது.

**வாழ்க மணமக்கள்!**

# மேடைப் பேச்சில் வெற்றிடம்!



**'சங்கொலி' (ம.தி.மு.க)பத்திரிகையின் ஆசிரியர் திருநாவுக்கரசு மறைந்த நாவலர் நெடுஞ்செழியனோடு நெருக்கமாகப் பழகியவர்...**

"கடந்த நாற்பது வருட காலத்திற்கும் மேலாக அவரிடம் எனக்குத் தொடர்பு உண்டு. அவரது அரசியல் நிலை எப்படி மாறுபட்டிருப்பினும் எங்கள் நட்பு மாறாது இருந்து வந்திருக்கிறது. மாதம் ஒருமுறை அவரைச் சந்தித்து நாட்டு நடப்புகளைப் பற்றியும் இலக்கியம் பற்றியும் பேசி மகிழ்வேன்.

"அவர் ஒரு நல்ல மேடைப் பேச்சாளர் என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒன்றுதான். ஆனால் அண்ணாமலையில் படிக்கும்போது பேராசிரியர் அன்பழகனின் மேடைப் பேச்சில் கவரப்பட்டுத்தான் நாவலரும் முதல் முதலாக மேடையேறினார். அவரது மேடைப் பேச்சைக் கேட்பவர்கள் தமிழ் வகுப்பில் இருக்கும் அனுபவத்தைப் பெறுவார்கள். ஒருமுறை குடிசைப் பகுதியில் கட்சிக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த வட்டச் செயலாளர் நாவலரிடம் 'ஐயா... நீங்க ரொம்ப இலக்கியம் பேசாம, கொஞ்சம் உள்ளூர் பாலிடிக்ஸ் பேசணும்... இல்லாவிடில் எடுபடாது' என்றார். ஆனால் நாவலர் அந்தக் கூட்டத்தில் பாமரர்களுக்கும் புரியும்விதமாக திருக்குறளின் சிறப்புகளை எடுத்துரைத்தார். கூட்டம் ஆர்வத்துடன் கேட்டது. 'எந்த ஒரு விஷயத்தையும் சொல்லும்விதத்தில் சொன்னால் எல்லாத் தரப்பு மக்களையும் கருத்துக்கள் சென்றடையும்' என்று அவ்வப்போது சொல்லுவார். திராவிட இயக்க வரலாறு பாகம் ஒன்றை எழுதி வெளியிட்டவர், பாகம் இரண்டை எழுதிக் கொண்டிருந்தார். அதை முடிப்பதற்குள் மரணம் அவரை தழுவிக் கொண்டு விட்டது.

"**1957**-ல் நடந்த திருச்சி மாநாட்டில், 'தம்பி வா... தலைமை ஏற்க வா' என்று அண்ணாவால் அழைக்கப்பட்டவரல்லவா! அதனால் கட்சிக்காரர்கள் தம்மை எந்தச் சூழலிலும் கைவிட மாட்டார்கள் என்று நம்பினார். முதல் ஏமாற்றம் 1969-ல் வந்தது. கட்சிக்காரர்கள் தம்மைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று அடிக்கடி சொன்னதுண்டு. கலைஞர், எம்.ஜி.ஆர்., ஜெயலலிதா ஆகியோருடன் இரண்டாம் நிலையில் பணியாற்றியதால் 'ரப்பர் ஸ்டாம்ப்' என்று அரசியலில் விமர்சிக்கப்பட்டாலும் அதைப் பற்றி பெரிதாக வருந்தியதில்லை அவர். 'எந்த கையெழுத்துப் போட்டாலும் ரப்பர் ஸ்டாம்ப் போட்டால்தான் அதற்கு மதிப்பு' என்று எதிரடி கொடுத்தவர் அவர். மனத்தில் பட்டதை வெளிப்படையாகப் பேசி, சிக்கல்களில் மாட்டியிருக்கிறார். அதன் காரணமாகக் கடந்த சில வருடங்களாகக் கொஞ்சம் உள்முகமாகவே செயல்பட்டார். சிபாரிசு வேண்டிவரும் கட்சிக்காரர்களுக்கு சகட்டுமேனிக்கு ப்ராமிஸ் செய்ய மாட்டார். 'இது முடியும்.... முடியாது' என்று வருபவர்களிடம் மனம் புண்படாமல் சொல்வார். ஆட்களை அநாவசியமாக அலைய விட மாட்டார். அவரது மறைவின் காரணமாக மேடைப் பேச்சில் ஏற்பட்டுள்ள வெற்றிடம் நிரப்பப் படுமா என்பது சந்தேகமே!"

தொகுப்பு : **ப்ரியன்**
படம்: **சௌந்தர்ராஜன்**

# புத்தாண்டுக் குழந்தைகள் எப்படி இருப்பார்கள்?

**இங்குள்ள எல்லாக் குழந்தைகளும் 1.1.2000 – நள்ளிரவு 00.00 மணிக்குப் பிறந்த இந்தியக் குழந்தைகள்தான். இரண்டாயிரமாவது ஆண்டில் பிறந்ததால் இவர்களுக்குச் சிறப்புப் பலன்கள் ஏதும் உண்டா? ஜோதிடர் கே. பார்த்தசாரதி கூறுகிறார்.**

முதல் தேதியில் பிறந்த குழந்தைகளின் கிரகம், சூரியன். வசீகரமான தோற்றம், அடுத்தவரைக் கவர்ந்திழுக்கும் சாதுர்யம் – இரண்டும் இதில் பிறந்தவர்களின் சொத்து. மற்றவர்களிடமிருந்து இந்தக் குழந்தைகள் பெரிதும் மாறுபட்டுக் காணப்படும் விஷயம் – ஆளுமை சம்பந்தப்பட்டதுதான்.

தன்னை எப்போதும் முதன்மையானவராக, தலைமைதாங்கும் வல்லமை பொருந்தியவராக எண்ணுவதும் அதற்கேற்பவே நடந்து கொள்வதுமான இயல்பு. இந்த முதல் தேதிப் பிறவிகளுக்கு உண்டு. பிறந்த தேதியின் கூட்டுத் தொகை '1' என அமையும் தேதிகளில் பிறந்தோருக்கும் இதே இயல்புதான். உதாரணம் – இந்திராகாந்தி (பிறந்த தேதி – 19) டயானா (10) அன்னிபெசன்ட் (1).





இரண்டாயிரமாண்டு, சுவாதி நட்சத்திரத்தில்தான் உதித்தது.

நட்சத்திரங்களிலேயே சுவாதிக்கு ஒரு சிறப்பிடம் உண்டு. சுவாதியில் பிறக்கும் ஆணையோ, பெண்ணையோ, பொருத்தம் கூடப் பார்க்காமல் திருமணம் செய்யலாம் என்பார்கள்.

அத்தகைய சுவாதியில் பிறந்திருக்கிற 21–ம் நூற்றாண்டுக் குழந்தைகளுக்குப் பல

சிறப்பம்சங்கள் உண்டு. பெண் குழந்தையெனில், சமையல் கலையில் தேர்ந்த வல்லுனராக விளங்கக்கூடும். ஆன்மிக ஈடுபாடு இவர்களுக்கு அதிகமாயிருக்கும்.

இந்தப் புத்தாண்டு சனிக்கிழமையன்று பிறந்திருப்பதும் ஒரு விசேஷம். 'சனி கொடுத்தால் எவர் தடுப்பார்?' என்பார்கள். அப்படி கொட்டிக் கொடுக்கிறவன் சனி. குருவும் சனியும் மேஷ ராசியில் சந்திக்கிற சுபவேளையில் பிறந்த புத்தாண்டுக் குழந்தைகளின் ஆற்றலை அளவிட முடியாது. எந்தக் காரியத்தையும் துணிந்து, சிறப்பாக முடித்துத் தீரும் வல்லமைமிக்கவர்களாக விளங்குவார்கள். எதிர்ப்புகள் இவர்களுக்குத் தூசு. சாதனையை மட்டுமே குறியாகக் கொள்ளப் போகும் இவர்கள் எதிர்காலத்தில் பல செயற்கரிய செயல்கள் புரியப் போவது உறுதி.

ஆனால், சனி வக்கிரமடைந்து, நீச்சமடைந்து காணப்படுவதில் வேறுவிதமான ஒரு பலனும் உண்டு. அதாவது, வக்ர சனியின் போது



பிறப்பவர்களில் சிலர் தத்துவவாதிகளாகவோ, துறவு நிலைக்கோ போகிற சாத்தியமும் உண்டு. எந்த நிலையானாலும் உச்சநிலைதான் என்பது விசேஷம்.

பொதுவாக நடுநிசியில் பிறக்கிற குழந்தைகள் அறிவாற்றல்மிக்கவர்களாயிருப்பாரென்பது சோதிடக் கணிப்பு. அதே சமயம் இவர்களுக்கு உஷ்ண சம்பந்தமான உபாதைகள், வயிற்று உபாதைகள், தோல் வியாதிகள், கண் பாதிப்பு போன்றவற்றுள் ஏதாவது ஏற்படும். பூரண ஆயுள் உண்டு. போற்றுதலுக்குரிய வாழ்வு வாழ்வார்களென்பது திண்ணம். ●

# ஆல்ரவுண்டர் அட்சயா!

**பாண்ட்ஸ் நிறுவனம் நடத்திய 'விமன் அஃப் டுமாரோ' போட்டியில், தமிழகத்திலிருந்து தேர்தெடுக்கப்பட்ட அட்சயாவைச் சந்தித்தோம்:**

பரிசுகள் வாங்குவதே சிலருக்கு ராசி போல. அட்சயாவுக்கு 97-98 ஆம் வருட அவுட்ஸ்டான்டிங் ஸ்டூடண்ட் என்று, பி.காம் பாஸ் செய்தவுடன் எதிராஜ் கல்லூரியில் ஒரு பரிசு! கடைசி ஒரு வருடத்தில் மட்டுமே ஏராளமான கல்சுரல் நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு கலக்கியதில் 50க்கும் மேற்பட்ட பரிசுகளைக் குவித்திருந்ததால், 'மிகச் சிறந்த மாணவி' விருதை அட்சயாவைத் தவிர கல்லூரியில் வேறு யாருக்குக் கொடுக்க முடியும்?

திரைப்பட இசை, லைட் மியூசிக், கிளாசிகல் கர்நாடிக் என்று கல்லூரியில் நடந்த அத்தனை போட்டிகளிலும் பரிசுகள். இன்டர் - காலேஜியேட் போட்டிகளிலும், ஸ்டெல்லா மாரிஸ், எஸ்.ஐ.ஈ.டி. டபிள்யூ.ஸி.ஸி. தவிர, ஐ.ஐ.டி 'சாரங்' நிகழ்ச்சியில் இந்தியா முழுதிலும் இருந்து வந்திருந்த அத்தனை மாணவ - மாணவிகளிடையே



போட்டி போட்டு, 'அத்தனை போட்டிகளிலும் பரிசுகள்!

பள்ளியில் படிக்கிற காலத்திலிருந்தே பரிசுகள் வாங்குகிற பழக்கம்! மாத்ஸ் – காமர்ஸ் இரண்டிலும் நூற்றுக்கு நூறு வாங்கி, ஸ்கூல் டாப்பர் பரிசு வாங்கியது வரை ஒரு குண்டு போட்டோ ஆல்பம். (நாவலரிடமிருந்துகூட ஒரு பரிசு!)

ஒரு தடி ஃபைல் நிறைய சர்ட்டிஃபிகேட்டுகள்தாம். பள்ளிக்கூடப் போட்டிகளிலிருந்து பாண்ட்ஸ் போட்டி வரை, தேதி வாரியாக மிக ஒழுங்காக பைல் செய்திருந்ததை, தூக்க மாட்டாமல் தூக்கி வந்து காண்பித்தார்.

பின்னால் திரும்பினால், ஷோகேஸ் முழுக்க பரிசுக் கோப்பைகள். 'கன்கிராஜுலேஷன்ஸ்' என்று கொட்டை எழுத்தில், ரோஸ் நிறத்தில், ரூ. 50,000க்கான பாண்ட்ஸின் டம்மி காசோலை மகுடம் போலத் தெரிந்தது. (இன்னும் ஒரிஜனல் செக் வரவில்லையாம்!)

மியூசிக் அகடமி, மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ், நாரத கான சபா, இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ், தமிழிசைச் சங்கம், டாக் அகடமி என்று எல்லா பிரபல சபாக்கள் நடத்திய வருடாந்தர போட்டிகள் அத்தனையிலும் பரிசுகள், பதக்கங்கள், பாராட்டிதழ்கள். அது இன்னொரு தடி ஃபைல்!

(தினசரி வேறு எக்சர்சைஸ் எதுவும் வேண்டாம். இந்த பைல்களையும், ஆல்பங்களையும் பத்துத் தடவை தூக்கிக் கொண்டு வந்து, மறுபடி எடுத்து வைத்தாலே போதும்!)




"ஆல் இந்தியா ரேடியோவை விட்டுட்டீங்களே? அங்கேயிருந்து எதுவும் பரிசு தட்டிக்கொண்டு வரலியா?"

"அங்கே பாடாமலா? யூத் புரோகிராமில் பாடி, பரிசுகள் நிறைய வாங்கியதும், ஆடிஷன் இல்லாமலே நேரடியா பி கிரேடுக்கு உசத்திட்டாங்க!" (எதானும் போட்டிக்குப் போகிறவர்கள் இனி அட்சயாவிடம் விபூதி மந்திரித்து வாங்கிக் கொண்டு போகலாம் போலிருக்கு!)

**"பா**ண்ட்ஸில் என்ன போட்டி வைத்தார்கள்? எப்படி அதில் ஃபைனல் செலக்ஷன் ஆகி 'பாண்ட்ஸின் நாளைய உலகப் பெண்' ஆனீர்கள்?"

"16லிருந்து 22 வயதுக்குள்ளான பெண்களுக்காக ஒரு போட்டியை மார்ச்சில் பாண்ட்ஸ் அறிவித்திருந்தது. 'பாண்ட்ஸ் விமன் அஃப் டுமாரோ' என்ற தலைப்பில், 'உங்களுக்கு ஒரு கனவு இருந்தால் அதை நனவாக்கிக் காட்டுங்கள்' என்று சவால் விடுகிற மாதிரி இருந்தது விளம்பரம். டான்ஸிங், மியூசிக், பெயின்டிங், கம்ப்யூடர், அகடமிக் என்று எதில் வேண்டுமானாலும் நீங்கள் ஒரு

சாதனையாளராக இருக்க வேண்டும் என்பதுதான் கண்டிஷன். நானா விடுவேன்? விண்ணப்பித்தேன். அப்புறம் மறந்தே விட்டேன்."

"நிச்சயம் நமக்குத்தான் பரிசு என்ற நம்பிக்கை. ரைட்?"

உதட்டை அழுத்திச் சிரித்தார் அட்சயா.

"செப்டம்பர் மாதம், பம்பாயிலிருந்து அபர்ணா என்பவர் பாண்ட்ஸிலிருந்து போன் செய்து, 'கன்கிராட்ஸ். ஷார்ட்லிஸ்ட் பண்ணி விட்டோம். யு ஆர் செலக்டட்' என்று சந்தோஷத்துடன் சொல்லிவிட்டு, ஒரு குட்டி இன்டர்வியூவே போனில் நடத்தி விட்டார்."

(ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட இளம் பெண்கள் இந்தியா முழுதுமிருந்து விண்ணப்பித்திருந்தார்களாம்.)

"அப்புறம் திடீரென்று டிசம்பர் 14ஆம் தேதி ஒரு கடிதம் வந்தது. பம்பாய்க்கு வந்து சென்னை திரும்ப விமான டிக்கட்டுகளுடன். 19, 20 தேதிகளில் ஒரு நேரடி தேர்வு என்றார்கள். ராஜஸ்தானிலிருந்து ஒரு ஸ்போர்ட்ஸ் பெண். ஆந்திராவிலிருந்து பூர்ணி என்று ஒரு மெடிகல் மாணவி. கேரளாவிலிருந்து ஷில்பா. ஃபேஷன் டிசைனிங் தேறிய ஒரு டெல்லி கேர்ல். டென்ட்டிஸ்ட்ரி (பல் வைத்தியம்) படிக்கிற பூனா பெண் பூர்வா. கிராமியக் கலைகளில் தேறிய ஒரு ப்யூட்டீஷியன் (இரண்டுக்கும் என்ன சம்பந்தம்?). தமிழ்நாட்டிலிருந்து நான் மட்டும். நாங்கள்தான் ஃபைனலிஸ்ட்டுகள்.

"ஹோட்டல் சென்ட்டாரில் எங்களைத் தங்க வைத்திருந்தார்கள். அங்கேதான் தேர்வும் நடந்தது. Zee Tv ஓமங் குமார்தான் கேள்விகள் கேட்டார். மூவி காமிரா முன் பேசச் சொன்னார்கள். அது பின்னால் இருந்த திரையில் ஒளிபரப்பாயிற்று. உங்கள் லட்சியம் என்ன, சாதனை என்ன என்று மறுபடி ஒரு பிடி பிடித்தார்கள். மறுநாள் 20ஆம் தேதி தேர்வு முடிவுகள் அறிவித்தார்கள். 'உமன் அஃப் த மிலெனியம்' டென்ட்டிஸ்ட்ரி மாணவி பூர்வா. 'பாண்ட்ஸ் விமன் அஃப் டுமாரோ' நாங்கள்! எல்லோருக்கும் நினைவுப் பரிசும் மதியச் சாப்பாடும் கொடுத்தார்கள்!"

"ஜட்ஜுகள் யார் யார்?"

"நான் கேட்கவில்லை. ஆனால் ஒருவர் மிஸஸ் ஷா என்றார்கள். மற்ற இருவரும் இந்தி சின்னத்திரை நட்சத்திரங்கள்"

"என்ன கேட்டார்கள்?"

"மியூசிக்தானே உன் ஏரியா? அப்படியானால் ஒரு பாட்டுப் பாடு என்றார்கள் முதலில். ஒரு இந்தி பஜன் பாடினேன். 'ஒண்டர்ஃபுல். நன்றாகப் பாடினே' என்று பாராட்டினார்கள்."

"அவ்வளவுதானா?"

"ஒரு வெளிநாட்டில் பாடப் போகிறீர்கள். உங்களுக்கு முன்னால் ஒரு ராக் அன்ட் ரோல் நிகழ்ச்சி நடந்து எல்லாரையும் அசத்தியிருக்காங்க. நீங்க இந்தியாவிலிருந்து கிளாசிகல் பாடப் போறீங்க. கேட்கப் பொறுமை இல்லாம, கூச்சல் போட்டு பாடவே விடாம, இக்கட்டான ஒரு டைட் கார்னர் சிசுவேஷன் வந்தா எப்படி ஃபேஸ் பண்ணுவீங்க? – இது அடுத்த கேள்வி. 'நான் பயந்துட மாட்டேன். ராக் மியூசிக் மாதிரி எங்க மியூசிக் இரைச்சலா இருக்காது. மெலடி இருக்கும். மனசுக்கு அமைதியும் நிம்மதியும் இருக்கும். நினைச்சு நினைச்சுப் பார்த்து சந்தோஷப் படற மாதிரி இருக்கும். முதலில் கேளுங்க. அப்புறம் டிசைட் பண்ணுங்கன்னு தைரியமா ஒரு போடு போட்டுவேன். அப்புறம் அவங்க அதைக் கேட்டு அப்ரிஷியேட் பண்ணாமயா போயிடுவாங்க?'ன்னேன். 'எக்ஸலன்ட்' என்றார்கள்."

"அட, அப்புறம்?"

# குடகு மாநில போராட்டம்!

**கூர்க் என்பபடும் குடகு மாவட்டம். 1954–ஆம் ஆண்டு வரை 24 எம்.எல்.ஏக்களுடன் கூடிய சட்டசபையுடன் தனி மாநிலமாகச் செயல்பட்டு வந்த குடகை, பலத்த எதிர்பார்ப்புகளுக்கிடையே பழைய மைசூர் மாநிலத்துடன் இணைத்தனர். கூடவே அந்த மாநிலத்தின் தனித்தன்மை பாதிக்காத வகையில் எல்லா வசதிகளும் செய்து தரப்படும் – முன்னுரிமை அளிக்கப்படுமென்றும் உறுதிமொழி அளிக்கப்பட்டது. ஆனால் அன்று தனி மாநிலமாக இருந்த குடகு, இன்று இந்தியாவிலேயே தனக்கென்று ஒரு எம்.பி.யை தேர்ந்தெடுத்துக் கொள்ள வழியின்றி மங்களூர் தொகுதியுடன் இணைக்கப்பட்டுள்ளது. அதனால் தாங்கள் இப்போது பலவகைகளிலும் பிற்படுத்தப் பட்டுள்ளதாகக் கருதும் குடகு மக்கள், தங்களுடைய கோரிக்கைகளை வலியுறுத்த**

குடகு ராஜ்ய முக்தி மோர்ச்சா (KRMM) என்றொரு அமைப்பைத் தொடங்கியுள்ளனர்.

'நூறு மைல்களுக்கப்பால் உள்ள பெங்களூருக்குக் குடிநீர் வழங்கும் பொருட்டு இங்கு உற்பத்தியாகும் காவிரி நீரைக் கொண்டு செல்லத் திட்டமிட்டவர்கள் கோடை காலத்தில் இங்கு நிலவும் கடும் தண்ணீர் பஞ்சத்தைப் பற்றி கவலைப்படுவதே இல்லை. பம்ப்செட் அமைத்துக் கொள்ளலாமென்றால் மின்சார வசதி கிடையாது. டீசல் ஜெனரேட்டரைத்தான் பயன்படுத்த வேண்டும்' என்று குமுறுகிறார்கள் குடகு மக்கள்.

''குடகு மண்ணில் குஷால் நகர் அருகில் அமைக்கப்பட்டுள்ள ஹாரங்கி அணைக்கட்டு தண்ணீர் முழுவதும் மைசூருக்கே பயன்படுத்தப்பட்டு வருகிறது. அதிலும் எங்களுக்குப் பங்கில்லை. பல தலைமுறைகளாக இங்குள்ள மாணவர்கள் உயர் படிப்பு படிக்க நல்ல கல்லூரிகள் கிடையாது. மைசூர், மங்களூர் அல்லது பெங்களூர்தான் போக வேண்டும். சமீபத்தில் சில தனியார் கல்லூரிகள் துவங்கப்பட்டிருக்கிறதே தவிர அரசாங்க கல்லூரிகள் இல்லை'' என்கிறார்கள். எல்லாவற்றையும்விட மாஜி ராணுவ வீரர்களுக்கு (இங்குள்ள குடும்பங்களிலிருந்து சராசரியாக ஒருவராவது ராணுவ சேவைக்குச் சென்றிருப்பார்கள் என்பது இந்த மக்களின் சிறப்பு) வேலையோ வசதியையோ ஏற்படுத்தித் தருவதில்லை என்பது இங்குள்ளவர்களின் முக்கிய கோரிக்கையாகும்.



— மகேந்திரன்

"கிளாசிகல் மியூசிக்கை எப்படி மாஸ் லெவலுக்கு எடுத்துட்டுப் போவே? அது ரொம்ப டெக்னிகலா இருக்குன்னு சொல்றாங்களே?-ன்னு மூணாவது கேள்வி. கிளாசிகல் மியூசிக் பத்தி அப்படி ஒரு தப்பான அபிப்ராயம் இருக்குன்னு சொல்லிட்டு, அதுதான் base. அதுல நல்ல ஃபைனர் எலிமென்ட்ஸ் எல்லாம் இருக்கு. அதைப் புரிய வைத்தால் அப்ரிஷியேட் பண்ணுவாங்க. பாடற ராகம், பாட்டோட அர்த்தம் எல்லாத்தையும் சுருக்கமா, போர் அடிக்காம சொல்லிட்டுப் பாட்டைப் பாடிக் காட்டினா நிச்சயம் நல்லா புரிஞ்சுக்கிட்டு ரசிப்பாங்க, பாராட்டுவாங்கன்னு பதில் சொன்னேன். அதுக்கும் ஜட்ஜஸ் 'வெரிகுட்'னாங்க.

"கடைசியா பேப்பர் பிளேட், ஸ்பூன் மாதிரி நாலஞ்சு ஐட்டம்ஸ் மட்டும் கொடுத்து ஒரு தீவுல தனியா ஒரு வாரம் இருக்கணும்னா எப்படி இருக்கும்னு கேட்டாங்க. அதுதான் எல்லார் பதில்லயும் இருந்த தமாஷ், காமெடி. அப்படியே 'ஜாலி மூடு'க்கு மாத்திட்டாங்க."

அட்சயா, சன் டீவியில் சப்த ஸ்வரங்கள், ராஜ் டீவியில் ஹம்மா ஹம்மா (முதல் பரிசு!) ராகம் – சங்கீதம் (நாலு காடகரியிலும் பரிசுகள்!) பங்குகொண்டு, சன் டீவி இசைச் சோலையில் முழுக் கச்சேரியே செய்திருக்கிறார். விஜய் டீவியில் இசை நிகழ்ச்சி ரெக்கார்ட் ஆகியிருக்கிறது. ஒளிபரப்புக்குக் காத்திருக்கிறார்.

ஹிந்தியில் பிரவீண், 'சம்பிரதாயா'வில் மெம்பர்; தோட்ட வேலை, போட்டோகிராஃபி பிடிக்கும். (மொட்டை மாடியில் மருதாணியும், செம்பருத்தியும் சாட்சிகள்) வயலினும் கற்று வருகிறார். இந்திய அரசின் கலாசாரத் துறை ஸ்காலர்ஷிப்பும் கிடைத்திருக்கிறது.

மியூசிக் டைரக்டர் அக்னி மெட்டமைத்து, அட்சயா பாடியிருக்கும் முதல் ஆல்பம் வெளி வரப் போகிறது.

ஆர்பிஜியின் கர்நாடக இசை கேசட்டுகளுக்கு, இன்லே கார்டுகளில் ஆங்கில 'ரைட் அப்' எழுதி வருகிறார் அட்சயா.

சென்னைப் பல்கலைக் கழக இசைத் துறையில் எம்.ஏ.மியூசிக் மாணவி. கர்நாடக இசையில் இவரது குரு, எம்.எல்.வி.யின் மூத்த சிஷ்யையான டி.எம். பிரபாவதி.

சந்திப்பு: **சாருகேசி**

அட்டை வண்ணப்படம்: **சௌந்தரராஜன்**

கேஸட் வெளியீடு என்று பத்திரிகைகளில் வெறும் விளம்பரம் மட்டும்தானா? விழா ஏதுமில்லையா? என்று புருவம் உயர்த்தினார்கள் கமல் ரசிகர்கள். கமலே ஊரில் இல்லை; ஹங்கேரி போயிருக்கிறார்!

கேஸட் எப்படி?

பக்கத்துக்கு நாலு வீதம் மொத்தம் எட்டு பாட்டுகள். 'ராம்..ராம்'... ஹே ஹே ராம்' என்று கமலும், அவரது மகள் ஸ்ருதியும் பாடும் பாடல் இரண்டு தடவை வருகிறது. பாடலை எழுதியது கமல்தான். ஆஷா போன்ஸ்லேவும், ஹரிஹரனும் ஒரு பாட்டுப் பாடி இருக்கிறார்கள். 'நீ பார்த்த பார்வைக்கொரு நன்றி..' இசையில் கம்பீரமாக இளையராஜா தெரிகிறார்.

'இசையில் தொடங்குதம்மா' என்று ஒரு பாட்டு எழுதியது இளையராஜா. அஜய் சக்ரவர்த்தி பாடியிருக்கிறார். கடைசிப்பாட்டு, கமல் ரசிகர்களைத் திருப்திப்படுத்துவதற்கென்றே 'காசுமேல காசு வந்து' டைப்பில் 'ராமரானாலும் பாபரானாலும் ரூட்டு ஒண்ணுதான் கேட்டு ஒண்ணுதான் சிநேகிதா' என்ற பாட்டு. இந்த மூன்றும், தமிழ்ச் சானல்களில் மாறி மாறி டாப்டென் நிகழ்ச்சியில் இடம் பெறும் என்பது உறுதி.

# 'ரூட்டு ஒண்ணுதான்'

'பொல்லாத மதனபாணம்' என்பது மராத்திய லாவணி ஸ்டைல்பாட்டு. முக்கால்வாசி தமிழ், கால்வாசி மராத்தி.




'நீ வார்த்த' பாடலின் இடையே ஒரு வங்க மொழிக் கவிதை. படித்திருப்பவர் ராணிமுகர்ஜி.

திருப்பாவை பலராலும் சினிமாவில் கையாளப் பட்டுள்ளது என்றாலும், கமலின் முயற்சி வித்தியாசமாக இருக்கிறது. வைஷ்ணவ ஜனதோ பாடல், ஷபா ஷர்மா குரலில் ஒலிக்கிறது. தொடர்ந்து வசன உச்சரிப்புடன், சாஸ்திர அறிஞர்கள் வாரணம் ஆயிரம் சொல்ல, முடிகிறபோது அதுவே பாடலாகிறது பெண் குரலில். உச்சரிப்பு சரியா? என்று கேட்டால் 'துல்லியம்!' என்று சம்ஸ்கிருத பேராசிரியர் சான்றிதழ் தருகிறார்.

இதைவிட இன்னும் ஒரு புதுமுயற்சி சன்யாசம் பெறும்போது சொல்ல வேண்டிய மந்திரத்தை மெல்லிய இசைப் பின்னணியில் கமல் படிக்க, இடையிடையே கடித வரிகளை(படித்துப்) பரிமாறிக் கொள்கிறார்கள் கமலும், ஹேமமாலினியும்.

மொத்தத்தில் ஏழு பாடல்களும் ஏழுவிதம் என்று சொல்லலாம்.

பாடல்களைக் கேட்கிற போது, இதை கமல் எப்படி படமாக்கி இருப்பார் என்ற கேள்வி எழுகிறது மனத்தில். படம் பற்றிய எதிர்பார்ப்பை அதிகரிக்கும் வகையில் பாடல்கள் இருக்கின்றன.

ஆமாம்... டி.கே. பட்டம்மாளின் வைஷ்ணவ ஜனதோ பதிவு என்ன ஆயிற்று...?

கேஸட்டின் மேலுறையைப் பாருங்கள்... ஹே ராம்!

கௌதம்

தயங்காம
குதிங்க....

அ.தி.மு.க
காங்கிரஸ்
கூட்டணி



2000 ஜனவரி 23
பிரமாதி தை 9
மலர் : 58
இதழ் : 26

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## காஷ்மீர் மக்களைக் கேளுங்கள்!

**ஹை**ஜாக் சம்பவத்தைத் தொடர்ந்து பாகிஸ்தான் மீது உலக நாடுகள் யாவுமே கண்டனப் பார்வை செலுத்தி வருகின்றன. ஆனால், இதனாலெல்லாம் பாகிஸ்தான் தீவிரவாத அமைப்புகள் ஒன்றும் ஆடிப் போய்விடவில்லை! 155 பயணிகளின் உயிரைக் காக்க விடுவிக்கப்பட்ட முஸ்லிம் பயங்கரவாதத் தலைவர் மசூத் அஷார், 'காஷ்மீர் மீதான போர் தொடரும்' என்று பட்டவர்த்தனமாகக் கூட்டம் போட்டு அறிவித்திருக்கிறார். ரம்ஜான் நோன்பு முடிக்கும் புனித நாளில், '5,00,000 புனித வீரர்களைத் திரட்டி, காஷ்மீரை மீட்க புனிதப் போர் நடத்தப் போகிறேன்' என்று 'புனித சபதம்' செய்திருக்கிறார்.

இந்திய அரசின் தலைவலிகள் ஹைஜாக் சம்பவத்துடன் முடிந்து போய்விடவில்லை. மசூதின் சபதம் ஒரு பக்கம் என்றால், உள்நாட்டில் அவரவரும் வழங்கிவரும் 'இலவச ஆலோசனைகள்' இன்னொரு பக்கம் :

'நம் விமானத்தை ஹைஜாக் செய்த பாகிஸ்தானியருடன் கிரிக்கெட் ஆட்டம் என்ன வேண்டிக் கிடக்கிறது! உடனே நிறுத்துங்கள்' என்று பாய்கிறார் பால்தாக்கரே!

குஜராத்தில் நடந்த ஆர்.எஸ்.எஸ். மாநாட்டில், 'பாகிஸ்தானை பயங்கரவாத நாடாக அறிவிக்க அமெரிக்க தயவை எதிர்பார்ப்பானேன்? இந்திரா காந்தி துணிந்து யுத்தம்




செய்து, பங்களாதேசை உருவாக்கியது போல், இப்போதைய பி.ஜே.பி. அரசும் செயல்பட வேண்டும்' என்று ஆர்.எஸ்.எஸ். தேசிய செயலாளர் சேஷாத்ரி முழங்குகிறார்.

வி.எச்.பி செயலாளரோ, 'பாகிஸ்தானுக்குள் புகுந்து பயங்கரவாத முகாம்களை நாம் தாக்கி தீர்த்துக்கட்ட வேண்டும்' என்று அறிவுரை கூறுகிறார்.

ஹிந்து அமைப்புத் தலைவர்களின் 'அறிவுரை' ஒருபுறம், கட்டுப்பாட்டு கோட்டையே இரு நாடுகளுக்கிடையே நிரந்தர எல்லைக்கோடாக ஏற்றுக் கொண்டால் பிரச்னை தீர்ந்து போகும் என்று கூறும் சில மீடியா சாதனங்களின் உருப்படாத யோசனை இன்னொருபுறம்.

இதற்கிடையே, அரசு தற்போது மேற்கொண்டுள்ள நடவடிக்கை, ஹைஜாக்கில் பாகிஸ்தானின் நேரடி பங்கேற்பை நிரூபிக்கும் முயற்சி மட்டுமே.

இந்த முயற்சி வெற்றி பெறும் என்பதில் சந்தேகமில்லை. ஆதாரங்கள் பலமாகவே இருக்கின்றன.

ஆனால், விமானத்தை பாகிஸ்தான் ஆதரவுடன்தான் தீவிரவாதிகள் கடத்தினார்கள் என நிரூபிப்பதால் காஷ்மீர் பிரச்னைக்குத் தீர்வு கிடைத்துவிடப் போகிறதா?

இதன் மூலமாக, சர்வதேச அளவில் வாய் வார்த்தையாக இந்தியாவுக்கு ஆதரவு பெருகும். ஆனால், அப்போது கூட, ஒரு முத்தரப்புப் பேச்சு வார்த்தைக்குப் பாகிஸ்தானை இணங்க வைத்து, அதன் மூலம் காஷ்மீர் பிரச்னைக்கு சமரசம் தேடுவது நடக்காத காரியம்.

மத்திய அரசோ, மசூத் அஷாரோ, வி.எச்.பியோ, ஆர்.எஸ்.எஸ்ஸோ, பில் கிளின்டனோ காஷ்மீரை என்ன செய்ய வேண்டும் என்பது குறித்து என்ன கருத்துச் சொன்னாலும்




இறுதியில் காஷ்மீர் குறித்த முடிவை எடுக்க வேண்டியவர்கள் அங்கு வாழும் மக்கள்தான்.

இந்தியா சுதந்தரம் அடைந்த நாள் முதலாக உடல்ரீதியாகவும் மனரீதியாகவும் அல்லல் பட்டு வரும் இம்மாநில மக்களின் வலியும் வேதனையும் அரசியல் ஆர்ப்பாட்டங்களினாலும் சர்வதேச அனுதாபப் பேச்சுக்களாலும் தீர்ந்து விடப் போவதில்லை.

ஜனநாயக முறைப்படி தேர்தல் நடத்தி ஆட்சி அமைத்த பிறகும் அமைதியையும் பாதுகாப்பையும் அரசின் நல்ல நிர்வாகத்தையும் காணாதவர்களாகவே இருக்கிறார்கள் காஷ்மீரிகள்.

அம் மாநிலத்தில் அமைதி காப்பதற்கு இந்திய அரசு கொடுக்கும் விலையும் மிக அதிகமாக இருக்கிறது. பொருளாதார ரீதியான நஷ்டத்தோடு மனித உயிர்களின் நஷ்டமும் ஈடுகட்ட முடியாத அளவுக்குத் தொடர்ந்து கொண்டே இருக்கிறது.

காஷ்மீர் பிரச்னையில் இந்திய அரசு என்ன நிலையை மேற்கொள்ள வேண்டும் என்பதைத் தெளிவாக எடுத்துச் சொல்லக்கூடிய நிலையில் இன்று இருப்பவர்கள் காஷ்மீர் மக்கள்தான்.

எனவே மத்திய அரசு மதவாதிகளின் சபதங்களால் தூண்டப்படாமல், ஹிந்து அமைப்புகளின் உளறல்களால் உந்தப்படாமல், உணர்ச்சிகளுக்கிடமளிக்காமல் பிரச்னையை நடைமுறை சாத்தியமான சிந்தனையுடன் அணுகட்டும். தங்கள் பிரச்னையைத் தீர்த்துக் கொள்ள ஒரு சந்தர்ப்பத்தை காஷ்மீர மக்களுக்கே அளிக்கட்டும். காஷ்மீர் மக்களிடையே 'கருத்துக் கணிப்பு' என்பது ஜனநாயக இந்தியாவின் கௌரவத்துக்கு பங்கம் விளைவிக்கும் கெட்ட வார்த்தை அல்ல; உண்மை நிலையை உணர்த்தவல்ல, அமைதிக் கதவுகளைத் திறக்கவல்ல சக்திவாய்ந்த திறவுகோல். அதைக் கையிலெடுக்கும் மன வலிமைதான் இன்றைய முக்கிய தேவை.



# வாழும் தெருக்கூத்து!

சங்கரதாஸ் சுவாமிகள் மட்டும் உயிரோடு இருந்திருந்தால், மியூசியம் தியேட்டரில் மேடையேறிய தம்முடைய பவளக்கொடி நாடகத்தைப் பார்த்து துள்ளிக் குதித்துப் பாராட்டியிருப்பார். ஆம்! அந்த அளவுக்குச் சிறப்பாக, 'மௌனக் குரல்' அமைப்பின் சார்பில் அந்த நாடகம் அரங்கேற்றப்பட்டது. தெருக்கூத்து வடிவம் கெடாமல், அதேசமயம் நவீன கால விஷயங்களும், நாடகத்தில் பின்னப்பட்டிருந்தன. கண்களாலேயே எண்ணி விடுமளவுக்குத்தான் அரங்கத்தில் பார்வையாளர்கள் இருந்தனர் என்றாலும் அத்தனை பேரும், ரசித்துப் பாராட்டிக் கைதட்டினார்கள்.

கதை பழைய, பவளக்கொடி நாடகமேதான். பெண்களைக் கண்டதும், காதல் வயப்பட்டு, அவர்களை மடக்கி, மணமுடித்துக் கொள்ளுகிற அர்ஜுனன். அவனுக்குத் துணை போகிற கிருஷ்ணன். ஆனால் வசனங்களில் இன்று நம் வீடுகளில் அலுவலகங்களில், தெருக்களில், கல்லூரி வாசலில் என்று எங்கும் நீக்கமற நிறைந்து பெண்ணினத்தைக் கேவலப்படுத்தும் அர்ஜுனன்களை, அவர்களுக்குத் துணை நிற்கிற கிருஷ்ணன்களைச் சாடும் சூடு இருந்தது. அது மட்டுமா? முழுக்க பெண்களே, அதுவும் முழு நேரமாக நாடகங்களில் நடிப்பதையே தொழிலாகக் கொண்ட வந்தவாசி, செய்யாறு பகுதிகளில் வசிக்கும் பெண்கள்தான் அர்ஜுனன், கிருஷ்ணன் உட்பட அனைத்து பாத்திரங்களிலும் நடித்தனர். அவர்கள் தங்கள் குடும்பத்தில் – இந்த சமூகத்தில் சந்திக்கிற பல்வேறு பிரச்னைகளையும், ஸ்பாட் லைட் போட்டுக் காட்டியது இன்னும் ஒரு வித்தியாசமான முயற்சி.

மேடையின் பின்பாதியில் சற்றே உயரமான ஒரு தளம். முன்பாதியில் சங்கரதாஸ் ஸ்வாமிகளின் பவளக்கொடி. பின் பாதியில் குடும்பச் சச்சரவுகள். சில தருணங்களில், அந்தச் சச்சரவுகளின் ரசாபாசங்கள், முன் பாதியிலும் அரங்கேறுகின்றன. இது நாடகத்துக்கு மேலும் சுவாரசியம், யதார்த்தம் இரண்டையும் சேர்த்தது.

"நாடகத்தில் நடிக்கும் தொழில் ரீதியான பெண்கள், சந்திக்கும் பல்வேறு பிரச்னைகளையும் அறிந்த போது, மனம் வேதனைப்பட்டது. அப்போதுதான், பழைய பவளக் கொடியையும், அதில் நடிக்கிற பெண்களின் பிரச்னைகளையும் இணைத்து மேடையேற்றினால் என்ன என்கிற எண்ணம் எனக்கு ஏற்பட்டது. அதில் பிறந்ததுதான் இந்த நாடகம்!'' என்கிறார் இதனை உருவாக்கி, இயக்கியுள்ள குணசேகரன். இவர் பாண்டிச்சேரி பல்கலைக் கழகத்துடன் இணைந்த நாடகப் பள்ளியின் பேராசிரியர்.

"எதையும் எதிர்க்கேள்வி கேட்டு விமர்சனம் செய்தால் விழிப்புணர்ச்சி



யையே பாதித்த கேரக்டர். அவனை விமர்சிப்பதா?' என்று எதிர்ப்பு வந்தது. அதைவிட பெரிய கஷ்டம், அரிச் சந்திரன் வேடத்தில் நடிக்க ஒப்புக் கொண்டிருந்த வர், நாடக அரங்கேற்றத்துக்கு முந்தைய தினம்; அரிச்சந்திரனையே கேள்வி கேட்பதை என்னால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை! நான் இந்த நாடகத்திலிருந்தே விலகிக் கொள்ளுகிறேன்!' என்று சொல்லி விட்டார்! கடைசி நேரத்தில், நானே அரிச்சந்திரனாக நடித்தேன்!'' என்கிறார் குணசேகரன்.

"தெருக்கூத்து வடிவம், நகர்ப்புற மக்களுக்குப் பரிச்சயமில்லாதது. கிராமங்களிலும் இன்று தெருக்கூத்துக்குப் பதிலாக, சினிமா பாட்டுக் கச்சேரிகளும், சினிமாக்களும் வந்து விட்டன. இந்தச் சூழ்நிலையில் பெரிய அளவில் இது போன்ற முயற்சிகளுக்கு வரவேற்பு கிடைக்குமா?" என்ற நமது சந்தேகத்தை அவரிடம் கேட்ட போது, ''தெருக்கூத்து என்று இல்லை, நம் முடைய எந்த ஒரு பாரம்பரியக் கலையை எடுத்துக் கொண்டாலும் சரி இன்னமும் பழைய பல்லவியையே பாடிக்கொண்டிருந் தால் எடுபடாது. கலையை ஒரு கருவியாய்ப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அன்று சொன்ன விஷயத்துடன், இன்றைய நாட்டு நடப்பை, பிரச்னைகளைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். அல்லது, இன்றுள்ள ஒரு புதிய விஷயத்தைச் சொல்ல, அந்தப் பழைய கலையைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும். அப்போது வெற்றி உறுதி" என்கிறார் மௌனக் குரல் அமைப்பின் மீனா ஸ்வாமி நாதன்.



நாடகத்தைப் பார்த்தபோது, இந்தக் கருத்தை உணர முடிந்தது. 'வாக்குறுதின்னு கொடுத்திட்டு, அதை நிறை வேத்தினதா வரலாறு உண்டா?' 'கண்டபடி சுத்தாதே! எய்ட்ஸ் வரும்' 'இந்தத் தமிழ் சினிமாக்காரங்க, மாங்கல் யத்தை வெச்சு, பெண்ணினத்தையே எந்த அளவுக்கு சிறுமைப் படுத்தியிருக்காங்க!' என்ற வசனங்கள் இதற்கு உதாரணம்!

நம் தெருக்கூத்து இன்னமும் செத்து விடவில்லை!

— எஸ். சந்திரமௌலி

ஏற்படும். இதற்கு முன் அரிச்சந்திரன் பற்றி ஒரு நாடகம் போட்டேன். 'உண்மை பேசுவது அவனது நற்குணமாக இருக்கலாம். ஆனால், தமது சுய கௌர வத்துக்காக, மனைவியை விற்பது என்ன நியாயம்?' என்ற கேள்வியை அதில் எழுப்பினேன். 'அரிச்சந்தி ரன் உண்மையின் உருவம். இளம் வயதில் காந்திஜி

• [illegible] சென்று [illegible]
[illegible] வீட்டை விட்டு [illegible]

# தலிபான் ஆட்சியில் பெண்கள் படும்பாடு!

**இந்திய விமானம் கடத்தப்பட்டதால் ஆப்கானிஸ்தான் பற்றியும் அதை ஆளும் தலிபான் அரசு பற்றியும் அனைவருக்கும் தெரியும். ஆனால், அந்த தலிபான் அரசு எப்படிப்பட்டது? அது பெண்களை எப்படி நடத்துகிறது என்பதையும் முழுமையாகத் தெரிந்து கொள்ள வேண்டாமா?**

போரில் இறங்கியுள்ள ஆப்கானிஸ்தானின் தலை நகரான காபூலில் இரண்டு



• ரகசியமாகப் படிக்கும் சிறுமிகள்...





• பல்கலைக் கழக மாணவி பெர்சிட்டாவும் பள்ளி மாணவி ஹிமாவும் இன்று படிக்க அனுமதியில்லை...

நாள் மழை காரணமாக வானில் மேக மூட்டம். மத்திய அங்காடித் தெருக்கள் சேறாகக் காட்சியளிக்கின்றன. நகரில் படபடப்புடன் செல்லும் காபூல் வாசிகள் மெல்லிய போர்வைகளை முக்காடு போல தங்கள் மீது போர்த்திக் கொள்கிறார்கள். ஆண்கள் மட்டுமல்ல பெண்களும் கடுமையான சட்டங்களின் கெடுபிடியில் வாழ வேண்டிய கட்டாயங்களுக்கு ஆளாகியுள்ளனர். சில மாதங்களாகப் பெண்களைக் குறிவைத்து அவர்களை நிலை குலைய வைக்கும் தடை நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. தெருக்களில் தனியே நடமாடுவதற்குக் கூட தடை விதிக்கப்பட்டுள்ளது. இரண்டு மூன்று பேராக சுவர்களை

• நெய்ல் பாலிஸ் போட்டதற்காக இப்பெண்ணின் கட்டைவிரல் வெட்டப்பட்டது...

ஒட்டி நிழல்களைப் போன்று நகர்கிறார்கள். உடலின் அனைத்துப் பகுதிகளையும் மூடும் 'சாத்ரி' என்ற மேலங்கியை அணிய வேண்டியுள்ளது. சன்னமான நூற்பின்னல் சந்து வழியேதான் அவர்கள் வெளியுலகை உற்று நோக்க வேண்டியுள்ளது.

பெண்கள் படிப்பதற்கும் வேலை செய்வதற்கும் தடை விதிக்கப்பட்டுள்ளது. பொது மருத்துவமனைகளில் அவர்கள் மருத்துவம் செய்து கொள்ள அனுமதி இல்லை என்பது மேலும் அவலம். 1997லிருந்து அவர்கள் தனியார் மருத்துவ மனைகளில் மட்டுமே மருத்துவம் செய்து கொள்ள அனுமதிக்கப்பட்டார்கள். அவ்வாறு மருத்துவம் செய்து கொள்ள பணமுள்ள ஒரு சிலரால் மட்டுமே முடியும். அல்லது அவசரத்துக்குச் செல்லும் மருத்துவமனைகளில் தண்ணீர் வசதி இல்லை. மின்சாரம் கிடையாது. அறுவை மருத்துவ வசதிகளும் இல்லை. இறப்பதற்கான இடம் என்றே அந்த மருத்துவமனைகளைச் சொல்ல வேண்டும்.

தலிபானின் பிடியில் உள்ள ஆப்கானிஸ்தான் மருத்துவ மனைகளில் ஆண் டாக்டர்கள் மட்டுமே பணி புரிய முடியும். ஆனால் அவர்களிடம் மருத்துவம் செய்து கொள்ள பெண்களுக்கு அனுமதி இல்லை. தனது ஒன்றுவிட்ட சகோதரிக்கு மருத்துவம் செய்ய முடியாமல் அவரைச் சாகக் கொடுத்த டாக்டர் சம்ஸ், கோபம் கொப்பளிக்கக் கொதிப்புடன் உள்ளார். "தலிபான்கள் தீவிரவாதிகள், தங்களது விருப்பங்களை மக்கள் மீது கட்டாயப் படுத்தித் திணிக்கிறார்கள், போர் வீரர்கள். பெண்களையும் மனிதர்களாக நினைக்காத காட்டு மிராண்டிகள். பெண்களை விலங்குகளாக அவர்கள் கருதுகிறார்கள்'' என்கிறார் அவர். டாக்டர் சம்ஸ் திருமணமானவர். ஆனால் குழந்தைகள் இல்லை. "தீவினைப் பயனாக எனக்கு மகள் பிறந்திருந்தால் அவளது எதிர்காலம் எப்படி இருக்கும்?'' என்பது அவரது கேள்வி.

எதிர்காலமே இருண்டு விட்டதாகக் கருதுகிறார் சைமா என்ற 20 வயதுப் பெண். "தலிபான்கள் ஆட்சிக்கு வருவதற்கு முன் நான் மருத்துவக் கல்லூரியில் படித்து வந்தேன். ஜீன்ஸ் அணிவேன். இசை கேட்பேன். திரைப்படங்களுக்குச் செல்வேன். நண்பர்களுடன் வெளியே செல்வேன். ஒரே இரவில் இவை அனைத்தும் தடை செய்யப்பட்டு விட்டன. 'சாத்ரி' அணியாமல் வெளியே செல்ல முடியாது. அதை அணிவதே பெரிய தலைவலி. எனது சகோதரர் அல்லது எனது தந்தை என்னுடன் கட்டாயம் உடன்வர வேண்டும். இதைப் பொறுக்க முடியாது'' என்கிறார்.

சைமாவின் தாய் மர்குல் 1996வரை பள்ளி முதல்வராக இருந்தார். அவர் கூறுகிறார்: "எங்களது வாழ்க்கை சிறையாக மாறிவிட்டது. வீட்டு வேலைகள் செய்வது, சமைப்பது, துணிகளைத் துவைப்பது என்பதாகவே எனது மகளின் எதிர்காலம் இருக்கும். குழந்தைகள் பெறுவதற்கு மட்டுமே பெண்கள் தகுதியானவர்கள் என்பது தலிபான்களின் எண்ணம்.''

தலிபான் படையினரின் தேடுதல் வேட்டையின்போது, அவர்களது வீட்டில் துணி துவைக்கும் இடத்தில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த சிறிய வானொலிப் பெட்டி அவர்களது கண்ணிலிருந்து தப்பி விட்டது. "எங்களது தொலைக்காட்சிப் பெட்டியையும் ஒளிப் பேழைகளையும் தூக்கிச் சென்று விட்டார்கள். ஆனால் வானொலிப் பெட்டி அவர்களது கண்ணில் படவில்லை. தினந்தோறும் யாருக்கும் தெரியாமல் மறைவாக பி.பி.சி. கேட்கிறோம். எங்களைப் பற்றி சிறிதளவே பேசப்படும் இந்த உலகில் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்கிறோம்'' என்கிறார் மர்குல்.

**ம**ர்குல் மற்றும் அவரது மகளும் இடர்ப்பாடுகளை பொருளாதாரப் போக்கில் சமாளித்து விடுவார்கள். காபூலில் 13 விழுக்காட்டினர் குடும்பத் தலைவிகள். அவர்கள் வேலைக்குச் செல்ல அனுமதி இல்லை. அதே சமயம் அவர்கள் தங்களது குழந்தைகளுக்கு உணவளிக்க வழி தேட வேண்டும். சிறு தொகைக்காக வீதிகளில் பிச்சை எடுக்கும் நிலைக்கு ஆளாக்கப்பட்

---



'' 'E' மெயில் தெரியும்! அது என்ன அந்த அம்மாவை 'SHE'மெயில்ங்கிறீங்க!''

''அந்த அம்மாகிட்டே ஒரு விஷயம் சொன்னா அது 'E'மெயிலை விட வேகமாக தெரு பூரா பரவிடும்! அதான்!''

– சம்பத் குமாரி

டுள்ளனர். இதை தலிபான் படை பார்த்தால் தடி அடியும் உண்டு. மனிதநேயக் குழுக் களின் உதவி மையங்களில் முதலுதவி பெற அல்லது உணவுக்காகப் பலர் வரிசையில் நிற்கின்றனர். தலைநகரில் செயல்பட்டுக் கொண்டிருந்த 30க்கும் மேற்பட்ட அரசு சாரா அமைப்புகளை கடந்த ஜூலை மாதம் தலிபான்கள் வெளியேற்றிவிட்டார்கள். கடந்த மே மாதம் தலிபான்களுடன் சமரச ஒப்பந்தம் மேற்கொண்டது ஐக்கிய நாடுகள் சபை. ஆப்கன் மற்றும் இஸ்லாமிய மரபு களின் படி நாட்டில் உள்ள பெண்களின் நிலைமை சீரடையவேண்டும் என்பது ஒப்பந்தத்தின் விதி. மருத்துவத்திற்காகச் சில பெண் மகளிர் மருத்துவர்களையும் தாதி களையும் ஏற்பாடு செய்திருந்தன அரசு சாரா அமைப்புகள். அதிகாரத்தில் இருக்கும் ஆண்கள் இந்த அரசு சாரா அமைப்புகள் இருப்பதை விரும்பவில்லை. மேற்கத்தியர் கள் தற்போது வெளியேறி விட்டார்கள். தூக்கிலிடுவதையும் கல்லால் அடித்துக் கொல்வதையும் அனுமதிப்பது, பொதுமக் கள் நடுவே கைகளை வெட்டி தண்டனை அளிப்பது, குழந்தைகள் பட்டம் விடுவதைத் தடுப்பது, பெண்கள் படிப்பதையும் சிந்திப்பதையும் தடுப்பது என்று சட்டங் களைத் தலிபான்கள் கடுமையாக்கலாம்.

சில பெண்கள் இந்த அடக்கு முறைக்குத் தலைவணங்க மறுக்கிறார்கள். 'சாத்ரி'க்கு உள்ளே நீண்ட ஆடையை அணிகிறார் சமீரா. அவரது விரல்களில் உள்ள நகங்கள் ஒப்பனை செய்யப்பட்டுள்ளன. ஆனாலும் அவருக்கு லேசாகப் பயமும் கூட. தலிபான் கள் வரும்வரை அவர் பல்கலைக் கழகத்தில் சட்டப் பேராசிரியராக இருந்து வந்தார். மறைவான இடங்களில் 800 பெண்கள் படிக்கும் தலைமறைவுப் பள்ளிகளில் இப்போது அவர் ஆங்கிலம் கற்றுத் தரு கிறார். இப்பேட்டியின்போது சமீரா இருமுறை வாசல் பக்கம் போய் யாராவது வருகிறார்களா எனப் பார்த்து வந்தார். வீட்டில் புதிதாக யாராவது நுழைவதைப் பார்த்தால் அது குறித்து தலிபான்களுக்குத் தகவல் கொடுத்து விடுவார்கள். மற்றவர் களைப் பற்றி தகவல் கூறுவது என்பது ஆப்கனில் வாடிக்கையாகி விட்டது. சமீரா அச்சம் கொண்டுள்ளதைப் பார்த்த நான் "தலிபான்கள் வந்தால் என்ன நடக்கும்?" என்றேன். ''நாம் தூக்கிலிடப்படுவோம் அல்லது நீங்கள் சிறையில் அடைக்கப் படுவீர்கள்'' என்று பயத்துடன் பதிலளித் தார்.

''ஏன் ஆபத்தை விலைக்கு வாங்கு கிறீர்கள்?"

"நாங்கள் கல்வி பயில விரும்புகிறோம். உங்களது பெண்கள் சுதந்தரமாக உள்ளனர். படிக்கிறார்கள்; சிந்திக்கிறார்கள். ஆப்கன் பெண்களும் அதையே விரும்புகிறார்கள். பெண்கள் படிப்பதை தலிபான்கள் தடை செய்கிறார்கள். ஏனெனில் பெண்கள் படித்தால் புரட்சிக் கொடி தூக்குவார்களோ என்று அவர்களுக்குப் பயம். நாங்கள் ஏற் கெனவே கல்வி கற்றவர்கள். அவர்கள் அப்படி இல்லை. எனவே அவர்கள் பயப் படுகிறார்கள்" என்கிறார் சமீரா. பக்கத்து அறையில் மாணவர்கள் ஆங்கில இலக்கி யத்தை முணுமுணுக்கிறார்கள். இதுதான் அவர்களுக்குக் கடைசி வகுப்பாகவும் இருக்கக் கூடும். தலைமறைவாக இயங்கிய பள்ளிகளை தலிபான்கள் தேடி அழித்துள்ளனர்.

தடை செய்யப்பட்ட மொழியான ஆங்கி லத்தைப் பெண்கள் எந்த நம்பிக்கையோடு கற்கிறார்கள்? புதிய நாட்டில் வாழத் தயாராகவா? பரீதா என்ற பெண் 'சாத்ரி' மேலங்கியை வகுப்பறையில் அகற்றியதுகூட இல்லை. ஆனால் தலிபான்களே இல்லாத நாட்டில் வாழ வேண்டும் என்ற நம்பிக்கை யோடு இருக்கிறார். அப்பெண்ணின் கனவு நனவாவதற்கான வாய்ப்புகள் குறைவு. தலிபான்களுக்கு எதிரானவர்கள் வலுவாக இல்லை. தலிபான்கள் வெற்றி மேல் வெற்றி ஈட்டி ஆப்கானிஸ்தானின் 80 விழுக்காட்டுப் பகுதிகளைத் தங்களது கட்டுப்பாட்டில் கொண்டு வந்து விட்டனர்.

நன்றி: **யுனெஸ்கோ கூரியர்**



**''வீடு கட்ட லோன் வாங்கினீங்க! ஆனா ஒரு ரூம்தான் கட்டியிருக்கீங்க!''**

**''லோன் பணத்தை வாங்க அப்பப்ப சம்திங் கொடுத்துக் கொடுத்து இதுக்குத்தான் பணம் மிஞ்சிச்சு!''**

**– மெலட்டூர் விசுவநாதன்**



• அவினாஷ் பஸ்ரிசா



• திருமதி எம்.எஸ்.

**பிரபல புகைப்படக்காரர் அவினாஷ் பஸ்ரிசா, இசைக் கலைஞர்களைப் படம் எடுப்பதில் முத்திரை பதித்தவர். சமீபத்தில் புகைப்படக் கண்காட்சிக்காக சென்னை வந்திருந்தார்.**

# பாலசரஸ்வதி நடனத்தில் சொன்ன செய்தி!

**நா**ன் போட்டோ எடுக்கத் துவங்கிய கால கட்டம் அது. தில்லியில் உள்ள ஒரு அரங்கத்தில் தமது நாட்டிய நிகழ்ச்சியை நடத்த வந்திருந்தார் பாலசரஸ்வதி. மேடையின் ஓர் ஓரத்தில் காமிராவை செட்அப் செய்து விட்டு நான் பாலசரஸ்வதியின் நடன முத்திரைகளைப் படம் எடுத்துக் கொண்டிருந்தேன். திடீரென்று முன் வரிசையில் அமர்ந்திருந்த இந்திரா ரேமன் (இவர் ஒடிஸி நாட்டிய கலைஞர்) எழுந்து என்னை நோக்கி வந்தார். 'படம் எடுக்காதீர்கள்; நிறுத்துங்கள்' என்றார். எனக்கொன்றும் புரியவில்லை. 'என்ன காரணம்?' என்றேன்.

''பாலசரஸ்வதி நடன அசைவுகளின் மூலமாகவே 'போட்டோ எடுக்கக் கூடாது' என்ற செய்தியைத் தம்மிடம் சொல்லி விட்டதாகச் சொன்னார் ரேமன். பரதத்தைப் பற்றிய அறிவு எனக்கு இல்லாததால் பால சரஸ்வதி அவ்வாறு சொல்லியிருப்பாரா என்பது நெடுநாளாக என்னுள் கேள்விக் குறியாக இருந்தது.

பின்னர் ஸ்பான் பத்திரிகைக்காக அவரைப் புகைப்படம் எடுக்க சென்னைக்கு வந்திருந்தேன். தில்லியில் நடந்த சம்பவத்தை ஞாபகப் படுத்தினேன். "ஓ அது நீங்கள் தானா?" என்று கேட்டுச் சிரித்தார் அவர். வெறுமனே நாற்காலியில் அமர்ந்திருந்து பேட்டியளித்துக் கொண்டிருந்தவரை 'சில நாட்டிய முத்திரைகளுடன் போஸ் கொடுக்கச் சொன்னேன். 'முடியவே முடியாது' என்று மறுத்து விட்டார். நான் கேட்டுக் கொண்டபடி நடந்து கொள்ளா விட்டாலும், அவராகவே வரையறுத்துக் கொண்ட பாதையில் தெளிவாக இருப்பது பாராட்டும் அம்சமாகத் தெரிந்தது.

**தி**ருமதி எம்.எஸ். அவர்களை படம் எடுக்கச் சென்றிருந்தேன். 1979ம் ஆண்டு என்று நினைக்கிறேன். நான் சென்றபோது ம்ருதங்கம்; வயலின் போன்ற பக்க வாத்யங்களோடு தயாராக இருந்தார். பாடும் போது அவர் வெளிப்படுத்திய முக பாவங்களோடு திருப்தியாகப் படம் எடுத்துக் கொண்டேன். 'கொஞ்சம் ப்ரேக்' கொடுக்கலாமா?" என்றார் எம்.எஸ். 'ஏன்?' என்று கேட்டேன். 'தோசை' வார்த்துத் தருகிறேன். சாப்பிட்டு விட்டு தொடர்ந்து படம் எடுங்கள்' என்று உள்ளே சென்று அனைவருக்கும் சுடச்சுட தோசை வார்த்து எடுத்து வந்தார். நான் நெகிழ்ந்து போனேன். அதன் பின் சதாசிவம் அவர்களையும், எம்.எஸ். அவர்களையும் மொட்டை மாடிக்கு அழைத்துச் சென்று படம் எடுத்தேன். சமீபத்தில் அவரைச் சந்தித்தபோது இருபது வருடங்களுக்கு முன் எடுத்த படங்களைக் காண்பித்தேன். வியக்கும் விழிகளுடன் அவற்றைப் பார்த்த அவர், ஒன்றிரண்டு

படங்களை ஆசையுடன் கேட்டு வாங்கிக் கொண்டார்.

பேகம் அக்தர் பிரபல கஜல் பாடகி. அயோத்தி அருகே உள்ள ஃபைஸாபாத் நகரைச் சேர்ந்தவர். கல்யாணத்துக்கு முன்பு வரை மேடைகளில் சக்கைப் போடு போட்டுக் கொண்டிருந்தார் அவர். லக்னோ நகர நவாப் குடும்பத்தில் உள்ள ஒருவருக்கு அவரை மணமுடித்து வைத்தார்கள். நவாப் குடும்ப வழக்கப்படி பெண்கள் மேடையில் பாடக்கூடாது. அக்தரின் இசை நிகழ்ச்சிகள் தடை பட்டுப் போயின. இது ஒரு மன வியாதியாக மாறி அக்தரின் உடல் நிலையைப் பாதித்தது. நவாப் குடும்பத்துக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. பிரபல டாக்டர்களை கலந்தாலோசித்தார்கள். 'மீண்டும் அவரைப் பாட விடுங்கள்; அது தான் அவருக்கு மருந்து' என்றார்கள் டாக்டர்கள். நவாப் குடும்பத்தினர் அவரது இசை நிகழ்ச்சிக்கு 'கிரீன் சிக்னல்' கொடுத்து விட்டார்கள். அது சரி; என்னுடைய பங்கு என்ன என்கிறீர்களா? அவர் கல்யாணத்துக்கு முன்பு பாடிய கடைசி இசை நிகழ்ச்சியையும் உடல் நிலை பாதித்து பின்பு பாடிய முதல் கச்சேரியையும் படம் எடுத்தவன் நான். நவாப் குடும்பத்தினர் என்னை ஞாபகமாகக் கூப்பிட்டு அனுப்பி நிகழ்ச்சியைப் படமெடுக்கச் சொன்னார்கள்.



•கேலுசரண் மகாபத்ரா

குரு கேலுசரண் மகாபத்ரா பிரபல ஒடிஸி நாட்டிய கலைஞர். பூஜை மேடை போல் மேடையில் செட் அப் செய்து பூரி ஜெகன்நாதருக்கு பூஜை செய்வதென்பது ஒடிஸி நடன நிகழ்ச்சிகளில் உள்ளடங்கிய ஒன்று. தில்லியில் மகாபத்ராவின் நடனம் நடந்தபோது, பூஜை செய்யும் தருணத்தில் மின்சாரம் தடை பட்டுப் போனது. மிகவும் அப்செட்டாகிப் போனார் மகாபத்ரா. மீண்டும் மின்சாரம் வந்தவுடன் அனைவருக்கும் கேட்கும் விதமாக 'பகவான் ஜெகன்னாதா... நான் ஏதோ தவறு செய்திருக்கிறேன்; என்னை மன்னித்து விடுங்கள்' என்ற நெக்குருக வேண்டியது அவையோர்களை நெகிழ வைத்து விட்டது.



• கலாநிதி நாராயணன்

ஒருமுறை பரத நாட்டிய கலைஞர் கலாநிதி நாராயணன் அவர்களோடு மகாபத்ராவும் இணைந்த ஜுகல்பந்தி நாட்டியத்துக்கு ஏற்பாடாகி இருந்தது. 'என்னைத் தொட்டு ஆடக் கூடாது' என்று கலாநிதி நாராயணன் சொல்லி விட்டார். முதலில் சில நிமிடங்கள் ஸோலோவாக ஆடிய மகாபத்ராவின் முத்திரைகளைக் கண்ட கலாநிதி, அவரின் அர்ப்பணிப்புத் தன்மையைப் பார்த்து பிரமித்து, தமது கண்டிஷனை நீக்கிக் கொண்டு சிறப்பாக ஒத்துழைப்புத் தந்தார். நான் படம் எடுத்த மறக்க முடியாத ஜுகல் பந்தி அது.

சந்திப்பு: **ஸ்ரீநிவாசன்**
படங்கள்: **அவிநாஷ் பஸ்ரிசா**

நான்கு பெண்மணிகளுக்கு அவர்கள் செய்யும் சமூகத் தொண்டைப் பாராட்டி, சத்குரு ஞானானந்தா விருதும் ரூபாய் 50,000 பண முடிப்பும் 'மனவ சேவா தர்ம 'சம்வர்த்தினி' அறக்கட்டளை வழங்கியது. வழங்கியவர்கள், பெற்றுக்–கொண்டவர்கள் பின்னணி சுவாரசியமானது...

பெங்களூரைச் சேர்ந்த நீனா நாயக், தற்போது கர்நாடகக் குழந்தைகள் நல அமைப்பின் தலைவர். தவிர, சுமார் பத்து பெண்கள்–குழந்தைகள் அமைப்புகளின் ஆலோசகர். சென்னை ஸ்டெல்லா மேரிஸ் கல்லூரியில், சமூக இயலில் மாஸ்டர்ஸ் பட்டம் பெற்றவர். அன்னை தெரசாவுடன் சில வருடங்கள் பணியாற்றி இருக்கிறார். எட்டு வருடங்கள் கல்கத்தாவிலேயே, இந்தியக் குழந்தைகள் நலச் சங்கத்தில் செயலராக இருந்திருக்கிறார். "அமெரிக்காவிலும்,

• வந்தனா



• நீனா நாயக்

# பெண்கள், குழந்தைகள்,

ஸ்வீடனிலும், அலாஸ்காவிலும் சொந்தக் குழந்தைகள் இருக்கிற பெற்றோர்கூட, நாம் தூக்கிக் கொஞ்சவே தயங்குகிற நிலைமையில் உள்ள குழந்தைகளைத் தத்து எடுத்து வளர்த்து வருகிறார்கள். சியாட்டில் நகரில், என் தோழி ஆறு இந்தியக் குழந்தைகளைத் தத்தெடுத்து வளர்த்து வருகிறாள். காது கேட்காத, வாய் பேசாத இந்தக் குழந்தைகளை, சொந்தக் குழந்தைகள் போலவே அந்தத் தம்பதி வளர்க்கின்றனர். நான்


• சி.எஸ். பணி


• பி.என். தேவராஜன்


• சுவாமி நித்யானந்த கிரி

வைத்தோம். தியேட்டர்களில் ஸ்லைடுகள் காண்பித்தோம். நிறையக் குடும்பங்கள், இதற்குப் பிறகு, ஆதரவற்ற குழந்தைகளைத் தத்தெடுத்து வளர்க்க முன் வந்தன. ஒரு விதவைப் பெண் 5 வயதுக் குழந்தையைத் தத்தெடுத்துக் கொண்டாள். பிறகு அவளுக்கு ஓர் ஆணுடன் நெருக்கம் ஏற்பட்டு, அந்தக் குழந்தை மறுபடி அநாதையானது.


• விஜயகுமாரி

தத்தெடுத்த இரண்டு குழந்தைகளும் அப்படித்தான் வளர்கின்றன!'' என்கிறார் நீனா.

''பெங்களூரில் பஸ்களின் பின்புறம், 'இன்னும் ஒரு குழந்தைக்குக் கூட உங்கள் வீட்டில் இடம் கொடுப்பீர்களா?' என்று போர்டுகள்


• அஞ்சனா ராஜகோபால்

# ஷருதுகள்!

இப்போது அந்தப் பையனை, குழந்தைகள் வேண்டாம் என்று இருக்கும் (வாலன்டரிலி சைல்ட்லெஸ்) தம்பதி தத்தெடுத்து வளர்க்கிறார்கள். வகுப்பில் அவன்தான் படிப்பில் நெ.1!"– என்கிறார்.

நீனா நாயக், சென்னை போலீஸ் உயர் அதிகாரியாயிருந்த ஷெனாய் அவர்களின் புதல்வி.

அஞ்சனா ராஜகோபால் கேரளத்தைச் சேர்ந்தவரானாலும், பிறந்தது ஆந்திராவில். படித்தது கர்நாடகாவில். இப்போது தில்லியை அடுத்த நொய்டாவில் தாமே நிறுவிய 'சாய் கிருபா'வில் தொண்டு புரிகிறார்.

'டைம்ஸ் அஃப் இந்தியா'வில் பணியாற்றிக் கொண்டிருந்தவர், நோட்டுப் புத்த




கங்கள் வாங்கவும், பள்ளிக்கூட ஃபீஸ் கட்டவும் கோயில் வாசல்களிலும், பிளாட்பாரங்களிலும் பிச்சை எடுத்துக் கொண்டிருந்த குழந்தைகளைக் கண்டு குமுறினாராம். ரஜத் என்ற சிறுவனை முதலில் எடுத்து வளர்க்க ஆரம்பித்தார். 92ல் மேலும் சில குழந்தைகள் வரத் தொடங்கின. CRY நிறுவனம் ஆதரவு தரத் தொடங்கியதாம். மத்தியதரக் குடும்பங்கள் சில உதவிக்கு வந்தன. டெய்லரிங் யூனிட், மெழுகுவர்த்தி தயாரிப்பு, சிறு பால் பண்ணை என்று பெற்றோர் இல்லாத குழந்தைகளுக்கு ஆதரவு அளித்து, சம்பாதிக்கவும் வகை செய்தார்.

"எந்தப் பள்ளியிலும் இந்தக் குழந்தைகளைச் சேர்த்துக் கொள்ள மறுத்து விட்டார்கள். நானே நொய்டாவிலிருந்து 15கி.மீ. தூரத்திலுள்ள வஸீப்பூர் என்கிற கிராமத்தில் ஒரு பள்ளி ஆரம்பித்தேன். இப்போது 350 மாணவர்கள் படிக்கிறார்கள். 23 ஆசிரியர்கள் வேலை பார்க்கிறார்கள். டாடா இன்ஃபோஸிஸ் ஊழியர்களும், அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் நிறுவன ஊழியர்களும் இவர்களுக்கு கம்ப்யூடர் கல்வி சொல்லித் தருகிறார்கள்!" என்கிறார் அஞ்சனா.

அங்கிருந்த சாய்பாபா கோயில் வாசலில் பிச்சை எடுத்துக் கொண்டிருந்த சிறுவர்களைக் காட்டி, 'கோயிலில் இவர்களுக்கு இருக்க இடம் கொடுங்கள். அங்கே இவர்களுக்கு வகுப்பும் நடத்துகிறேன்' என்று கேட்டபோது, நிர்வாகி இவருக்கு முதல் மாடியை அப்படியே கொடுத்து விட்டாராம். கோயில் வாசலில் சிறுவர்கள் இப்போது பிச்சை எடுப்பதில்லை!

சென்னை ஆலப்பாக்கம் 'சிவசக்தி காக்கும் கரங்கள்' (சத்யசாய் சாரிடபிள் டிரஸ்ட்) நடத்தி வரும் விஜயகுமாரி, தமது அமைப்பைத் தொடங்கியபோது, மனவளர்ச்சி குன்றிய ஐந்து குழந்தைகள் இருந்தார்கள். வாடகைக் கட்டடம்தான்.

பிறவியிலேயே கண்பார்வை இழந்த குழந்தையும், மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளுமாக 'காக்கும் கரங்கள்' இப்போது வளர்ந்து விட்டது. இரவா-பகலா என்று தெரியாத, மண்ணா-உணவா என்று அறியாத குழந்தைகளைப் பராமரிப்பது எளிதல்ல. சில பெற்றோர் இதுபோன்ற குழந்தைகளை அதிகம் செல்லம் கொடுத்து, அவர்களுக்கு வேண்டியதை எல்லாம் தாமே செய்து அவர்கள் தாங்களாக எதுவுமே செய்து கொள்ளத் தெரியாதவர்களாக வளர்த்து விடுவார்கள். இரண்டாவது வகை, அவர்களை வீட்டுக்குள்ளேயே மறைத்து, ஒதுக்கி வைத்து விடுவார்கள்.

சோட்டானிக்கரா பகவதி கோயிலுக்குப் போயிருந்தபோது, நிறைய மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளை அங்கே கண்ட விஜயகுமாரி, இவர்களுக்குக் கல்வி கற்பிக்கும் முறையை அறிய ஆர்வம் கொண்டாராம்.

வலிப்பு நோய் உள்ள குழந்தைகள், மனவளர்ச்சி குன்றிய, ட்யூமர் வந்து பார்வை இழந்த, ஸ்க்ளரோசிஸ் குழந்தைகள் என்று இவர்கள் பல வகை. இருக்கிற வரை, குறைந்தபட்ச மகிழ்ச்சியுடனாவது இவர்கள் வாழட்டுமே என்று நினைக்கிறார் விஜயகுமாரி. (எட்டு வயதுப் பையன் விக்

னேஷுக்குப் பெற்றோர் இருந்தும், வேண்டாம் என்று இங்கே விட்டுவிட்டார்களாம்!)

"இங்கே இந்து, முஸ்லிம், கிறிஸ்தவக் குழந்தைகள் எல்லாரும் இருக்கிறார்கள். 11 வயது ஷேக் அப்துல் காதர் மற்றவர்களுடன் சேர்ந்து கந்தசஷ்டி கவசம் சொல்லுகிறான். விஷ்ணு சகஸ்ரநாமம் சொல்லுவான். ஸ்லோகம் போன்ற இந்தப் பாட்டில் மிகுந்த ஆர்வம். அப்படிப் பாடிப்பாடி, இப்போது பேச்சு வந்து விட்டது!" என்கிறார் விஜயகுமாரி.

மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்க ஹைதராபாத்திலும், சென்னையிலும் பயிற்சிகள் எடுத்துக் கொண்டார் விஜயகுமாரி. ஆஷா நிகேதனில் சிறப்புக் கல்வி இயக்குநராகப் பதவி ஏற்றுக் கொண்டார். "நிர்வாகம் பற்றி அப்போதுதான் நிறையத் தெரிந்து கொள்ள முடிந்தது!" என்கிறார். அமெரிக்கா போய் மேற்படிப்புப் படிக்க வாய்ப்பு வந்தும் இவர் போகவில்லை. டாக்டர் லீலா ராஜகோபால் இலவசமாகக் கொடுத்த நிலத்தில் கட்டடம் கட்டி, டே-கேர் சென்டர், ரெஸிடென்ஷியல் பள்ளி என்று எல்லா வசதிகளும் பெற்று இன்று 'காக்கும் கரங்கள்' செயல்படுகிறது.

**வை**ஷ்ணவியும் வந்தனாவும் 19–20 வயதாக இருக்கும்போதே தொடங்கிய 'பான்யன்' அமைப்பு, இப்போது பிரபலமான தொண்டு நிறுவனம்.

டபிள்யூ.ஸி.ஸி. மாணவிகளான இருவரும் 'பான்யன்' ஆரம்பித்தது எப்படி? ஸ்கூல் அஃப் ஸோஷியல் வொர்க்கில் பயின்ற நாளில், ஃபீல்டு வொர்க் செய்யப் போனபோது கண்ட காட்சிகள் இவர்களைத் திணறச் செய்திருக்கின்றன.

ஒருநாள், டபிள்யூ.ஸி.ஸிக்கு வைஷ்ணவியைக் கூப்பிடப் போன வந்தனா, வாசலில் மன நோய் பீடித்த ஒரு பெண்மணி, சிக்குப் பிடித்த தலைமுடியோடு, சாலையில் அங்கு மிங்கும் ஓடுவதைப் பார்த்து, என்ன செய்வது என்று தெரியாமல் விழித்தார்.

கடைசியில் பிரின்சிபல் உதவியுடன், இன்னும் இரண்டு பெண்களோடு சேர்ந்து அவளைத் தங்கள் வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு போய் காப்பாற்றியிருக்கிறார்கள். ஆகஸ்ட் 93ல் மறுபடி இன்னொரு பெண்மணி! இனி ஓர் இடம் இருந்தால் நல்லது என்று தேட ஆரம்பித்தார்கள். 'எப்படி உங்களை நம்புவது? வாடகை எப்படிக் கொடுப்பீர்கள்?' என்றெல்லாம் கேள்விகள்.



'நம்ப ராமு பொய்க்கணக்கு எழுதினாலும் கொஞ்சமாவது நம்பும்படியா இருக்கணும்!''

''ஏன்? என்ன எழுதினான்?''

''ஆபீஸில் தூங்குபவர்களுக்குக் கொசுவலை வாங்கிய வகையில் இரண்டாயிரம் ரூபாய்னு எழுதி இருக்கான்!''

– மெலட்டூர் விசுவநாதன்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

கடைசியில் மொகப்பேரில் ஒரு வீடு வாடகைக்குக் கிடைத்தது. இப்போது நாடெங்கும் மிருந்து மனநோய் தாக்கிய ஆதரவற்ற பெண்கள் இங்கே தங்கியிருந்து சிகிச்சை பெற்று 170 பேர் திரும்பப் போய்விட்டார்கள். 80 பேர் சிகிச்சை பெற்று வருகிறார்கள். கிராமங்களில் இவர்களைக் குடும்பத்தினர் ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதுதான் ஆறுதல்.

ராம்குமாரி என்றொரு பெண்மணியைக் குணப்படுத்தி, உ.பியிலுள்ள பிரதாப்கர் என்ற அவருடைய சொந்த ஊருக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். பத்து வருடங்களுக்குப் பிறகு ஊருக்கு வந்த ராம்குமாரிக்குத் தம் வீடு எது என்று நினைவுக்கு வரவில்லை. கடைசியில் யாரை எல்லாமோ விசாரித்து, அவர் வீட்டுக்குப் போனால் –

அவர் மூத்த மகளுக்கு அன்று திருமணம்!

இனி அம்மா வரமாட்டார், காலமாகிவிட்டார் என்று நினைத்து அவருடைய புகைப்படத்தை வைத்து மாலை போட்டிருந்தார்களாம். ராம்குமாரியைக் கண்டதும் அவரது மகள்களுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவே இல்லையாம்.

" 'பான்யன்' நோயாளிகளுக்கு சுந்தரம் மெடிகல் பவுண்டேஷன் எல்லா உதவிகளையும் அளித்து வருகிறது" என்கிறார் வந்தனா.

**இ**வர்களைக் கண்டறிந்து, நேரே போய்ப் பார்த்து, அவர்களது பணிகளில் பல உதவிகளைச் செய்தவர் பி.என். தேவராஜன். IDPLநிர்வாக இயக்குநராக இருந்

தவர். ரிலையன்ஸ் நிறுவனத்தின் முன்னாள் தலைவர். இவருக்கு வாழ்க்கையே 24 மணி நேரமும்- சமூக சேவைதான். (தமது 80 சதவிகித வருமானத்தை சமூகப் பணிகளுக்காகவே கொடுத்து உதவுகிறார் என்கிறார் ஒரு நண்பர்.)

இன்னொருவர் சி.எஸ்.பணி. (எழுத்தாளர் சுஜாதாவின் நெருங்கிய உறவினர்.) ஐ.டி.பி.ஐ. நிறுவன முன்னாள் நிர்வாக இயக்குநர். சென்னை ஆலப்பாக்கம் 'சிவசக்தி காக்கும் கரங்கள்' அமைப்பின் செயல்பாட்டைப் பார்த்துவிட்டு, தமது பெங்களூர் வீட்டை (மதிப்பு ரூ. 15 லட்சம்)



"இன்னாபா அந்த மேம்பாலத்தில அம்மாங் கும்பல்?"
"தெரியல மேம்பாலங்கீதா? அத்தால அத ஊர்வலம், பொதுக் கூட்டம், உண்ணாவிரதம், ஷூட்டிங்கு நடத்த ஒதுக்கிட்டாங்க!"
- மாதுரி

தானமாகக் கொடுத்து, அங்கு இன்னொரு கிளை தொடங்க எல்லா வசதிகளையும் செய்து கொடுத்திருக்கிறார். "போகிறபோது என்ன கொண்டு போகப் போகிறோம்? அலெக்சாண்டர் சொன்ன மாதிரி 'நான் வெறுங்கையோடு' போய்ச்சேர விரும்புகிறேன்!" என்கிறார் பணி.

மூன்றாமவர் சுவாமி நித்யானந்த கிரி, திருக்கோயிலூர் ஸ்ரீ ஞானானந்த தபோவனத்தைச் சேர்ந்தவர். (பூர்வாசிரமத்தில் மிகப் பெரிய நிறுவனத்தின் ஜி.எம். ஏ.ஸி. காலேஜ் அஃப் டெக்னாலஜியின் கெமிகல் இன்ஜினீயரிங் பட்டதாரி!)

தாம் ஒரு முறை ஜெர்மனி போயிருந்த போது அவர் தங்கிய நண்பரின் வீட்டில் டைனிங் டேபிளில் சாப்பிட உட்கார்ந்த போது ஆறு குழந்தைகள் கூடவே அமர்ந்தார்களாம். 'இரண்டு குழந்தைகள்தானே உனக்கு?' என்று தமது ஜெர்மானிய நண்பரைக் கேட்டார். 'ஆமாம். மீதி நாலு பேரும் நான் வளர்க்கிற அனாதைக் குழந்தைகள் என்றாராம் நண்பர். இப்படி 6 முதல் 12 வயது வரையிலான குழந்தைகள் பல குடும்பங்களில் வளரக் கண்டாராம்.

"ஏன் விருதுக்குப் பெண்களைத் தேர்ந்தெடுத்தீர்கள்?" என்று கேட்கலாம். அவர்கள்தாம் சமுதாய மாற்றத்தின் காரணிகள். 'இத்தனை இளவயதிலேயே விருது கொடுப்பதா?' என்று கேட்கலாம். இளைய தலைமுறையினருக்கு ஊக்கமும் உற்சாகமும் கொடுத்தால்தான், அந்த வயதினர் இன்னும் பல துறைகளில் துணிந்து கால் எடுத்து வைப்பார்கள்!" என்கிறார்.

நான்காமவர் ஸ்ரீராம் நிதி நிறுவனத் தலைவர் அகிலா சீனிவாசன். "நாங்கள் 25 லட்சம் மத்தியதரக் குடும்பங்களின் சேமிப்பைப் பாதுகாத்து வருகிறோம். சமுதாயத்தைச் சார்ந்த தொழில் இது. எத்தனையோ நிதி நிறுவனங்கள் இதே மத்தியதரக் குடும்பங்களை நடுவீதிக்குக் கொண்டு வந்திருக்கிறபோது, எங்கள் நிறுவனம் சமூகத்துக்கு உதவும் ஒரு கருவியாக நினைத்துச் செயல்படுகிறோம்" என்கிறார் அகிலா.

"மாதா மாதம் தானியங்கள், எண்ணெய், சர்க்கரையை உங்களால் முடிந்த அளவுக்கு மிச்சம் பிடித்து எங்கள் சென்டரில் கொடுங்கள். பழைய நியூஸ் பேப்பர் சேர்ந்தாலும் கொடுங்கள் என்று ஒரு திட்டம் இராயப்பேட்டையில் ஆரம்பித்தோம். இப்போது 2000 குடும்பங்கள் இந்தத் திட்டத்தில் உதவி வருகிறார்கள். இதுபோல சமூகத் தொண்டாற்றும் இல்லங்களுக்கு இவற்றை விநியோகிக்கிறோம். (434 1151க்குப் போன் செய்தால் போதும்.) 'ஆசிரமம்' என்ற அனாதை இல்லத்தையும், நடத்தி வருகிறது. சென்ற ஆண்டு பிஸினஸ்வேர்ல்ட் - காம்பேக் அவார்டு, இந்தியாவிலுள்ள மூன்று அமைப்புகளுக்கு வழங்கப்பட்டது. டாடா ஸ்டீல், ஃபோர்பஸ் மார்ஷல், ஸ்ரீராம் குரூப் நிறுவனங்களுக்கு, அவர்களது சமுதாயப் பணிகளைப் பாராட்டி வழங்கப்பட்டது!"

சந்திப்பு, கட்டுரை : **எஸ்.வி.என்.**
படங்கள் : **வெங்கடேஷ்**

# உடற்பயிற்சி செய்யும் ஓவியர்!



• மல்லிகார்ஜுன்



"இரண்டு மாதங்களுக்கு முன்பு ஒரு நாள், ஏனோ என் பாட்டியை திடீரென்று ஓவியமாக வரைந்து பார்க்க வேண்டும் போல் தோன்றியது. அப்படி போர்ட்ரெய்ட் வரைந்து கொண்டிருந்தபோதே அவர் என்னை விட்டு மெல்ல மெல்ல விலகிப் போவது போல எனக்கு ஓர் அதீத உணர்வு உண்டாயிற்று. அதேபோல, இரண்டே நாளில்



அவர் காலமானார். இரண்டு மாதங்களுக்கு நான் தகர்ந்து போய்விட்டேன். அவர் காலமானது என்னை மிக மிகப் பாதித்து விட்டது" என்கிறார் ஓவியர் மல்லிகார்ஜுன்.



''அந்தப் பையனை அடிச்சு அவன் காலை ஏண்டா நொண்டியாக்கினே?''

''நான் சும்மா இருக்கும்போது என்னை 'போடா ஆஸ்திரேலியன் அம்பயர்னு' திட்டினான் சார்!''

– புளியரை கணேசன்



''சுண்டலைத் தின்னுட்டு என்ன டார்லிங் என்னோட தாவணில துடைக்கறீங்க?''

''கை கழுவலாம்னுதான் யோசிச்சேன்; நீ தப்பா நினைச்சுக்கிட்டா...?''

– சீர்காழி வி. ரேவதி

## பரபரப்பான தண்டனை!

அமெரிக்காவில் வசிக்கும் கறுப்பு இனத்தவர் மற்றும் ஆசியர்கள் மீது வன்முறையை ஏவிய குற்றத்துக்காகக் கைது செய்யப்பட்ட மூவரின் வழக்கு, அமெரிக்க நீதித்துறை வரலாற்றில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது. அந்த மூவருக்கும் அளிக்கப்பட்ட தண்டனையின் ஒருபகுதி வித்தியாசமானது. ஆம்! அவர்கள் மூவரும் 'காந்தி' திரைப்படத்தைப் பார்த்துவிட்டு, அது பற்றிய தங்களது எண்ணங்களைக் கட்டுரையாக எழுத வேண்டும் என்பதுதான் அது! 'இது மிகக் கடுமையான தண்டனை' என்று அமெரிக்கர்கள் சிலர் கருத்துத் தெரிவித்துள்ளனர்!

– மௌஷ்மி

சிங்கப்பூரில் ஒரு க்ரூப் எக்ஸிபிஷனில் கலந்து கொண்டு, பரிசும் பெற்ற இருபத்து மூன்று வயது இளைஞர், சென்னை ஓவியக் கல்லூரி மாணவர். இந்த இளைஞரின் தியான அறையில் ஷீரடி சாய்பாபா, மகான் அரவிந்தர் படங்களோடு பாட்டியின் புகைப்படத்தையும் பார்க்க முடிந்தது.

''உண்மையில் என் பாட்டிதான் எனக்கு இன்ஸ்பிரேஷன். அவர்தான் என்னை இன்று ஓர் ஓவியனாக உருவாக்கினார். அவருடைய அன்பும், பாசமும் அளவிட முடியாதது.''

வாட்டர் கலர், ஆயில், அக்ரிலிக் தவிர, மெழுகு போன்ற பாஸ்ட்டென் மீடியாவையும் தமது ஓவியங்களில் உபயோகிக்கிறார். ''அது ஒரு த்ரீ-டைமன்ஷன் தோற்றத்தைத் தருகிறது, பாருங்கள்!''

ஒருவரைப் பார்த்தவுடன் பென்சில் அல்லது பேனாவால் போர்ட்ரெயிட் வரைய அதிக பட்சமாக, இவர் எடுத்துக் கொள்ளுவது ஐந்து முதல் பத்து நிமிடங்களே! ரொம்ப கவனமாகச் செய்ய வேண்டுமானால் அரைமணி அவகாசம் போதுமாம்!

லலித் கலா அகடமி ஷோவுக்காக 35 ஓவியங்களை இந்த மூன்று மாதங்களில் தயாரித்திருக்கிறார். இப்போதே இரண்டு ஓவியங்கள் விற்றுப் போய்விட்டன. மூன்று புக் ஆகியிருக்கின்றன.

''சிங்கப்பூரில் என்ன ஓவியத்துக்குப் பரிசு கொடுத்தார்கள்?''

''அவர்கள் 'சாரிடி' (தர்மம்) என்று தீம் கொடுத்திருந்தார்கள். அதில் ஏழைமையைச் சித்திரிக்கும் ஓவியம் வரைந்திருந்தேன். அதற்குத்தான் பரிசு. நான் முதன் முதலாகச் சிங்கப்பூரில் வரைந்த (மடித்த தினசரி, பாட்டில், பழம், தம்ளர்) ஓவியம் எல்லோர் கவனத்தையும் கவர்ந்தது, மிகுந்த பாராட்டை எனக்கு வாங்கித் தந்தது. உள்ளதை உள்ளபடியே தத்ரூபமாக வரைகிற இந்தப் பாணிக்கு நல்ல வரவேற்பு.''

ஓவியக் கூடத்துக்கு அருகிலேயே, ஹாலில், பாடி பில்டிங்குக்குத் தேவையான ஏராளமான உடற்பயிற்சிக் கருவிகள். ''நான் நிறைய எக்சர்சைஸ் பண்ணுவேன். ஆனால் பாடி பில்டர்கள் எல்லாம் மூளையை அதிகம் உபயோகிக்க மாட்டார்கள் என்று ஒரு கருத்து உண்டு. அதை நான் மாற்ற விரும்புகிறேன். என் ஓவியங்கள், நான் மூளையையும் பயன்படுத்துகிறேன் என்பதைத்தான் தெரிவிக்கின்றன!''என்கிறார் புன்சிரிப்புடன்.

சந்திப்பு: **சித்தார்த்**

# "எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!" என்பது வெறும் பேச்சுத்தானா?


• அறிவுக்கண்ணன்

இந்த முறை நிச்சயம் தேர்ச்சி பெற்றிருப்போம் என்கிற நம்பிக்கையில் தேர்வு முடிவுகளைப் பார்த்த வெ. அறிவுக்கண்ணனுக்கு அதிர்ச்சி. தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் மூலமாக நடத்தப்பட்ட குரூப் ஒன் முதன்மைத் தேர்வுக்காகத் தினசரி பதினான்கு மணி நேரம் படிப்பு படிப்பு... குறிப்புகள் எடுத்தல் என்று மிகக் கடுமையாக உழைத்தும் ஏன் இப்படி? விடைகாண தேர்வாணையத்தை அணுகி விவரம் கேட்டபோது, அவருக்கு மேலும் சில அதிர்ச்சிகள் காத்திருந்தன.

"எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!!" என எப்பொழுதும் முழக்கம் கேட்கும் தமிழ்நாட்டிலா இப்படி என்று ஆடிப் போனார்.

நடந்த சம்பவம் இதுதான்.

கரூர் மாவட்டம், குளித்தலையைச் சேர்ந்தவர் வெ. அறிவுக்கண்ணன். வயது முப்பது.

திருச்சி தேசியக் கல்லூரியில் எம்.ஏ., தமிழ் இலக்கியம். பல்கலைக்கழக அளவில் மதிப்பெண் பட்டியலில் மாநிலத்தில் இரண்டாவது இடத்தைப் பிடித்திருக்கிறார். தமிழ்மொழி மீது அத்தனை ஆர்வம்.

கடந்த ஐந்து வருடங்களாக மத்திய அரசுப் பணியாளர் தேர்வாணையம் நடத்தும் இந்திய ஆட்சிப் பணியாளர் தேர்வுக்கும், தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம் நடத்தும் குரூப் ஒன் முதன்மைத் தேர்வுக்கும் தம்மைத் தயார் செய்து கொண்டு தேர்வுகள் எழுதி வருவதே முழு மூச்சாகக் கொண்டிருக்கிறார்.

அந்த வகையில் 1998 டிசம்பரில் நடைபெற்ற குரூப் ஒன் முதன்மைத் தேர்வில் விருப்பப் பாடங்களில் தமிழ் இலக்கியத்துடன், மானுடவியல் பாடத்தையும் தமிழ் வழியில் எழுதுவதாக விண்ணப்பப் படிவத்தில் பூர்த்தி செய்திருந்தபடி தேர்வுகளும் எழுதி முடித்து விட்டார். இங்குதான் தேர்வாணையத்தின் 'புதிய விதி' என்னும் 'விதி' புகுந்து விளையாடி விட்டது.

"மானுடவியல் பாடத்திற்கான தேர்வுத் தாளை தமிழில் எழுதி விட்டதால் (அதை ஆங்கிலத்தில்தான் எழுத வேண்டுமாம்!) உங்களுடைய தாள் திருத்தப்பட மாட்டாது" என்று தேர்வாணையத்தினர் சொல்லி விட்டார்கள்.

மத்திய அரசுப் பணியாளர் தேர்வாணையம் 1998-ல் நடத்திய இந்திய ஆட்சிப் பணியாளர் தேர்வில் இதே மானுடவியல் பாடத்தைத் தமிழில் எழுதி, தேர்வுத் தாள் மதிப்பீடு செய்யப்பட்டு மதிப்பெண்களும் பெற்றிருக்கிறார் இந்த மாணவர்.

1997-ல் நடைபெற்ற தமிழ்நாடு அரசு நடத்திய குரூப் ஒன் முதன்மைத் தேர்வில் மானுடவியல் பாடத்தை தமிழ் வழியில் எழுதித் தேர்ச்சி பெற்று நேர்முகத் தேர்வுக்கும் அழைக்கப்பட்டிருக்கிறார்.

ஆனால் இப்போதோ தமிழில் எழுதக் கூடாது என்பது தேர்வாணையத்தின் 'புதிய விதி'யாக அமல்செய்யப்பட்டுள்ளது.

'ஏன் இப்படி?' தமிழ் மொழி மீது அளப்பரிய பாசம் கொண்டுள்ள இந்த ஆட்சியிலா இப்படி? அதிர்ச்சி, அறிவுக்கண்ணனுக்கு மட்டுமல்ல; நமக்கும்தான்!

**— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

அந்தச் சிறிய பள்ளிவாசலில் மதியம் தொழுகை வேளையை அறிவிப்பதற்காக மைக் அப்போதுதான் அலற ஆரம்பித்திருந்தது. அப்போது ஒரு போலீஸ் ஜீப் வேகமாக, புழுதியைக் கிளப்பிக் கொண்டு வந்து நின்றது. பள்ளிவாசலுக்கு வெளியே நின்ற கரீம்பாய்தான் இன்ஸ்பெக்டரைப் பார்த்துப் பேசி, அவர் கொடுத்த காகிதத்தை வாங்கிக் கொண்டு வந்தார்.

"கரீம்பாய், என்னவாம்? போலீஸ் வந்திருக்கு?" – கேட்டது சலீம்பாய். கலாசித்ரா காலனியின் இஸ்லாமிய சங்கத்துக்குத் தலைவர்.

"ஒண்ணுமில்ல. இப்படி வீடுங்க இருக்கற இடத்துல நம்ம மைக் வைக்கறது அவங்களுக்குத் தொந்தரவா இருக்காம். அவங்க கொடுத்த புகார் மேல மைக்க நிறுத்தச் சொல்லி போலீஸ் கமிஷனர் உத்தரவு போட்டிருக்கார் சலீம்பாய். இத மதிச்சி நம்ம மைக்க நிறுத்தணுமா, என்ன?"

"கரீம்பாய், இது அந்த அராஜக வக்கில் வரதாச்சாரியோட வேலையாத்தான் இருக்கும். நம்ம இப்ப மைக்க நிறுத்தலேன்னா, போலீஸ் அவங்க பக்கம் சேந்துருவாங்க. இதுக்கு சரியான எதிர் நடவடிக்கை என்னன்னு சொல்றேன். கொஞ்சம் காதைக் கொண்டாங்க."



சலீம்பாய் சொன்னதைக் கேட்ட கரீம்பாயின் முகம் பிரகாசமானது. அடுத்த நிமிடமே மைக் நிறுத்தப்பட்டது.

அன்றிலிருந்து சரியாக நான்காவது நாள். மார்கழி முதல் தேதி அதிகாலை ஐந்து மணிக்கு கலாசித்ரா காலனியில் இருந்த பெருமாள் கோவில் ஒலிபெருக்கியிலிருந்து எம்.எல். வசந்தகுமாரி எல்லோரையும் மார்கழி நீராட அழைத்துக் கொண்டிருந்தார்.

அப்போது அதே போலீஸ் ஜீப், அதே இன்ஸ்பெக்டர். அதே மிடுக்குடன் வந்து கோவில் வாசலில் நின்று கொண்டிருந்த

# சுருக்கு

# வரலொட்டி ரெங்கசாமி

வரதாச்சாரியிடம் போலீஸ் கமிஷனரின் உத்தரவைக் காட்டிக் கொண்டிருந்தார். அதித எரிச்சலுடன் மைக்கை நிறுத்தச் சொல்லிக் கட்டளையிட்டார் வரதாச்சாரி.

இந்த மாதிரி பனிப்போர் இப்போது வரும் வரை யாரும் இந்த விநோதத்தை உணரவில்லை. பெரிதாக நினைக்கவும் இல்லை. ஆனால் அதற்கப்புறம் கலாசித்ரா காலனி இந்திய - பாகிஸ்தான் எல்லை



கலாசித்ரா காலனியில் அடிக்கடி நடக்க ஆரம்பித்து விட்டது. கலாசித்ரா காலனி மதுரை நகரின் எக்ஸ்டென்ஷன் ஏரியாவில் இருந்த ஒரு பழைமையான காலனி. வளைந்த அகலமான ஒரே தெருவை உள்ளடக்கிய கலாசித்ரா காலனியின் அமைப்பு கொஞ்சம் விநோதமானது. தெருவிற்கு நடுவே ஒரு பள்ளிவாசல். அதற்கு நான்கு கட்டடம் தள்ளி ஒரு பெருமாள் கோவில். அது என்னவோ தெரியவில்லை. பெருமாள் கோவிலுக்கு இந்தப் பக்கம் இருந்த ஐம்பது அறுபது வீடுகளில் இந்துக்கள்தான் இருந்தார்கள். அதேபோல் பள்ளிவாசலுக்கு அந்தப் பக்கம் இருந்த ஐம்பது - அறுபது வீடுகளில் முஸ்லீம்கள்தான் இருந்தார்கள். பாப்ரி மஸ்ஜித் விவகாரம் போல ஆகிவிட்டது. இதுவரை பெரிய கலவரம் என்று எதுவும் நடக்கவில்லை. ஆள் பலி எதுவும் விழவில்லை. ஆனால் அதெல்லாம் எப்போது வேண்டுமானாலும் நடக்கலாம் என்னும் அளவிற்கு சூழ்நிலை இறுக்கமாகத்தான் இருந்தது.

இரண்டு மதத்தினருக்கும் நடுவே உள்ளூடாகக் கனன்று கொண்டிருந்த பகைமை நெருப்பு, வரதாச்சாரியும் சலீம்பாயும் ஐந்து வருடங்களுக்கு முன்னால் அந்தக் காலனிவாசிகளான போது கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்தது.

சலீம்பாய் தாம் செய்து கொண்டிருந்த பிசினஸைத் தமது மகனிடம் விட்டு விட்டு தமது ஓய்வுக் காலத்

# வடுரம்




### மிலெனியத்தில் மீண்டு வரும் பிரம்படி!

அண்மையில் பிரிட்டனில் எடுக்கப்பட்ட ஒரு சர்வேயில், பள்ளிக் கூடங்களில் மாணவர்களை தண்டிப்பதற்கு மறுபடி பிரம்புகள் பயன்படுத்தப்பட வேண்டும் என்று பெரும்பாலான பெற்றோர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர். கடந்த பத்தாண்டுகளில் பள்ளி மாணவர்கள் மத்தியில் ஒழுக்கம் சீர் குலைந்து விட்டது என மூன்றில் இரண்டு பங்கினர் கூறியுள்ளனர். பதினாலு வருடங்களுக்கு முன் பிரிட்டனில் அரசு பள்ளிகளில் பிரம்புக்கு தடை போடப்பட்டது. கடந்த வருடம் நாட்டின் எல்லா பள்ளிகளிலும் இது அமலுக்கு வந்தது. மிலெனியத்தில் மாணவர்களுக்குப் பிரம்படி காத்திருக்கிறது! பாவம்!

– சி.எம்.

ளைக் கழிக்க கலாசித்ரா காலனியில் தமது மனைவியுடன் குடியேறினார். மதச்சண்டையில் பட்டுக் கொள்ளாமல் இருந்த அவர், எதிர்ப்பக்கம் வக்கீல் வரதாச்சாரி வந்திருக்கிறார் என்று தெரிந்தவுடன் வரிந்து கட்டிக் கொண்டு களத்தில் குதித்து விட்டார். அந்தத் தெருவாசிகளை வைத்து ஒரு இஸ்லாமிய சங்கம் வைத்து அதற்குத் தலைவரானார்.

சலீம்பாய்க்கு வரதாச்சாரியின் மேல் முன்விரோதம் இருந்தது. சலீம்பாய் சம்பந்தப்பட்ட ஒரு வழக்கில் வக்கீல் வரதாச்சாரி எதிர்த்தரப்புக்கு ஆஜராகி தமது திறமையான வாதத்தால் சலீம்பாய் பக்கத்தைத் தோற்கடித்து விட்டார். இதனால் சலீம்பாய்க்கு சில லட்சங்கள் நஷ்டம். அந்தக் கோபத்தில் சலீம்பாய் இந்தத் தெருவின் இந்து – முஸ்லிம் விவகாரத்தில் எப்படியும் வரதாச்சாரியை அவமானப்படுத்தியே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தார்.

வரதாச்சாரி கலாசித்ரா காலனிக்கு வந்த கதை வேறு. அவர் சென்னையில் பெரிய வக்கீலாகக் கொடிகட்டிப் பறந்து கொண்டிருந்தார். திடீரென்று அவரது மனைவி மாரடைப்பால் இறந்துவிட, அந்த அதிர்ச்சியில் நிலைகுலைந்து போன அவர், உடனே தமது வக்கீல் தொழிலுக்கு முழுக்குப் போட்டு விட்டு, மீதமிருக்கும் வாழ்க்கையை ஆன்மீகத்தில் கழிக்க, கலாசித்ரா காலனிக்கு வந்து விட்டார். அந்தப் பெருமாள் கோவில் வரதாச்சாரியின் தாத்தா கட்டியதாம். அதை ஒட்டியிருந்த தமது பூர்வீக வீட்டுக்கு தனியாளாகக் குடி வந்து விட்டார் வரதாச்சாரி.

வரதாச்சாரி வீர வைஷ்ணவர். பெரிய பக்திமான். சாப்பிடுவது தூங்குவது போக மீதமுள்ள பொழுதை அவர் கோவிலில் தான் கழிப்பார். மத அனுஷ்டானங்களைக் கடைப்பிடிப்பதில் மிகவும் தீவிரமானவர்.

வரதாச்சாரிக்கு பெருமாளுக்கு அடுத்த படி ஈடுபாடு அந்தக் கால தேசத் தலைவர்கள் மீது – அதுவும் மகாத்மா காந்தி என்றால் உயிரை விட்டு விடுவார். மகாத்மாவின் நினைவு நாள் அன்று பல்லில் பச்சைத் தண்ணீர் கூட படாமல் விரதம் இருப்பார். அந்த மாதிரி சமயத்தில் ஒரு அதிகப்பிரசங்கி அவரைத் தெரியாத்தனமாக வம்புக்கிழுத்து விட்டான்.

"ஏன் அய்யரே, நீ மகாத்மா காந்தி, மகான் அது இதுன்னு இப்படி உருகறியே? அவரே 'ஈஸ்வர அல்லா தேரே நாம்'னு தானே சொல்லியிருக்காரு. நீ மட்டும் நம்ம தெய்வம், அவா தெய்வம்னு பிரிச்சுப் பேசறியே? நியாயமா?"

வரதாச்சாரியை மடக்கக் கூட ஆள் இருக்கிறதா என்று கோவில் வாசலில் ஒரு சின்னக் கூட்டம் அவரையே பார்த்துக் கொண்டிருந்தது.

"ஏண்டா, அபிஷ்டு! மத்த மதங்கள் மேல, மத்த தெய்வங்கள் மேல எனக்கு துவேஷம் இல்ல. வெறுப்பு இல்லங்கறதுக்காக மகாத்மா அப்படிச் சொன்னார்டா. ஆனா அதே மகாத்மா குண்டடி பட்டுக் கீழே விழுந்து சாகறதுக்கு முன்னால 'ஹே ராம்'னுதானே சொன்னார்? அப்போ ஏன் 'ஈஸ்வர அல்லா தேரே நாம்'னு சொல்லலை? அத யோசிச்சியா? மத்த மதத்து மேல துவேஷம் கிடையாது. அதே சமயத்துல அவா அவா மதத்தயும் நியமத்தயும் விடக்கூடாதுன்னு அந்த மனுஷ தெய்வம் வாழ்ந்து காமிச்சிருக்காருடா. இது புரியலியே, மக்கு?"

கேட்ட கூட்டம் தன்னிச்சையாகக் கை தட்டியது.

அந்தக் கூட்டம் கலைந்து போனபோது ஒரு பெரியவர் உணர்ச்சிபொங்கச் சொன்னார். "வரதாச்சாரிங்கற சிங்கம் தாண்டா நமக்குக் காவல். அது நம்ம எல்லைல இருக்கற வரைக்கும் அந்தப் பக்கம் இருக்கறவங்க யாரும் வாலாட்ட முடியாது.

மனுஷன் ஒரு உறுமல் உறுமியே விரட்டி விட்டுவான்."

இதற்கிடையில் வரதாச்சாரியைப் பழிவாங்கும் நேரம் வந்து விட்டது என்று கணக்குப் போட்டார் சலீம்பாய். தாம் தலைவராக இருக்கும் இஸ்லாமிய சங்கத்தின் சார்பில் ஏழைகளுக்குத் தொடர்ந்து இரண்டு நாள் கூழ் ஊத்துவது என்று முடிவு செய்தார். அதுவரை தப்பில்லை. அதற்காக கலாசித்ரா காலனியின் பாதித் தெருவை அடைக்கும் அளவிற்குப் பந்தல் போட எண்ணினார். அது கூட தப்பில்லை. ஆனால் அந்தப் பந்தலை, பெருமாள் கோவிலுக்கும் பள்ளிவாசலுக்கும் நடுவில் இருக்கும் வரதாச்சாரியின் வீட்டையும் உள்ளடக்கி, பெருமாள் கோவிலைத் தொடும் அளவிற்குப் போட வேண்டும் என்று அவர் திட்டமிட்ட போதுதான் பிரச்னை வெடித்தது. இஸ்லாமியப் பெரியவர்கள் இது பெரிய கலவரத்துக்கு வழிவகுக்கும் என்று சலீம்பாயைக் கடுமையாக எச்சரித்தார்கள். சலீம்பாய் அதை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை.

"இந்தத் தெரு என்ன அவனுங்க தனிச் சொத்தான்னு கேக்கறேன். அவங்க பண்டிகை வரும்போது நம்ப பள்ளிவாசல் வரைக்கும் பந்தல் போடட்டும். அப்போ நம்ம கரீம்பாய் வீட்டு வாசலையும் வளைத்துத்தான் போடணும். போட்டுக்கட்டும். நான் அதுக்கு மறுப்புச் சொல்லலே. இப்ப அவங்க எதுக்கு மறுப்புச் சொல்லணும்?"

சலீம்பாயின் திறமையான வாதம் அந்தப் பக்கம் இருந்த இளைஞர்களின் வீரத்தைச் கண்டியது. என்ன ஆனாலும் பந்தல் போட்டு விடுவது என்று ஒரு பெரிய கூட்டமே ஏகமனதாகத் தீர்மானம் செய்தது.

தம் மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டி விட்டு வரதாச்சாரியின் வீட்டு வாசலில் ஏதாவது ஏடாகூடம் பண்ணி, அவரைத் தூண்டி விட்டு, அவர் எதிர் நடவடிக்கை எடுக்கும்போது அவரை எப்படியாவது போலீஸில் மாட்டிவிட வேண்டும் என்று துல்லியமாகத் திட்டம் போட்டு வைத்திருந்தார் சலீம்பாய்.

பந்தல் விவகாரம் அந்தப் பக்கத்திற்குத் தெரிந்தவுடன் ஒரு பதற்ற சூழ்நிலை உருவானது. அவர்கள் கூடிப் பேசினார்கள். இவர்கள் கூடிப் பேசினார்கள். இத்தனாம் தேதி இந்த இடத்திலிருந்து இந்த இடம் வரை தெருவை வளைத்துப் பந்தல் போட பஞ்சாயத்து யூனியன் அனுமதியும் வாங்கி விட்டார் சலீம்பாய். ஒரு மதச் சங்கத்திலிருந்து வரும் கோரிக்கையை நிராகரித்து, அதை அநாவசியமாகப் பிரச்னை ஆக்க வேண்டாம் என்று பஞ்சாயத்துத் தலைவர் தீர்மானித்தார். அதே சமயம் போலீசுக்குத் தகவல் சொல்லி இதனால் கலவரம் ஏற்பட வாய்ப்பிருக்கிறது என்றும் எச்சரித்து இரண்டு பக்கமும் நல்ல பெயர் வாங்கி விட்டார். பந்தல் போடும் தேதியை அறிவித்து ஊர் முழுவதும் நோட்டீஸ் ஒட்டினார் சலீம்பாய்.

அதைப் பார்த்த பிறகுதான் வரதாச்சாரியின் தலைமையில் ஒரு போராட்டக் குழு கூடியது. அவர் கையில் மொத்த அதிகாரத்தையும் கொடுத்தது அந்தக் குழு.

''அந்த ஆளு ரொம்ப முன் ஜாக்கிரதையான ஆளாமி.''
''எப்படி சொல்றீங்க?''
''புது வருஷக் காலண்டர் விக்கிற கடைல 'Y2K' ப்ராப்ளம் இல்லாத காலண்டரா பார்த்துக் குடுப்பா'னு கேட்கறாரு!''
– என்.கே. கண்ணன்



"அய்யரே, நீ கண்ணசைச்சா போதும். அவனுங்களை துவம்சம் பண்ணிடறோம். நீ பாத்து என்ன சொல்றியோ அதப் பண்ணிடறோம். ஆனா அவனுங்க பந்தல் போடக் கூடாது. இத சும்மா விட்டம்னா அவனுங்களுக்குத் தொக்காப் போயிரும். ஆமா."

அன்று இரவு முழுவதும் தூங்காமல் சதியாலோசனை செய்து கொண்டிருந்தார்கள். மறுநாள்தான் பந்தல் போட நாள் குறித்திருந்தார்கள். கலாசித்ரா காலனியில் இந்த முறை ரத்த ஆறு ஓடுவதைத் தவிர்க்க முடியாது என்றுதான் தோன்றியது. வேல் கம்பு ஆயுதங்களுடன் நூறு பேர் கொண்ட படை ஒன்றைத் தயார் செய்தார் வரதாச்சாரி. எப்படிப் பாதுகாக்க வேண்டும், எப்படித் தாக்க வேண்டும் என்று திட்டம் தீட்டினார்கள். அவர்கள் இருந்த இடத்துக்கு பத்து வீடு தள்ளி சலீம்பாய் தலைமையில் ஒரு போராட்டக் குழு சதியாலோசனை செய்து

## ரசிகர்களைத் தவிக்க விடும் மாதுரி!

**மா**துரி தீட்சித்தின் ரசிகர்கள், அவரது திருமணம் காரணமாக ஏற்கெனவே கனவு கலைந்து சோகத்தில் இருக்கிறார்கள். அது போதாது என்று இன்னும் ஒரு செய்தி தெரிவித்திருக்கிறார் மாதுரி. இனி அவர் நடிக்கப் போவதில்லை. இன்னும் இரண்டு மாதத்தில் லாஸ் ஏஞ்சல்ஸ் நகரில் செட்டில் ஆகி, குடித்தனம் பண்ணப் போகிறார். நம்ம ஊர் நடிகைகள் மாதிரி மறுபடியும் இங்கே வந்து சினிமாவில் அம்மாவேடமும், டீ.வி. தொடரிலும் நடிப்பாரா? 'மாதுரி அதுபோல் செய்ய மாட்டார்' என்கிறது பாலிவுட்!



– சி.எம்.

கொண்டிருந்தது. வரதாச்சாரிக்கு வன்முறையை விட்டால் வேறு வழி தெரியவில்லை. கோர்ட்டுக்குப் போய் தடையுத்தரவு வாங்கலாம் என்றால், சலீம்பாய் முன்னெச்சரிக்கையாகக் கோர்ட்டுக்குப் போய், தமது சிறுபான்மைச் சங்கம் நல்ல காரியம் செய்வதை யாரும் தடுக்கக் கூடாது என்று ஓர் உத்தரவை வாங்கி வந்து விட்டார்.

வரதாச்சாரி அன்று இரவு தமது பெருமாளையே பார்த்துக் கொண்டு ரொம்ப நேரம் உட்கார்ந்து கொண்டிருந்தார். மறுநாள் நடக்கும் மகாபாரதப் போரில் தர்மம் வெல்ல வேண்டும் என்று பெருமாளை மனமுருகப் பிரார்த்தித்துக் கொண்டேயிருந்தார்.

**ம**றுநாள் காலை. அந்தத் தெருவின் இரு பக்கத்திலும் நல்ல கூட்டம் திரண்டிருந்தது. ஒவ்வொரு பக்கத்திலும் ஐந்நூறு பேருக்குக் குறையாமல் இருந்தார்கள். வரதாச்சாரியும் சலீம்பாயும் படைத் தலைவர்கள் போல கடைசி நிமிட ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தார்கள். பஞ்சாயத்துத் தலைவர் கொடுத்த எச்சரிக்கையை மதித்து ஒரு இன்ஸ்பெக்டரும் நான்கு போலீசாரும் வந்திருந்தார்கள். கூட்டத்தைப் பார்த்த இன்ஸ்பெக்டர் பதறி விட்டார். வயர்லெசில் குரல் நடுங்கப் பேசிக் கொண்டிருந்தார்.

"சார், நாம நினைச்சதை விட நிலைமை ரொம்ப மோசமா இருக்கு. ஆயிரம் பேருக்கு மேலே கூடியிருக்காங்க. எல்லார் கையிலயும் வேல் கம்பு கத்தின்னு ஆயுதம் இருக்கு. இன்னும் பத்து நிமிஷத்துல பெரிய கலவரம் வெடிச்சுரும். எப்படியாவது ஸ்ட்ரைக்கிங் ஃபோர்ஸ் – அதிரடிப் படைய அனுப்பிருங்க சார். இல்லன்னா கதை கந்தல்தான்."

வாட்சைப் பார்த்துக் கொண்டிருந்த சலீம்பாய் சரியாக ஒன்பது மணிக்குக் கையில் கட்டுமஸ்தான ஐந்தாறு பேர்களுடன் வரதாச்சாரியை நோக்கிக் கோபமாக வந்தார். உடனே இந்தப் பக்கத்திலிருந்து பத்துப் பேர் கம்புடன் வரதாச்சாரியைச் சுற்றி வியூகம் அமைத்தனர். இன்ஸ்பெக்டர் இந்தக் காட்சியைப் பார்த்தபடியே தமது மேலதிகாரிக்கு நேர்முக வர்ணனை செய்து கொண்டிருந்தார். வியூகத்துக்கு வெளியில் இருந்தபடி சலீம்பாய் கத்தினார்.

"வரதாச்சாரி, எங்காளுங்க இப்போ தெருவை வளச்சிப் பந்தல் போடப் போறாங்க. அடுத்த ரெண்டு நாளைக்கு ஏழைங்களுக்குக் கூழ் ஊத்தப் போறோம். உங்களால என்ன பண்ண முடியும்? என்ன பண்ண முடியுமோ பண்ணிக்கங்க. டேய் பந்தல்காரங்கள இங்க கூப்பிடுறா."

"அதெப்படி சலீம்பாய் நாங்க சும்மா இருப்போம்? நாங்க என்ன பண்ணப் போறோம்னு கேட்டுக்கங்க. ரெண்டு நாள் தானே கூழ் ஊத்தப் போறதாச் சொன்னீங்க? அதுல ஒரு நாள் கூழுக்கு ஆற செலவு எங்களச் சேந்தது. அது மட்டுமில்ல. கூழக் காச்ச, வர ஜனங்கள வரிசைல நிக்க வச்சி ஒழுங்குபண்ண என்னுடைய தலைமைல ஒரு தொண்டர் படை ரெண்டு நாளும் வேல பாக்கும். இதுக்கும் மேல வேணும்னா, நீங்க கேளுங்க, நாங்க பண்றோம்."

சலீம்பாய் விக்கித்து நின்றார். வயர்லெசில் இவர்களைப் பார்த்தபடி பயத்தில் வேகவேகமாகப் பேசிக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர், வரதாச்சாரி சொன்னதைக் கேட்டுத் தமது பேச்சை பட்டென்று நிறுத்தி வரதாச்சாரியையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். வயர்லெசில் இருந்து 'ஹலோ' 'ஹலோ' என்று கேட்ட குரல் தவிர அந்த இடமே நிசப்தமாக இருந்தது. ⭘

# பொன்னியின் செல்வன்



## பதினாறாம் அத்தியாயம்

## "மலையமானின் கவலை"

மாளிகைக்கும் மதில் சுவருக்கும் இடையிலிருந்த நிலா முற்றப் பகுதியில் கந்தமாறன் வழி காட்டிக்கொண்டு செல்ல, கரிகாலன் சுற்று முற்றும் பார்த்துக்கொண்டு நடந்தான். மற்ற நால்வரும் பின்தொடர்ந்து சென்றார்கள்.

குரவைக் கூத்துக்காக மேடையும் கொட்டகையும் போட்டிருந்த இடத்தை அடைந்ததும் கரிகாலன் நின்றான்.

"ஓகோ! இது என்ன? இங்கே என்ன நடக்கப் போகிறது?" என்று கேட்டான்.

"கோமகனே! தங்களுக்கு விருப்பமாயிருந்தால், இங்கே குரவைக் கூத்து வைக்கலாம் என்று உத்தேசம்..."

"ஆகா! ரொம்ப நல்லது! குரவைக் கூத்து வையுங்கள். வில்லுப் பாட்டு வையுங்கள். கரிகால் வளவர் நாடகம், விஜயாலய சோழர் நாடகம் எல்லாம் வையுங்கள். பகலெல்லாம் காட்டில் வேட்டையாடுவதில் கழிப்போம். இரவெல்லாம் பாட்டிலும் கூத்திலும் கழிப்போம். சம்புவரையரே! என் பாட்டன் மலையமான் எனக்கு என்ன சொல்லி அனுப்

அமரர் கல்கி

பினான், தெரியுமா! கடம்பூர் சம்புவரையன் மாளிகையில் இருக்கும் போது, 'இரவில் தூங்காதே!' என்று எச்சரிக்கை செய்தான். நான் என் பாட்டனுக்கு என்ன மறுமொழி சொன்னேன், தெரியுமா? 'பாட்டா! நான் பகலிலும் தூங்குவதில்லை; இரவிலும் தூங்குவதில்லை. நான் தூங்கி மூன்று வருஷம் ஆகிறது. ஆகையால் நான் தூங்கும்போது விரோதிகள் எனக்கு ஏதேனும் தீங்கு செய்து விடுவார்கள் என்று பயப்பட வேண்டாம். நான் விழித்துக் கொண்டிருக்கும்போதே யாராவது தீங்கு செய்தால்தான் செய்யலாம். அவ்வளவு துணிச்சலுள்ள ஆண் மகன் யார் இருக்கிறான்?' என்று மலையமானுக்குத் தைரியம் சொல்லி விட்டு வந்தேன்!'' என்று கூறி விட்டுக் கரிகாலன் கடகடவென்று சிரித்தான்.



சம்புவரையர் கோபத்தினால் நடுங்கிய குரலில், ''ஐயா! தாங்கள் தூங்கினாலும் சரி, விழித்துக்கொண்டிருந்தாலும் சரி... தங்களுக்கு எவனும்... இந்த மாளிகையில் இருக்கும்போது.... தீங்கு செய்யத் துணிய மாட்டான்!'' என்றார்.

''ஆம், ஆம்! கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்குள் எனக்குத் தீங்கு செய்யக் கூடியவன் யார் இருக்க முடியும்? அல்லது வெளியிலிருந்து இவ்வளவு பெரிய மதில் சுவர்களைத் தாண்டி யார் வர முடியும்? யமன்கூட வர முடியாது. கடம்பூர் சம்புவரையர் என்றால் யமன் கூடப் பயப்படுவானே? அந்தத் திருக்கோவலூர்க் கிழவனாரின் வீண் கவலையைப் பற்றி உங்களுக்குச் சொன்னேன். வயதாகி விட்டதல்லவா? சில பேருக்கு வயதானால் மனோ தைரியம் குறைந்து விடுகிறது. அடுத்தாற்போல், என் பழுவூர்ப் பாட்டனைப் பாருங்கள்! எவ்வளவு மிடுக்காக நடந்து வருகிறார்? அறுபது பிராயத்தைக் கடந்தவர் என்று யாராலாவது சொல்ல முடியுமா?''



என்று கூறிச் சிறு நகை செய்தார் கரிகாலன்.

பழுவேட்டரையர் இதற்கு மறுமொழி ஏதேனும் சொல்ல வேண்டும் என்று எண்ணித் தமது தொண்டையைக் கனைத்துக்கொண்டார். புது சிங்க கர்ஜனையைப் போல் முழங்கிற்று.

"பாருங்கள்! பெரிய பழுவேட்டரையர் தொண்டையைக் கனைத்தால் பாரெல்லாம் நடுங்கும் என்று சொல்லுவது எவ்வளவு சரியாயிருக்கிறது? கந்தமாறா! வந்தியத்தேவா! பார்த்திபேந்திரா! நீங்கள் எல்லாம் பழுவூர்ப் பாட்டன் வயதில் இவ்வளவு திடமாக இருப்பீர்களா என்று யோசித்துப் பாருங்கள். ஒருவேளை அவரைப் போல் தொண்டையைக் கனைப்பீர்கள். ஆனால் அவர் வயதில் அந்தப்புரத்துக்குப் புதிய பெண்ணைக் கொண்டு வர மாட்டீர்கள். தாத்தா! தங்களுடன்

இளையராணியையும் அழைத்து வந்திருக்கிறீர்கள் போலிருக்கிறதே! முன் வாசல் மாடத்தில் பார்த்தேன்! இளைய ராணி எப்படிப் பிரயாணம் செய்து வந்தார்கள்? மூடுபல்லக்கிலா? ரதத்திலா? அல்லது வண்டியிலா?''

பழுவேட்டரையர் அப்போது குறுக்கிட்டு, ''யானை மீது அம்பாரியில் வைத்து நாடு நகரமெல்லாம் அறிய அழைத்து வந்தேன்!'' என்று பெருமிதத்துடன் கூறினார்.

''அப்படித்தான் செய்ய வேண்டும், தாத்தா! இனிமேல் எப்போதும் அப்படியே செய்யுங்கள்! மூடு பல்லக்கில் மட்டும் அழைத்து வர வேண்டாம். அதனால் பல விரஸமான வதந்திகள் ஏற்படுகின்றன. ஒரு வேடிக்கையைக் கேளுங்கள். பழுவூர் இளையராணியின் மூடு பல்லக்கில் சில சமயம் என் சித்தப்பன் மதுராந்தகன் இரகசியமாக ஏறிக்கொண்டு ஊர் ஊராகப் போய் வருகிறானாம்! இப்படி ஒரு வதந்தி நாடெங்கும் பரவியிருக்கிறது!'' என்று கரிகாலன் கூறி இடி இடியென்று சிரித்தான்.

ஆனால் அங்கிருந்த மற்றவர்கள் யாரும் சிரிக்கவில்லை. ஒவ்வொருவர் மனத்திலும் ஒவ்வொரு விதக் கலக்கம் ஏற்பட்டது.

வந்தியத்தேவன் தன் மனத்திற்குள் ''ஐயோ! எப்பேர்ப்பட்ட தவறு செய்து விட்டோம்! இந்த வெறி பிடித்த மனிதரிடம் எல்லாவற்றையும் சொல்லி விட்டோமே! ஒன்றையும் மிச்சம் வைத்துக் கொள்ளாமல் பகிரங்கப்படுத்தி விடுவார் போலிருக்கிறதே!'' என்று எண்ணிக் கலங்கினான்.

பெரிய பழுவேட்டரையரின் உள்ளம் எரிமலையின் உட் பிரதேசத்தைப் போல் தீயும் புகையுமாகக் குழம்பிக் கொதித்துக் கனன்றது. தீயும் புகையும் எரிமலை வாயின் வழியாக வருவதற்கு முன்னால் உண்டாகும் பயங்கர உறுமலைப் போல் அவர் மீண்டும் தொண்டையைக் கனைத்துக்கொண்டார்.

அவர் பேசுவதற்கு முன் பார்த்திபேந்திரன் ஓர் அடி முன்னால் பெயர்ந்து வந்து, ''கோமகனே! பழுவூர் இளையராணியை நான் வெகு சிறிய காலந்தான் பார்த்துப் பழக நேர்ந்தது. அதற்குள்ளேயே அவர் எத்தகைய பத்தினித் தெய்வம் என்பதை அறிந்து கொண்டேன். பழுவூர் ராணியைப் பற்றி யாரேனும் அவதூறு கூற முற்பட்டால் அவனை அந்தக் கணமே என் வாளுக்கு இரையாக்குவேன்! இது சத்தியம்!'' என்று சொன்னான்.

கந்தமாறன் பின்னால் ஒரு அடி வந்து நின்று, ''என் கையில் கத்தி எடுக்க வேண்டிய அவசியமே இல்லை. பழுவூர் இளைய ராணியைப் பற்றி அவதூறு கூறுகிறவனை என் கையினாலேயே கழுத்தை நெரித்துக் கொன்று விடுவேன். இது சத்தியம்!'' என்றான்.

இதைக் கேட்ட வந்தியத்தே னும் ஒரு அடி முன் வந்து, ''நானும் அ ப்படித் தான்! பழுவூர் ராணியைப் பற்றி யாரேனும் தவறாகப் பேசி ால், என் கண் பார்வையினாலேயே அவனைச் சுட்டெரித்து விடுவேன்!'' ன்றான்.

''ஆஹாஹா! கொஞ்ம் பொறுங்கள், நண்பர்களே! என்னி ம சண்டைக்கு வந்து விடுவீர்கள் ாலிருக்கிறதே! பார்த்தீர்களா, தாத்த தமிழ்ப் பெண் குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதில் இவர்கள் எவ்வளவு துடிப்புடன் இருக்கிறார்கள்? ஆனால் பழூம் இளையராணியைப் பற்றி னால், அவதூறு சொல்லி ல. செ சும்மா நானும் கேட் கெ இருக்க மாட் ன். இந் வீராதி வீரர்கள் வருவரையில் அப்படி அவதூறு சொன் வனை நான் உயிரோடு வைத்திருக்க மாட்டேன். பழுவூர் இளை ராணியின் மூடு பல்லக்கைப் பற்றித்தான் குறை சொல்லுகிறார்கள்! அந்த கோழை மதுராந்தகன் பழுவூர் ராணியின் மூடு பல்லக்கில் ஊர் ஊராக இரகசியப் பிரயாணம் செய்கிறானாம்! எப்போது ஆண் மகன் ஒருவன் மூடு பல்லக்கில் இரண்டு பக்கத்திலும் திரை விட்டுக்கொண்டு பிரயாணம் செய்கிறானோ, அப்போது இளையராணியும் அப்படிப் பிரயாணம் செய்தால் சில அனர்த்தங்கள் விளையக்கூடும் அல்

லவா...?''

''கோமகனே! பராந்தக சக்கரவர்த்தியின் பேரனும் கண்டராதித்தருடைய திருமகனுமான மதுராந்தகத் தேவர் எதற்காக மூடு பல்லக்கில் பிரயாணம் செய்ய வேண்டுமாம்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே?'' என்றான் பார்த்திபேந்திர பல்லவன்.

''அதன் காரணமும் ஒரு வேடிக்கையான காரணந்தான்! மதுராந்தகன் மூடு பல்லக்கில் ஏறிக்கொண்டு ஊர் ஊராகப் போய்த் தன் கட்சிக்குப் பலம் திரட்டிக்கொண்டு வருகிறானாம்...!

''எதற்காகப் பலம் திரட்டுகிறது?''

''எதற்காகவா? என் தகப்பனாருக்குப் பிறகு சோழ ராஜ்ய சிம்மாசனத்தில் அவன் ஏறுவதற்காகத்தான்! எப்படியிருக்கிறது கதை? சில மாதங்களுக்கு முன்பு ஒருநாள் இந்தக் கடம்பூர் மாளிகைக்குக் கூட அவன் அப்படி மூடு பல்லக்கில் இரகசியமாக வந்திருந்தானாம். நள்ளிரவில் சதியாலோசனைக் கூட்டம் ஒன்று இங்கே நடந்ததாம். பார்த்திபேந்திரா! திருக்கோவலூர் கிழவனார் நீயும் என்னுடன் இருந்தபோது தானே இதையெல்லாம் சொன்னார்? மதுராந்தகனுக்குச் சிம்மாசனம் ஏறுவதற்கு உள்ள ஆர்வத்தினால் அவசரப்பட்டு என் தந்தையைக் கொஞ்சம் சீக்கிரமாகவே சொர்க்கத்துக்கு அனுப்பினாலும் அனுப்பி விடுவான் என்று சொன்னாரே? அதெல்லாம் உனக்கு நினைவில்லையா?''

''நினைவுக்கு வருகிறது, இளவரசே! அதையெல்லாம் அப்போதும் நான் நம்பவில்லை. இப்போதோ, சிறிது கூட நம்பவில்லை. தஞ்சாவூருக்குப் போய்த் தங்கள் தந்தையை நேரில் தரிசித்து விட்டு வந்த பிறகு...''

''நீ மட்டும் என்ன? நானுங் கூடத்தான் நம்பவில்லை. நம்பியிருந்தால் இந்தக் கடம்பூர் மாளிகைக்கு விருந்தாளியாக வந்திருப்பேனா?'' என்று கூறிக் கரிகாலன் மீண்டும் எதையோ நினைத்துக்கொண்டவன் போல் சிரித்தான்.

கடம்பூர் சம்புவரையர் தொண்டையைக் கனைத்துக்கொண்டு, ''கோமகனே! திருக்கோவலூர் மலையமான் குலத்துக்கும் எங்கள் குலத்துக்கும் நீண்ட கால விரோதம் என்பது தங்களுக்குத் தெரிந்திருக்கும்!'' என்றார்.

''தெரியாமல் என்ன? அந்த விரோதங்களைப் பற்றிச் சங்கப் புலவர்கள் பாடியிருக்கிறார்களே? கொல்லிமலை வல்வில் ஓரியை மலையமான் திருமுடிக்காரி சண்டையில் கொன்றான். வல்வில் ஓரியின் வம்சத்தில் நீங்கள் வந்தவர்கள். ஆகையால் அந்த விரோதத்தை இன்னமும் வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்...''

''கோமகனே! வல்வில் ஓரியின் சாவுக்கு உடனே பழி வாங்கப்பட்டது. வல்வில் ஓரியின் உறவினனாகிய அதியமான் நெடுமானஞ்சி திருக்கோவலூர் மீது படையெடுத்துச் சென்று அந்த ஊரையும் அழித்தான்; மலையமானுடைய முள்ளூர் மலைக்கோட்டையையும் தரைமட்டமாக்கினான்...''

''சம்புவரையரே! அதியமான் மட்டும் தனியாக அந்தக் காரியத்தைச் செய்து விடவில்லை. என் முன்னோனாகிய சோழன் கிள்ளி வளவனுடைய உதவியைக் கொண்டுதான் மலையமான் மீது அதியமான் வெற்றி அடைந்தான். அந்தப் பழைய கதையெல்லாம் இப்போது எதற்கு...?''

''நாங்கள் மறந்து விட்டாலும், மலையமான் மறப்பதில்லை. ஏதாவது எங்கள் பேரில் அவன் குற்றம் சாட்டிக்கொண்டிருக்கிறான்...''

''நான்தான் சொன்னேனே? கிழவருக்கு வயதாகி விட்டது; ஆகையால் புத்தியும் தடுமாறுகிறது. நான் இங்கே இருக்கும்போது எனக்கு ஆபத்து ஒன்றும் வராமல் பாதுகாப்பதற்காக அவன் ஒரு பெரும் சைன்யத்தைத் திரட்டிக்கொண்டு வராமல் இருக்க வேண்டுமே என்றுகூட எனக்குக் கொஞ்சம் கவலையாயிருக்கிறது...''

''இளவரசே! அப்படி ஏதேனும் தங்களுக்குச் சந்தேகம் இருந்தால்...'' என்று சம்புவரையர் தடுமாறினார்.



"எனக்குச் சந்தேகமா? இல்லவே இல்லை. மலையமானோடு எங்கள் உறவு இரண்டு தலைமுறையாகத்தான். பழுவேட்டரையரோடு எங்கள் உறவு ஆறு தலைமுறையாகத் தொடர்ந்து வந்திருக்கிறது. பழுவூர் அரசரே இங்கே வந்திருக்கிறார். அவர் சோழ குலத்துக்கு விரோதமாக ஏதும் செய்வார் என்று நினைக்க எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?" என்று கரிகாலன் கூறிப் பைத்தியச் சிரிப்புச் சிரித்தான்.

பழுவேட்டரையர் கம்பீரமான குரலில் "இளவரசே! சோழ குலத்துக்கு விரோதமாக நான் எதுவும் செய்ய



மாட்டேன்; இது சத்தியம். தர்ம நியா யத்துக்கு விரோதமாகவும் எதுவும் எப் பொழுதும் செய்ய மாட்டேன். இது இருமடங்கு சத்தியம்!" என்றார்.

"ஆமாம், ஆமாம்! தர்ம நியாயம் என்பதாக ஒன்று இருக்கத்தான் இருக் கிறது. அதைப் பற்றித் தங்களிடம் பேசித் தெரிந்து கொள்ளத்தான் வந் தேன். வேட்டையாடும் நேரமும், கூத்துப் பார்க்கும் நேரமும் போக ஒழிந்த நேரத்தில் சற்று தர்ம நியாயத் தையும் பற்றிப் பேசலாம்! சம்புவரை யரே! இந்தப் பிரம்மாண்டமான அரண்மனையில் நானும் என் சிநே

கிதர்களும் தங்குவதற்கு எந்த இடத்தை ஏற்படுத்தியிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான் கரிகாலன்.

''ஐயா! தங்களுக்கும் பழுவூர் மன்னருக்கும் பின் கட்டில் விருந்தினர் விடுதி முழுவதையும் ஒதுக்கி விட்டிருக்கிறோம். மற்றபடி வரக்கூடிய சிற்றரசர்களையெல்லாம் என்னோடு முன் கட்டிலேயே வைத்துக் கொள்வேன்.''

''ஓகோ! இன்னும் சிற்றரசர்களும் வரப் போகிறார்களா?''

''ஆம்; இளவரசே! தங்களை இங்கே சந்திப்பதற்குச் சுற்றுப் புறமுள்ள குறுநில மன்னர்கள் எல்லாரும் ஆவலாயிருக்கிறார்கள். பலரும் வருவார்கள்.''

''வரட்டும்; வரட்டும்! எல்லாரும் வரட்டும்! ரொம்ப நல்லது. யோசித்து முடிவு செய்ய வேண்டியதை ஒரு வழியாக முடிவு செய்து விடலாம். மதுராந்தகனுடைய சதியாலோசனை ஒருபுறம் இருக்கட்டும். நானே உங்களுடன் சேர்ந்து ஒரு சதியாலோசனை செய்ய விரும்புகிறேன். அதற்கு இந்த மாளிகையைக் காட்டிலும் தகுந்த இடம் கிடைக்காது!'' என்றான் கரிகாலன்.

பதினேழாம் அத்தியாயம்

# பூங்குழலியின் ஆசை

நாகைப்பட்டினத்திலிருந்து கோடிக்கரை வரையில் சென்ற ஓடையில் பூங்குழலியின் படகு போய்க்கொண்டிருந்தது. பூங்குழலியோடு சேந்தன் அமுதனும் அப் படகில் இருந்தான். படகு கோடிக்கரையை நெருங்கிக் கொண்டிருந்தது.

ஓடைக் கரையில் தங்க நிறத் தாழம் பூக்கள் மடல் விரித்து மணத்தை அள்ளி எங்கும் வீசிக்கொண்டிருந்தன.

ஒரு தாழம்பூவின் மீது பச்சைக் கிளி ஒன்று பறந்து வந்து உட்கார்ந்தது. அது உட்கார்ந்த வேகத்தில் தாழம்பூ ஊஞ்சல் ஆடுவது போல் ஆடியது. பச்சைக் கிளியும் அத்துடன் ஆடி விட்டுப் பிறகு அதன் தங்க நிற மடலைத் தன் பவள நிற மூக்கினால் கொத்தியது.

படகு நெருங்கியதும், பச்சைக் கிளி 'கிக்கி' 'கிக்கி' என்று கத்திக்கொண்டு பறந்தோடி விட்டது.

'பிறந்தால் பச்சைக் கிளியாகப் பிறக்க வேண்டும்!'' என்றாள் பூங்குழலி.

''நீ அவ்விதம் எண்ணுகிறாய்! அதற்கு எத்தனை கவலையோ, எவ்வளவு கஷ்டமோ, யார் கண்டது?'' என்றான் சேந்தன் அமுதன்.

''என்ன கவலை, கஷ்டம் இருந்தாலும், இஷ்டம் போல் எல்லையற்ற வானத்தில் பறந்து செல்ல முடிகிறதல்லவா? அதைக் காட்டிலும் இன்பம் வேறு உண்டா?'' என்றாள் பூங்குழலி.

''அப்படிப் பறந்து திரியும் பச்சைக்



கிளியைச் சிலர் பிடித்துக் கூண்டில் அடைத்து விடுகிறார்களே!'' என்றான் சேந்தன் அமுதன்.

''ஆமாம், ஆமாம்! அரண்மனைகளில் வாழும் இராஜ குமாரிகள் பச்சைக் கிளிகளைக் கூண்டுக்குள் அடைத்து வைக்கிறார்கள்! குரூர ராட்சஸிகள்! கிளிகளைக் கூண்டில் அடைத்துவிட்டு அவற்றுடன் கொஞ்சி விளையாடுகிறார்கள்! நான் மட்டும் ஏதேனும் ஓர் அரண்மனையில் சேடிப் பெண்ணாயிருந்தால், கூண்டில் அடைபட்ட கிளிகளுக்கு விஷம் வைத்துக் கொன்று விடுவேன். கிளிகளைப் பிடித்துக் கூண்டில் அடைக்கும் இராஜ குமாரிகளுக்கும் விஷத்தைக் கொடுத்து விடுவேன்...''

''நீ இப்போது பேசுவதைக் கேட்டால், உன்னையும் குரூர ராட்சஸி என்றுதான் சொல்லுவார்கள்.''

''சொன்னால் சொல்லட்டும்! நான் ராட்சஸியாயிருந்தாலும் இருப்பேன்; இராஜ குமாரியாயிருக்க மாட்டேன்.''

''இராஜ குமாரிகளின் மீது உனக்கு ஏன் இத்தனை கோபம், பூங்குழலி! பார்க்கப் போனால், அவர்கள் பேரிலும் பரிதாபப்பட வேண்டியதல்லவா? கூண்டில் அடைபட்ட பச்சைக் கிளிகளைப் போலத்தான் அவர்களும் அரண்மனைக்குள் அடைபட்டுக் காலங் கழிக்க வேண்டியிருக்கிறது. தப்பித் தவறி அவர்கள் வெளியில் புறப்பட்டால், எத்தனை இரகசியம்? எத்தனை ஜாக்கிரதை? உன்னைப் போல் அவர்கள் படகில் ஏறிக்கொண்டு, தன்னந் தனியாக ஓடையிலும் கடலிலும் போக முடியுமா? இஷ்டப்படி துள்ளித் திரியும் மானைப் போல் காட்டில் சுற்றி அலைய முடியுமா?''

''அவர்களை யார் அடைந்து கிடக்கச் சொல்கிறார்கள்? நான் சொல்லவில்லையே? இஷ்டமிருந்தால் அவர்களும் காட்டில் அலைந்து திரிவது தானே?''

''இஷ்டம் மட்டும் போதாது. அவரவர்களுடைய பிறப்பு வளர்ப்பையும் பொறுத்தது. கிளியைப் போல் நீயும் வானத்தில் பறக்க விரும்புகிறாய்... அது முடிகிற காரியமா? கடற்கரையில் நீ பிறந்து வளர்ந்தாய். அதனால் இவ்வளவு சுயேச்சையாக இருக்க முடிகிறது. அரண்மனையில் பிறந்து வளர்ந்தவர்களால் அது முடியாது. இன்னும் ஒரு விசித்திரத்தைக் கேள். சில நாள் கூண்டில் அடைபட்டு இராஜ குமாரிகளின் கையினால் உணவு அருந்திப் பழக்கப்பட்ட கிளிகள், பிறகு கூண்டைத் திறந்து விட்டாலும் ஓடிப் போகவே விரும்புவதில்லை. சிறிது தூரம் பறந்து வட்டமிட்டு விட்டு, பிறகு 'கிறீச்' 'கிறீச்' என்று கத்திக்கொண்டு கூண்டுக்குத் திரும்பி வந்து விடும். தஞ்சையிலும் பழையாறையிலும் உள்ள அரண்மனைகளில் இதை நானே நேரில் பார்த்திருக்கிறேன்...''

''அவ்விதம் கூண்டில் அடைபடுவதற்கு நான் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன். நான் கிளியாயிருந்தால் சொல்கிறேன். என்னைக் கூண்டில் அடைத்து வைத்து அமுதூட்ட வரும் இராஜகுமாரியின் கையை வெடுக்கென்று கடித்து விடுவேன்...''

''கூண்டில் அடைபட்ட கிளியாயிருக்கவும் நீ விரும்ப மாட்டாய். அரண்மனையில் அடைபட்ட அரசிளங்குமரியாயிருக்கவும் நீ விரும்ப மாட்டாயல்லவா?''

''மாட்டவே மாட்டேன். அதைக் காட்டிலும் விஷந்தின்று உயிரை விட்டு விடுவேன்!''

''அதுதான் சரி! அப்படியானால் அரண்மனையில் வாழும் இராஜகுமாரனைக் கலியாணம் செய்து கொள்ளவும் நீ ஆசைப்படக் கூடாது!''

கீழ் வானத்தில் கருமேகங்கள் திரண்டு கொண்டிருந்தன. அவ்வப்போது பளீர் பளீர் என்று மின்னல்கள் மின்னிக் கொண்டிருந்தன. இடியின் குமுறல் இலேசாகக் கேட்டுக்கொண்டிருந்தது.

சேந்தன் அமுதன் கடைசியாகச் சொன்னதைக் கேட்டதும் பூங்குழலியின் கண்களிலிருந்து பளீர் என்று மின்னல் கற்றைகள் புறப்பட்டன.

''நான் இராஜ குமாரனைக் கலி

யாணம் செய்து கொள்ள ஆசைப் படுவதாக உனக்கு யார் சொன்னது?'' என்று கோபமாகக் கேட்டான்.

''எனக்கு யாரும் சொல்லவில்லை. நானாகத்தான் சொன்னேன். உன் மனத்தில் அத்தகைய ஆசை இல்லாவிட்டால் நல்லதாய்ப் போயிற்று. நான் சொன்னதை மறந்து விடு!'' என்றான் சேந்தன் அமுதன்.

சற்று நேரம் அந்தப் படகில் மௌனம் குடிகொண்டிருந்தது. சேந்தன் அமுதன் துடுப்பினால் படகு தள்ளும் சத்தமும், வறட்டுத் தவளைகளின் குரலும், கடற் பறவைகளின் ஒலியும், கடல் அலைகளின் ஓசையும், அவ்வப்போது கீழ்த் திசையில் இடி முழக்கமும் கேட்டுக்கொண்டிருந்தன.

சேந்தன் அமுதன் தொண்டையைக் கனைத்துக்கொண்டு மனத்தையும் தைரியப்படுத்திக்கொண்டு ''பூங்குழலி! என் அந்தரங்கத்தை வந்தியத்தேவன் உன்னிடம் வெளியிட்டதாகக் கூறினாய் அல்லவா? அதைப் பற்றி உன் கருத்தைத் தெரிவித்தால் நல்லது. அதோ கோடிக்கரையின் கலங்கரை விளக்கம் தெரிகிறது. இனி உன்னோடு தனியாகப் பேசும் சந்தர்ப்பம் கிட்டாமற் போகலாம். நாளை நானும் புறப்பட்டுச் செல்ல வேண்டும். தஞ்சையில் என் தாயாரைத் தனியாக விட்டு வந்து வெகு நாளாகிறது!'' என்றான்.

''வந்தியத்தேவன் உனக்காக ஏன் தூது சொல்ல வேண்டும்? உனக்கு வாய் இல்லையா? கேட்க வேண்டியதை நேரில் கேட்டு விடேன்!'' என்றாள் பூங்குழலி.

''சரி! கேட்கிறேன். நீ என்னைக் கலியாணம் செய்து கொள்வாயா?'' என்று சேந்தன் அமுதன் கேட்டான்.

''எதற்காக என்னைக் கலியாணம் செய்து கொள்ளும்படி கேட்கிறாய்!'' என்றாள் பூங்குழலி.

''உன் பேரில் எனக்கு அந்தரங்கமான ஆசை இருக்கிறது. அதனாலேதான்!''

''அந்தரங்கமான ஆசையிருந்தால் கலியாணம் செய்து கொண்டுதான் தீர வேண்டுமா?''

''அப்படியொன்றும் 'தீர வேண்டும்' என்பதில்லை. உலக வழக்கம் அப்படி இருந்து வருகிறது...''

''உன்னைக் கலியாணம் செய்து கொண்டால் எனக்கு நீ என்ன தருவாய்? நான் வேண்டும் அரண்மனை வாழ்வும் ஆடை ஆபரணங்களும் யானை குதிரைகளும் பல்லக்கு பணிப் பெண்களும் உன்னால் தர முடியுமா?''

''முடியாது; அவற்றுக்கெல்லாம் மேலான அமைதியுள்ள வாழ்க்கையைத் தருவேன். கேள், பூங்குழலி! தஞ்சை நகர்ப் புறத்தில் அழகான பூந்தோட்டத்தின் மத்தியில் என் குடிசை இருக்கிறது. அதில் என் அன்னையும் நானுந்தான் வசிக்கிறோம். நீ அங்கு வந்து விட்டாயானால், உன் வாழ்க்கையே மாறுதல் அடைந்து விடும். என் அன்னை உன்னை அன்போடு வைத்து ஆதரித்துப் பாதுகாப்பாள். பொழுது விடிந்ததும் எழுந்திருந்து நம் வீட்டைச் சுற்றியுள்ள கொடிகளிலும் மரங்களிலும் குலுங்கும் மலர்களை இருவரும் சேர்ந்து சித்திர விசித்திரமான மாலைகளாகக் கட்டலாம். மாலைகளை நான் தஞ்சைத் தளிக் குளத்தார் ஆலயத்துக்கும் துர்க்கா பரமேசுவரியின் ஆலயத்துக்கும் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வருவேன். அதற்குள் நீ எங்கள் தோட்டத்திலுள்ள தாமரைக் குளத்தில் குளித்து விட்டு என் அன்னைக்கு வீட்டு வேலைகளில் உதவி செய்யலாம். மாலை நேரங்களில் நாம் மூவரும் தாமரைக் குளத்தில் தண்ணீர் மொண்டு கொண்டு போய்ப் பூச் செடிகளுக்கு ஊற்றலாம். மாலை ஆனதும் நான் உனக்கு அமுதினும் இனிய தெய்வத் தமிழ்ப் பதிகங்களைச் சொல்லிக் கொடுப்பேன். உன்னுடைய மதுரமான குரலில் அவற்றைப் பாடினால், பாடிய உன் நாவும் இனிக்கும்; கேட்கும் என் காதும் இனிக்கும். நமக்கு விருப்பம் இருந்தால் ஆலயங்களுக்குச் சென்று இறைவனைத் தரிசித்து விட்டு அத்தெய்வப் பாடல்களைப் பாடி விட்டு வரலாம். கோயிலுக்கு வரும் பக்தர்களும் கேட்டு மகிழ்வார்கள். பூங்குழலி

இதைக் காட்டிலும் இனிய வாழ்க்கை, மகிழ்ச்சி அளிக்கும் வாழ்க்கை உலகில் வேறு என்ன இருக்க முடியும்? யோசித்துப் பார்த்துச் சொல்லு!''

இவ்விதம் சேந்தன் அமுதன் கூறியதையெல்லாம் கேட்டு விட்டுப் பூங்குழலி கலகலவென்று சிரித்தாள்.

''அமுதா! நீ இனியதென்று கருதும் வாழ்க்கையைப் பற்றிச் சொன்னாய்! ஆனால் நான் எத்தகைய வாழ்க்கை வேண்டுமென்று ஆசைப்படுகிறேன், தெரியுமா? வானுலகத்துக்குச் சென்று தேவேந்திரனை மணந்து கொள்ள ஆசைப்படுகிறேன். தேவேந்திரனுடன் ஐராவதத்தில் ஏறி வானத்தில் மேக மண்டலங்களுக்கு மத்தியில் பிரயாணம் செய்ய விரும்புகிறேன். தேவேந்திரனுடைய கையிலிருந்து வஜ்ராயுதத்தைப் பிடுங்கி மேகக் கூட்டங்களின் மீது பிரயோகிக்க ஆசைப்படுகிறேன். வஜ்ராயுதத்தினால் தாக்கப்படும்போது அந்தக் கரிய மேகங்களிலிருந்து ஆயிரம் பதினாயிரம் மின்னல்கள் கற்றை கற்றையாகக் கிளம்பி வான மண்டலத்தைச் சுக்கு நூறாகப் பிளப்பதைப் பார்க்க ஆசைப்படுகிறேன். இப்போதெல்லாம் வானத்திலிருந்து இடி விழுந்தால் எங்கேயோ கடலில் அல்லது காட்டில் விழுந்து மறைந்து விடுகிறதல்லவா? நான் அப்படி இடிகளை வீணாக்க மாட்டேன். அரசர்களும் அரசிகளும் இராஜகுமாரர்களும் இராஜகுமாரிகளும் வாழும் அரண்மனைகளாகப் பார்த்து அவற்றின் மேலே இடிகளைப் போடுவேன். அந்த அரண்மனைகள் இடிந்து விழுந்து மண்ணோடு மண்ணாவதைப் பார்த்துக் களிப்பேன். தேவேந்திரன் ஒருவேளை என்னை மணந்து கொள்ள இஷ்டப்படா விட்டால் வாயு தேவனிடம் செல்வேன். அவனுக்கு ஏற்கெனவே பல மனைவிகள் இருந்தாலும் பாதகம் இல்லையென்று என்னை மணந்து கொள்ளச் சொல்லுவேன். அவ்வளவுதான். பிறகு இந்த உலகத்தில் எப்போதும் புயற்காற்றும் சுழிக் காற்றும் சண்டமாருதமும் அடித்துக்கொண்டேயிருக்கும். பெரிய பெரிய மரங்கள் பெயர்ந்து மாட மாளிகைகளின் மீது விழுந்து அவற்றை அழிக்கும். கடலில் போகும் மரக்கலங்கள் சண்டமாருதத்தினால் தாக்குண்டு துகள் துகளாகச் சிதறிப் போகும். அந்தக் கப்பல்களில் பிரயாணம் செய்வோர் கொந்தளிக்கும் கடலில் விழுந்து தவிப்பார்கள். அவர்களில் இராஜ குமாரர்களும் இராஜ குமாரிகளும் இருந்தால் அவர்கள் ஆழ்கடலின் அடிவாரத்துக்குப் போகட்டும் என்று விட்டு விட்டு, மற்றவர்களை மட்டும் போனால் போகிறதென்று தப்ப வைப்பேன். வாயு தேவனும் ஒருவேளை என்னை மணந்து கொள்ள மறுத்தால் அக்கினி தேவனிடம் செல்வேன். அப்புறம் கேட்க வேண்டுமா? இந்த உலகமே தீப்பற்றி எரிய வேண்டியதுதான்...!''

''பூங்குழலி! போதும்! நிறுத்து! ஏதோ ஒரு மனக் கசப்பினால் இவ்விதமெல்லாம் நீ பேசுகிறாய். மனமறிந்து யோசித்துப் பேசவில்லை. உன் மனநிலையை அறிந்து கொள்ளாமல் உன்னிடம் நான் கலியாணப் பேச்சை எடுத்ததே என் தவறுதான். அதற்காக என்னை மன்னித்து விடு! கடவுள்தான் உன்னுடைய மனக் கசப்பைப் போக்கி அமைதி அளித்து அருள வேண்டும். அதற்காக நான் அல்லும் பகலும் பிரார்த்தனை செய்து வருவேன்!'' என்றான்.

உட்கார்ந்திருந்த பூங்குழலி திடீரென்று எழுந்து நின்றாள். ஓடைக் கரையில் இருந்த ஒரு மரத்தின் பக்கமாக உற்றுப் பார்த்தாள். சேந்தன் அமுதனும் அந்தத் திசையை நோக்கினான். மரக் கிளைகளின் மத்தியில் ஒரு பெண்மணியின் முகம் தெரிந்தது. சேந்தன் அமுதன் ஒருகணம் அங்கே நின்றவளின் முகத்தில் தன் அன்னையின் முகச் சாயலைக் கண்டு திகைத்துப் போனான்.

பின்னர், அவள் தன் அன்னை இல்லையென்பதை அறிந்துகொண்டான். பூதத் தீவில் வசிப்பதாகப் பூங்குழலி கூறிய தன் பெரியம்மாவாக இருக்க வேண்டும் என்று ஊகித்துக்கொண்டான்.

பூங்குழலி படகிலிருந்து தாவி ஓடைக் கரையில் குதித்து அந்தப் பெண்மணியை நோக்கி விரைந்து ஓடினாள்.

*(தொடரும்)*

புக்ஃபேர் போயிருந்தேன். இந்த சாட்டிலைட் உலகத்துல இன்னும் இத்தனை பேர் என்னை மாதிரி புத்தகக் காதலர்களா இருக்காங்களேன்னு சந்தோஷப்படற அளவுக்கு செமை கூட்டம். ("ஸண்டே மட்டுந்தான் இப்படி இருக்கும். மத்த நாள்ல ஃபுட்பால் ஆட்லாம்"னார் ஒரு பப்ளிஷர்.) வழக்கம் போல பக்தி, சமையல், வாஸ்து சமாசாரங்கள்தான் பிச்சிக்கிட்டுப் போவுது.

பொன்னியின் செல்வன் மலிவுப் பதிப்பு கொண்டு வந்திருக்கற கௌரா ஏஜென்ஸீஸ் ராஜசேகரன்கிட்ட கொஞ்ச நேரம் பேசிட்டிருந்தேன். "2000 முடியறதுக்குள்ள கல்கியோட அத்தனை ஒர்க்ஸையும் (நாவல்ஸ், ஷார்ட் ஸ்டோரிஸ், நான்ஃபிக்ஷன் உட்பட) – பத்தாயிரம் பக்கங்கள் ஆனாலும் – மொத்தமா ஆயிரம் ரூபாய்க்குள்ள கிடைக்கிற மாதிரி ஒரு 'மெகா செட்' கொண்டு வரப் போறதா சொன்னார்.

மத்த புக்ஸெல்லாம் யானை விலை, ராக்கெட் விலை விக்கறப்ப, இது எப்படிக் கட்டுபடி ஆறதுன்னு கொஞ்சம் விசாரிச்சப்ப, "கட்டுபடி ஆகாட்டா எப்படி கொண்டு வர முடியும்? இதுதான் நிஜமான ரேட். மத்ததெல்லாம் டூப்ளிகேட்"ங்கற மாதிரி ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார். ப்ரொடக்ஷன் கொஞ்சம் முன்னபின்ன இருந்தாலும் இத்தனை மலிவா கொண்டு வர்றதுங்கறது பெரிய விஷயமா பட்டுது.

பி.கு : என்னோட சொற்ப வாழ்க்கையிலேயே முதல் தடவையா புக்ஃபேர் கேன்டீன் காப்பி அற்புதமா இருந்ததை அனுபவிச்சி, மூணு தடவை குடிச்சேன். தரம் தொடரக் கடவது.

•••

என்னோட நம்பர் ஒன்னுன்னு சொல்லப்படற காலச்சுவடும் வானளாவப் புகழ்ந்திருக்கு. ஒரு பேரா சாம்பிள் :

"வெகுஜன இதழ் என்று பார்க்கும்போது கூட இதன் மொழி மிகுந்த எரிச்சலூட்டுகிறது. சகஜமாக, வழக்கத்திலுள்ள தமிழ்ச் சொற்கள் கூடத் தவிர்க்கப்பட்டுள்ளன. பெருநகரப் பேச்சு மொழியில் ஆங்கிலம் கலந்து எழுதுவதைக் கூட சகித்துக் கொள்ளலாம். இது அதையும் மீறிய அடாவடித்தனமான ஆங்கிலத் திணிப்பு. தமிழில் நஞ்சைக் கலப்பதற்குச் சமமான செயல். இதைவிட நேரடி ஆங்கிலத்தில் எழுதித் தொலைத்து விடலாம்."

Not a bad idea. But நேரடி ஆங்கிலம் இத்தனை அழகா இருக்குமான்னு டவுட்டா இருக்கு.

•••

சின்னதா ஒரு ரிங் வாங்கலாம்னு ஜுவல்லரி ஷாப் போயிருந்தேன். ஷோகேஸ்ல, வெள்ளில ஒரு பெரிய செஸ் போர்டு இருக்கறதைப் பார்த்து ஷாக் ஆயிட்டேன். நல்ல, பெரிய போர்டு. சோல்ஜர்ஸ், கிங், க்வீன் எல்லாம் தங்கத்துல செய்யப்பட்ட சிற்பங்கள். (ஒவ்வொண்ணும் ஒரு பெரிய வெண்டைக்காய் சைஸுக்கு இருக்கு.) கிங்கோட கிரீடம் மட்டும் தனியா டாலடிக்குது. விலையெல்லாம் நாம வாங்கக்கூடியதா தெரியலை. வேற யார் வாங்கறாங்கன்னு கேட்டா, பெரிய லிஸ்டே தராங்க. காசை என்ன பண்றதுன்னு தெரியாம முழிக்கற பலர் நம்ம ஏழை தேசத்துல ஏராளமா இருக்காங்க போல.

# கமி குப்பாமாக்கெட்

# வெள்ளி செஸ் போர்டில் விளையாடியிருக்கீங்களா?

'கவித்துவ லேங்வேஜை'ப் பாராட்டி சமீப காலமா சில பத்திரிகைகள் (கல்கி நீங்கலாக) தொடர்ந்து எழுதி வர்றதை கவனிக்கறேன்.

கம்யூனிஸ்ட் பத்திரிகை தீக்கதிர்ல ரெண்டு காலம் பாராட்டினாங்கன்னா, நவீன இலக்கியப் பத்திரிகைகளிலேயே

பக்கத்துல நிக்கவே பயம்மா இருந்ததால ஒரு தம்ளர் தண்ணி குடிச்சிட்டு நகர்ந்து வந்துட்டேன்.

•••

தங்கம், வெள்ளின்னு பேசினதும் வேற ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருது.

ஒரு நைட், ஊரைச் சுத்திட்டு மவுன்ட்ரோடுல எல்ஐஸி பஸ் ஸ்டாண்ட் பக்கமா போயிட்டிருந்தேன். செமை பசி. லேட் நைட் ஆயிட்டதால ஓட்டல்கள் இல்லை. ஒரே ஒரு ஓட்டல்ல லைட் எரிய, (பார்த்தாலே காஸ்ட்லினு தெரிஞ்சும்) துணிஞ்சி உள்ள போனேன்.

நம்ம ஸ்டார் ஓட்டல்களெல்லாம் பிச்சை வாங்கணும். வெள்ளித் தட்டு, வெள்ளி ஃபோர்க், விரிக்க பட்டுத் துணி, ஜரிகை நாப்கின், பட்டுப் புடைவை கட்டிய லேடி வெயிட்டர்...

தயிர் சாதம் நூத்திப் பத்து ரூபா, பட்டர் மில்க்



அறுவது ரூபா, லெமன் ரைஸ் நூறு ரூபா, காப்பி அறுபது ரூபா, (தண்ணி மட்டும் ஃப்ரீ)

இந்த மெனு கார்டைப் பார்த்தப்புறமும் சாப்பிட முடியுங்கறீங்க? போதாக்குறைக்கு, 'தலைக்கு நூத்தம்பது ரூபாய்க்குக் குறைவா சாப்பிடக்கூடாது'ன்னு அன்புக் கட்டளை வேற.

புதிய நூற்றாண்டுல யாராவது மாசச் சம்பளமா ஒரு லட்சம் குடுத்தா தேவலை.

— சுமி



''மானேஜர் அறைக்குள்ள ஏதோ கை தட்டல் சத்தம் கேட்டுதே... ஏன்?''

**''ஆபீசுக்கு வர ஏன் லேட்னு அவர் கேட்டதுக்கு நா சொன்ன புதுமையான காரணம் அவருக்கு ரொம்பப் புடிச்சுப் போச்சு... 'கற்பனைத் திலகம்'னு சொல்லி கை தட்டிப் பாராட்டினார்!''**

**– அம்பை தேவா**



***''போலி டாக்டர் வசமா மாட்டிக்கிட்டாரு...''***

***''எப்படி?''***

***''அவரு கேசை நடத்தினது 'போலி வக்கிலாம்!'''***

***– பாளை பகம்பொன்***

''எதுக்கு ஆபீஸுக்குத் தலையை விரிச்சுப் போட்டுக்கிட்டுப் போறாங்க?''

''லேட்டாப் போனா மானேஜர் பின்னிடுவாராம்!

– எல்.ஜி



20

"ரஷ்ஷ¬! சூர்யா! ஒரு பெரும் அதிர்ச்சி. நீங்கள் இதை எப்படி ஏற்றுக் கொள்ளப் போகிறீர்களோ? ஆனால் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்" என்றது கோபக்ஸ். இருவரும் திகைத்துப் போய்ப் பார்த்தனர்.

"நான் எதிர்பார்க்காதது. எப்படி ஏற்பட்டது? கணிக்க என் மூளைக்குத்தான் சக்தியில்லை. மிஸ்டர் தாமு – தி ஜீனியஸ் ஆஃப் திஸ் செஞ்சுரி, அவர் கூட இதைக் கணிக்க எப்படித் தவறினார்?"

"ச்சூ! என்ன?"

"இருங்கள் இருங்கள்" – தலையை இடம் வலமாக வேகவேகமாய் ஆட்டியது.

"ரஷ்ஷ¬! முதலில் வியூஃபைண்டரில் நம் பூமியைப் பாருங்கள்."

ரஷ்ஷ¬ ஓடி வியூஃபைண்டரில் கண் வைத்து, லென்ஸை அட்ஜஸ்ட் பண்ணி, சில நொடிகள்தான். சைரன் போல பெருங்குரலெடுத்து அலறினான்.

"ஐயோ, ஐய்யோ... அக்கா... மோசம் போயிட்டோம். ஐயோ" – அவன் கை கால்கள் தடதடவென்று ஆட ஆரம்பித்தன.

"என்ன ரஷ்ஷ¬? என்னடா? சொல்லுடா" – அவன் பதில் சொல்லாமல் தொடர்ந்து பெருங்குரலில் அலறிக் கொண்டிருக்க, அவனை இழுத்துத் தள்ளிவிட்டு அவள் பார்த்தாள். பூமி உருண்டை தெரிந்தது. எங்கும் நீலம் பரவி கடல்கள் தெரிந்தன. திட்டுத் திட்டாய் நகரும் மேகக் கூட்டங்கள்.

"என்ன கோபக்ஸ்?" – ஒன்றும் புரியாமல் பார்த்தாள்.

"நன்றாய்ப் பாருங்கள்."

சிறிது நேரம் பார்த்துக்கொண்டே வந்தவள்–

"ஐயோ! கோபக்ஸ்... ஒண்ணும் புரியலையே... தம்பி... ஐயோ அப்பா... அப்பா! ஐயோ...!" அலறினாள்.

அவசரமாய் மீண்டும் கண் வைத்தவள்–

"ரஷ்ஷ¬...!" – வார்த்தைகள் குழற, குரல் தழுதழுத்தது. கண்கள் பீறிட்டுக் கொண்டன.

"கோபக்ஸ்! கோபக்ஸ்! அங்கே ஆசியக் கண்டத்தையே காணோம், ஐரோப்பா இல்லை, ஆஸ்திரேலியாவைக்கூட பார்க்க முடியவில்லையே ஆ! அடி சிறுத்து, நுனி பெருத்த எங்கள் இந்தியா எங்கே?" – அவள் மேல் மூச்சு வாங்க, சக்தி முழுதும் வடிந்து போய் விட்டவளைப் போல சோர்ந்து கீழே சாய்ந்தாள். அந்தப்புறம் கோபக்ஸ் ரஷ்ஷ¬வைப் பற்றி ஆசுவாசப்படுத்திக் கொண்டிருந்தது. இப்போது ரஷ்ஷ¬ எழுந்து வந்து மீண்டும்



வியூஃபைன்டரில் கண் வைத் தான். எதுவுமே இல்லை. மேப்பில் இதுவரை பார்த் திராத வடிவத்தில், நாற்கரத் தோற்றத்தில் தொடர்ச்சியான

# உயிர்களைத் தேடித் தேடி...



விரிந்த ஒரு தரைப்பகுதி மட்டும் தெரிந்தது. அதைத் தவிர்த்து கோள் முழுதும் நீல நிறத்தில் எங்கும் தண்ணீர், தண்ணீர், தண்ணீர்தான்!

நகர்ந்து வந்து சூர்யாவிடம் நின் றான். கண்கள் தாரை தாரையாய்ப் பீறிட வெடித்து அழ ஆரம்பித்தான்.

"போச்சு அக்கா... எல்லாமே போச்சு."

சூர்யாவுக்கு மயக்கமாக வந்தது. காதுகள் ஜிவ்வென்று அடைத்துக் கொள்ள, நாக்கு பிசறியது.

**செய்யாறு தி. தா. நாராயணன்**

"அப்படியானால்... என் நாடு? எம் மக்கள்?"

"ஆமாம் சூர்யா! எல்லாமே போய்விட்டது. இருவரும் மனத்தைத் தேற்றிக் கொள்ளுங் கள்."

குபீரென்று தேகம் முழு வதும் உஷ்ணமாய் உணர்ந்தாள். ரஷ்ஷு கீழே சாய்ந்தான், அவனை ஆதரவாய்த் தொட் டாள். இருவரும் கட்டிக்கொண்டு அழ ஆரம்பித்தார்கள். கோபக்ஸ் அமைதியாய் உட்கார்ந்து விட்டது.

"அப்பா! பாசம் மிகுந்த அப்பா! எங்கள் வீடு, அழகான தோட்டம், படித்த கல்லூரி, பழகிய தோழமை, அறிவை ஊட்டி விட்ட லெக்சரர்கள், சுற் றம், எந்திரங்கள் தளம், தலைவர், மிஸ்டர் தாம்சன், மாலி, யாக்ஷின், ஷரவ், சக்தி, என் நாடு, அதன் கோடி கோடியான எம் மக்கள் கூட்டம். எல்லோரும் சொல்லாமல் போனார்களோ? அப்பா! எப்படியெல்லாம் துடித்திருப்பாய்? எங்களை உருவாக்கிய மேதையே! அன்புச் சிநேகிதனே!"

சூர்யா கேவிக் கேவி அழுதாள். ரஷ்ஷு அவள் தோளில் சாய்ந்து கொண்டு குலுங் கினான். கோபக்ஸ் வந்து இருவரையும் ஆறுதலாய்த் தட்டிக் கொடுத்தது.

"நீங்கள் அழுவதற்கு இன்னும் நிறைய சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. எனக்குத்தான் அவகாசமில்லை. கீழே போய் சேரும்போது பாராசூட் எங்கே கொண்டுபோய் நம்மைத் தள்ளுமோ? நம்மை உடனடியாக மீட்க அங்கே யாருமில்லை. கீழே விழும்போது சிதறிப் போவேனோ என்னவோ? ஒரு அதிர்வில்கூட நான் இறந்து

போக சான்ஸ் உண்டு.''

"நீயும் எங்களை விட்டு விட்டுப் போய் விடுவாயா கோபக்ஸ்?"

அவர்கள் கண்ணீர் திரள பரிதாபமாய்க் கேட்டார்கள்.

"ரஷ்ஷு! சூர்யா! காம் டவுன். அடுத்த ஸ்டெப்பை யோசியுங்கள். வருவதை எதிர் கொள்ளும் துணிச்சல் வேண்டும். மிஸ்டர் தாமு அடிக்கடி உங்களைத்தான் துணிச்சல் காரி என்பார்."

''உடனே சூர்யா 'அப்பா!' என்று உடைந்த குரலில் கேவினாள்.

"ஓ.கே! இன்றைய தேதி வரை ஏற்பட்டுள்ள அத்தனை விஞ்ஞான முன்னேற்றங்களையும் அறிந்தவர்கள் நீங்கள். வானியல், புவியியல், ஃப்யூஷன், கம்ப்யூட்டரின் அத்தனை முன்னேற்றங்கள், மாலிக்யூலர் கம்ப்யூட்டிங்கில் மூன்று தலைமுறைகள், சூப்பர் கண்டக்டிவிட்டி... எவ்ரிதிங். கோடி கோடியான விஷயங்கள் கோடி கோடியாய் உபகரணங்கள். ஆயினும் இந்தத் தருணம், இந்த நொடி எதுவும் தெரியாத, எதுவும் முடியாத வெறும் கையும் காலும் மூளையும் மட்டுமே மிஞ்சிய மனிதர்கள். ஓர் ஊசியைக் கூட இப்போது உங்களால் உருவாக்க இயலாது. வாழ்ந்தது, மேலே போனது, பார்த்தது, வந்தது அத்தனையும் கனவுகளா? ஆம் இனி அவை வெறும் கனவுகள்தாம்! மனிதர்கள் பாவம் வெகுளிகள். ஒரே நாளில் தாம் இப்படி மொத்தமாய் அழிந்து விடப் போவதை அறியாமல், சாஸ்வதம் என்று நம்பி, அவர்களுக்குள்தான் எத்தனை யோசனைகள்? குயுக்திகள், ஒன்றையொன்று வீழ்த்தும் தந்திரங்கள், ஆதிக்க வெறிக் குணங்கள்.''

கோபக்ஸ் மேலே பேச எதுவுமில்லாமல் கொஞ்ச நேரம் அமைதியாயிருந்தது. அதன் பிறகு சூர்யா அதிகம் அழவில்லை. எல்லாமும் போய் விட்ட பெருந்துயரில் எதற்கென்று அல்லது யாருக்கென்று அழுவது? நண்பனாகிய அப்பா! சற்றும் கல்மிஷமில்லாத அன்புத் தோழா! அந்தக் கடைசி நிமிடத்தில் எங்களை நினைத்து எப்படித் துடித்திருப்பாய்? நெஞ்சு நிறைய சோகம் தொண்டையடைத்தது. ஆயாசமாய் தலைகவிழ்ந்து கொண்டாள். ரஷ்ஷு இப்போது கீழே சுருண்டு கிடந்தான். பாவம்! இவனுக்கு அப்பாவிடம் ரொம்ப ஒட்டுதல். ஆறுதலாய்த் தொட்டாள். அவன் அழுகை அதிகமாகியது.

''சூர்யா! ரஷ்ஷு! பூமியின் வளிமண்டலத்திற்குள் இப்போது நுழையப் போகிறோம்'' - சொல்லிக் கொண்டே கோபக்ஸ் ஒரு பட்டனைத் தட்ட, ஸ்பேஸ் ரகின் தன் எல்லா இயக்கங்களையும் நிறுத்திக் கொண்டு விட, அதை பாரசூட் ஏந்திக் கொண்டு தாலாட்டியது.

''ரஷ்ஷு, கோபக்ஸ்! இது எப்படி நடந்திருக்கும்? ஒரே நாளில் எப்படி நேர்ந்திருக்கும்? எந்தச் சக்தியால் இப்படி பூமியைத் தலைகீழாய்ப் புரட்டிப் போட்டிருக்க முடியும்?"

"வேண்டாம் சூர்யா! இது அர்த்தமற்ற ஆராய்ச்சி. பூமிக்கும் நமக்குமிருந்த தொடர்புகள் துண்டிக்கப்பட்ட போதுதான் இது நடந்திருக்க வேண்டும் என்பது என் யூகம். எஸ்! அப்படித்தான் நேர்ந்திருக்கும். நாம் ட்ரான்ஸ்மிட்டரில் ஐசி. ஒன்று கருகி விட்டதால் வேலை செய்யவில்லை என்று அதை உருட்டிக் கொண்டிருந்தோம். சிக்னல்கள் இங்கிருந்து கிளம்பவேயில்லை என்று இப்போதுதான் தெரிகிறது. கீழே அடிக்கும் காற்றின் வேகத்தைப் பாருங்கள். அந்த மேகக் கூட்டம் என்ன வேகத்தில் ஓடுகிறது பாருங்கள். பிரளயத்தின் அதிர்வுகள் இன்னும் மறையவில்லை. எப்படி என்று ஆராய இன்று நம்மிடம் எந்த வசதியுமில்லை. எப்படியாயிருந்தால் என்ன? மொத்தத்தில் அழிந்து விட்டது. பல காரணங்கள். மலை மலையாய்ச் சுற்றிக் கொண்டிருக்கும் மிகப் பெரிய ஆஸ்ட்ராய்ட்கள் ஏதாவது வந்து மோதியிருக்கலாம். யூகிக்க முடியாதபடி திடீர்ப் பிரவேசமாய் வால் நட்சத்திரம் ஒன்று உரசிக் கொண்டு போயிருக்கலாம். ஏன்? சூரியக் குடும்பத்தில் ஏதாவது ஒரு கிரகத்தில் ஏற்படும் பாதிப்பு கூட இங்கே பிரதிபலித்திருக்க வாய்ப்பு உண்டு. பூமியின் ஈர்ப்பு விசையில் மாற்றம் ஏற்பட்டு, கடல் கொந்தளித்து அனைத்தையும் விழுங்கியிருக்கலாம். எத்தனை சாத்தியக்கூறுகள்!"

எதுவுமே பேசத் தோன்றாமல் சற்று நேரம் மூவரும் அமைதியாயிருந்தனர். தலைக்கு மேலே போய்விட்ட விரக்தி. ரஷ்ஷு முழங்காலில் தலையைப் புதைத்துக் கொண்டிருந்தான்.

"இதுவரை நீங்கள் இருவரும் தாங்கிக் கொண்டது போதாது. அதிர்ச்சி மேல் அதிர்ச்சி. இன்னொன்றையும் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும். எதிர்கொள்ளுங்கள். இதற்குப் பெயர்தான் காலத்தின் கட்டாயம். கீழே பாருங்கள் கடல் எப்படிக் கொந்தளிக்கிறது? காற்றின் வேகத்தைப்

பாருங்கள். எப்படியும் மணிக்கு 180 கி.மீ. வேகமிருக்கும். அலைகள் மேலெழுந்து இறங்கும் வேகத்தைப் பாருங்கள். அவை உங்களைத்தான் வா வா என்று வரவேற்கின் றன. சிருஷ்டிக்குக் களம். நீங்கள்தாம் அதன் பாத்திரங்கள்."

ஆ... ஆ... ஆ...

அந்த ஸ்பேஸ் ஈகிள் காற்றில் மிதந்து கொண்டே போய் ஆழமான ஒரு கடல் பகுதியில் விழுந்தது. அது பூமியில் எந்தப் பகுதி? அதை யார் சொல்லக்கூடும்? வங்காள விரிகுடா என்று சொல்ல பக் கத்தில் இந்தியா இருக்க வேண்டும். நாடுக ளெல்லாம் மறைந்து, எங்கும் தண்ணீர் மயமாய், சூறாவளிக் காற்றாய் இது எந்த இடம்?

மீட்க இப்போது யார் வரப் போகிறார் கள்? வெளியே வருவதற்காக ரஷ்ஷு" எஸ்.ஈயின் கதவைத் திறந்தவுடன் குபுகுபு வென்று நீர் உள்ளே புகுந்து விட, அது மூழ்க ஆரம்பித்தது.

அவர்கள் போராடி வெளியே வருவதற் குள் மூச்சுத் திணறிப் போய் விட்டது. கோபக்ஸ் வெளியே வர கைகளையும் கால் களையும் உதைத்துக் கொண்டிருந்தது. அதைப் பார்த்துவிட்டு இருவரும் பாய்ந்து சென்று தண்ணீரின் உள்ளேயிருந்து இழுக்க, அப்போதுதான் கவனித்தார்கள். கோபக்ஸின் வலது கண் மட்டும் தனியே மூடி மூடித் திறந்து கொண்டிருக்க, இடது கண் குத்திட்டு நின்றது.

"கோபக்ஸ்... கோபக்ஸ்!"

திடீரென்று அதனிடம் ஒரு உலுக்கல். அதைத் தொடர்ந்து அதன் வலது கண்ணி லிருந்து சடசடவென்று நெருப்புப் பொறி எழுந்தடங்கியது.

அவ்வளவுதான்! ஒரு நொடியில் அதன் இயக்கங்கள் நின்று போய், அவர்கள் பார்த் துக் கொண்டிருக்கும்போதே குபுக்கென்று உள்ளே போய் விட்டது. இத்தனையும் ஒருசில நொடிகளிலேயே நடந்து முடிந்து விட, அதைப் பிடிக்க அவர்கள் செய்த முயற்சிகளெல்லாம் வீண். கோபக்ஸ்... கோபக்ஸ் என்று கத்தத்தான் முடிந்தது. ஒரு நிமிஷம் அதற்காக வருத்தப்பட்டு விட்டு, நீந்த ஆரம்பித்தார்கள்.

நீந்திக் களைத்து, நீந்திக் களைத்து போராடி, இரண்டாவது நாள் காலையில் ஒரு கடற்கரை ஓரம் நினைவிழந்து ஒதுங்கி னார்கள். அன்று நடுப்பகலுக்குத்தான் நினைவு திரும்பியது. சுள்ளென்று வெயில். கோபக்ஸ் நினைவு வந்தது. கண்கள் கோத் துக் கொண்டன. ஒருகணம், ஒரு மெஷி னுக்காகவா இப்படி வருந்துகிறோம்? என்ற எண்ணம் வந்தாலும் அதன் செயல் திறமை, வழிநடத்திய பாங்கு, உயிர் ஆபத்திலிருந்து அவர்களை மீட்டுக் கொண்டு வந்த செயல்.

"கோபக்ஸ்! எங்கள் நண்பா!"

அந்த ரம்மியமான கடற்கரை ஓரமாக நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். கடலலைகளின் இரைச்சல். தரை கண்களுக்கெட்டிய தூரம் வரையிலும் உயிர் அசைவுகள் ஏதுமின்றி அமானுஷ்யமாய்த் தெரிந்தது. அவர்களுக்கு எதைப் பற்றியும் சிந்தனையில்லை. வாழ்ந்த பழைய உலகம், அதன் சுவாரஸ்யமான உள் அடக்கங்கள், அப்பா, ஸ்பேஸ் ஈகிள், மனிதர்களை வைத்து செஸ் ஆடிக் கொண்டிருந்த தலைவர், ஆருயிர் நண்பன் கோபக்ஸ், அதனுடன் போட்ட சண்டைகள், சமாதானங்கள், உடன்படிக்கைகள் எல்லா மனித நாடகங்களும்... ஒவ்வொன்றாய் நினைவுகளிலிருந்து விடைபெற்றுக் கொள்ள, அவர்கள் கவலை இந்த வேளை உணவு. அதைத் தேடியாக வேண்டும். அவர்கள் ஓடிக் கொண்டிருக்கிறார்கள்.

இத்தனையையும் நிகழ்த்தி விட்டு ஒன்றுமே நடவாதது போல பூமி சலனமின்றி தன் கதியில் சுழன்றபடி போய்க் கொண்டிருக்கிறது. தன்னை ஒருமுறை கழுவி புதுப்பித்துக் கொண்டு விட்ட திருப்தி போலும்!

(முற்றும்)



"தலை வருக்குத் தற்பெருமை பேசறதுக்கு விவஸ்தை இல்லாம போச்சு!"

"ஏன்?"

"மிலெனியம் பிறந்தது எங்கள் ஆட்சியின் போதுதான்னு சொல்லிக்கறாரு!"

– பா. ஜெயக்குமார்

**கை,** கால்களை விறைத்துக் கொண்டு அழும் குழந்தையை செய்வதறியாமல் பார்த்தேன்.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து புறப்படும் வண்டி போல, முதலில், மெதுவாய், சிணுங்கலில்தான் ஆரம்பித்தது அழுகை.

போகப் போக ராஜஸ்தானி எக்ஸ்பிரஸ் வேகம் அதன் அழுகையில்.

"கண்ணு, வேண்டாம்! ராசுவி செல்லம், அழாதேடா, ரே, ரே, ரே..."

எனக்குத் தெரிந்த விதத்திலெல்லாம் கெ(ா)ஞ்சிப் பார்த்தேன்.

ம்ஹு"ம்?

அலுவலக வேலையாக வெளியே சென்றிருந்தேன் மதியம். எதிர் பார்த்ததை விட சீக்கிரமே முடிந்து விட்டது. மீண்டும் அலுவலகம் செல்வதற்குள் நேரமாகி விடும். உடம்பிலும் சோர்வு.

சரி, மிச்ச வேலையை



# ஸ்டிரெஸ்

வீட்டுக்குப் போய் செய்து கொள்ளலாம்; நாளைக் காலையில்தானே ரிப்போர்ட்டைத் தரவேண்டும் என்று வீடு திரும்பி விட்டேன்.

அதுதான் நான் செய்த தவறோ? தூக்கிக் கொண்டதும், கை, காலை உதைத்துக் கீழே இறக்கி விடச் சொல்கிறது; தரையில் இறக்கி விட்டவுடன், காலைக் கட்டிக் கொண்டு, தலையை உயர்த்திப் பார்த்து, தூக்கி வைத்துக் கொள் என்கிறது.

எல்லாமே கண்களால்தான். ஏழு மாதக் குழந்தை என்பதால் இன்னமும் பேச்சு வரவில்லை.

இதில் பயமுறுத்தும் பின்னணி இசையாய் விடாத அழுகை.

ராகவி, என் இரண்டாவது செல்வமே! கொஞ்சம் ஓய்வு கொடுடா அப்பாவுக்கு.

உன்னைத் தூக்கி, கீழே விட்டு, இடுப்பே கடுத்துப் போய் விட்டதடா?

ப்ச், இவளை வேறு இன்னமும் காணோமே?

நான் இன்று சீக்கிரமே வீடு திரும்பியதை, நம்ப முடியாமல் கண் விரித்துப் பார்த்தாள் சகதர்மினி.

"நல்லதாப் போச்சு" என்றாள்.

"என்ன?"

"என் அக்கா வீட்டுல போய் இந்தப் பாத்திரத்தைக் கொடுத்துட்டு வந்துடறேன். நீயும் வாடா ஈஸ்வர்."

என் மூத்த மகனையும் கூட்டிக் கொண்டு கிளம்பினாள்.

"குழந்தை நல்லாத் தூங்கறா. பார்த்துக்குங்க. இதோ வந்துடறேன்."

இதோ என்பதற்கு அரைமணி நேரமா, ஒரு மணி நேரமா என்று தெரியவில்லை. அடுத்த தெருவில் இருக்கும் அக்கா வீட்டுக்குப் போய்த் திரும்ப இவ்வளவு நேரமா?

பல்லைக் கடித்தேன்.

தூங்கிக் கொண்டிருந்த முதல் பத்து நிமிடம் வரை எந்தப் பிரச்னையுமில்லை.

ஆபீஸ் கோப்புகளை புரட்டிக் கொண்டிருந்த என்னை, குழந்தையின் சிணுங்கல் கலைத்தது.

எழுந்து சென்று முதுகில் மெல்ல தட்டிக் கொடுத்தேன்.

ஸ்பரிசத்தின் வேற்றுமை உணர்ந்தோ, என்னவோ, சடக்கென முழித்துக் கொண்டது.

என்னைக் கண்டதும் மலங்க விழித்தது ஒரு நொடி. அப்புறமும், இப்புறமும் அம்மாவைத் தேடியது. காணவில்லை என்றதும் ஆரம்பித்து விட்டாள் அழுகையை.

**கிருஷ்ணா**

குழந்தைதானே என்று முதலில் சாதாரணமாய் நினைத்து விட்டேன்.

கார் பொம்மையை ஓட விட்டேன், கிலுகிலுப்பையைச் சப்தப்படுத்தினேன். பந்தை எடுத்து விளையாட்டுக் காட்டினேன். ம்ஹூம்!

உனக்கும் பெப்பே! உன் விளையாட்டுக்கும் பெப்பே என்று சொல்லி விட்டது.

முகம் சிவந்து போய், கண்ணில் நீர் பெருக, உதட்டைப் பிதுக்கி, வாயை ஒலி பெருக்கியாக்கி, என் முழங்கால் உயரம் கூட இல்லாத இந்தக் குட்டி, என்னைக் கலவரப் படுத்தி, ஸ்தம்பிக்க வைத்துவிட்டதே!

உப்பு மூட்டை தூக்கலாமா, யானை விளையாட்டு... ம்ஹூம்! இன்னமும் புரிந்து கொள்ளும் வயதாகவில்லை.

'பர், புர், குர்' என்று விநோதமாய் உறுமி, விளையாட்டுக் காண்பித்தது எதிர்மறையாகி விட்டது.

குழந்தை பயந்து போய், அதிகமாய் வீறிட்டது.

வாசலுக்கு கூட்டிச் சென்றேன். தெருவில் போகும் ஸ்கூட்டர், கார், ஆடு, நாய் இத்யாதிகளுக்கெல்லாம் மயங்காமல் கருமமே கண்ணாக வீறிட்டாள்.

தம் மக்களின் அழுகைச் சொல்லை வள்ளுவர் கேட்டிருந்தால், குழலினிது, யாழினிது என்று குறள் எழுதியிருக்க மாட்டாரோ?

ஆபீஸில் சதாம் உசேன்களையும், ஹிட்லர், முசோலினிகளையும் சமாளித்து, நல்ல பெயர் வாங்கி, பதவி உயர்வுகளும் வாங்கி வரும் என் கர்வத்தை சம்மட்டி கொண்டு அடிக்கிறாளே இந்தக் குட்டி ராட்சஸி!

"ஏன் அழறது குழந்தை?"

பக்கத்து வீட்டு மாமிதான். காம்பவுண்ட் சுவருக்கு மேலே, வைர மூக்குத்தி பளீரிட, தலை தெரிந்தது.

"தெரியலே."

"அவ இல்லையா?"

"சனியன், அக்கா வீட்டுக்குப் போறேன்னு போனா. பிறந்த வீட்டு மனுஷங்களைக் கண்டுட்டாத்தான் பொம்பளைகளுக்கு உலகமே மறந்துடுமே."

நாக்கைக் கடித்துக் கொண்டேன். கோபத்தில் வார்த்தைகள் தளும்பி, சிந்தி விட்டன.

மூன்றாவது நபரிடம் போய் என் மனைவியைப் பற்றிக் குறைவாகப் பேசி விட்டேனே!

நாலு பேர் நடுவில் வேட்டி அவிழ்ந்து விட்டது போல, எனக்கே என் செயல் அவமானமாயிருந் தது.

"ஆம்பளைகளுக்கு ஆபீஸ் இருக்கு. பொம் மனாட்டிகளுக்கு வேற போக்கிடம் ஏது?"

மாமி சமயம் புரியாமல் கத்தியைச் செருகினாள்.

"பசிக்குதோ என்னவோ, பால் கொடுங்களேன். லேக்டோஜன்தானே தர்றா குழந்தைக்கு?"

மாமியின் பேச்சு கண்ணைத் திறந்து விட வீட் டுக்குள் ஓடினேன் குழந்தையுடன்.

பால் பவுடர் டப்பா எங்கே? அவசரத்தில் கை, கால் பதறியது.

எத்தனை ஸ்பூன்? வெந்நீர் ஆறியிருந்தால் பரவாயில்லையா? ஐயையோ, கட்டி தட்டிக் கொள்கிறதே? சர்க்கரை வேண்டுமா, வேண்டாமா?

கார்கில் போரை விட டென்ஷனாய் இருந்தது.

கஷ்டப்பட்டு கரைத்து, ஸ்பூனால் திரவத்தை வாயில் புகட்டினேன்.

ஒரு நொடியில் உலகமே அமைதியாகி விட்டது. பரிபூர்ண நிசப்தம்.

ப்பூபூபூ!

உதட்டிலிருந்து, பம்ப் செட்டிலிருந்து வெளி வரும் தண்ணீர் போல, வேகமாய் வெளியே வந்தது லேக்டோஜன் திரவம். தரையெங்கும் வெள்ளையாய் மாடர்ன் ஆர்ட்!

சனியனே!

ஓங்கி விட்டேன் முதுகில் வைக்க. அறிவு விழித்துக் கொள்ள நிதானித்தேன்.

நிசப்தம் தொலைந்து சப்தமானது. மீண்டும், வீரியமான அழுகைக் குரல்.

தூளியில் போட்டு ஆட்டலாமா, கழுதையை? போட்டு ஆட்டினேன்.

'போடா, டேய்' என்று சொல்லி விட்டது.

மீண்டும் தோளில், இடுப்பில், தரையில் என்று மாறி, மாறி பயணித்தது குழந்தை.

கைக்கு அடங்காத பிரம்மாண்டமான பலூனாய் தெரிந்தாள் குழந்தை. அழுத்திப் பிடிக்கவும் பயம். பிடி நழுவி விடுமே என்ற அவஸ்தை.

"என்னாச்சு?"

வாசலிலேயே குரல் கேட்டது. சகதர்மிணி தான். செருப்பை தரையில் தேய்த்துத் தேய்த்து நடப்பாள். கூடவே 'சேர்ந்திசை'யாய் மகனின்

## செஞ்சுரி தாத்தாவின் ஆசை!

இந்த வருட புத்தாண்டு பிறந்தபோது, டெல்லியைச் சேர்ந்த இந்தர் சிங் தரம், தமது நூறாவது பிறந்த நாளைக் கொண்டாடினார். ஆம்! அவர் பிறந்தது ஜனவரி முதல் தேதி 1900வது ஆண்டு. இப்போது அவருக்கு இரண்டு பெண்கள், மூன்று பையன்கள், பதினொரு பேரக் குழந்தைகள். அதுமட்டுமின்றி பதின்மூன்று கொள்ளுப் பேரன், பேத்திகள்! நாலு வருடங்களுக்கு முன்பு இவரது மனைவி இறந்து விட்டார்.



காந்திஜியினால், பெரிதும் கவரப்பட்டு, சுதந்தரப் போராட்டத்தில் பங்கேற்றவர் இந்த முதியவர். இப்போதும் கதர்தான் அணிகிறார். பாகிஸ்தானின் ஜீலம் பகுதியில், பிறந்த இவர், பிரிவினையை அடுத்து டெல்லிக்குக் குடி பெயர்ந்தார். மத்திய அரசில் உத்தியோகம் பார்த்து ரிடையர் ஆனார். ஆரிய சமாஜ் இயக்கத்தில் தம்மை இணைத்துக் கொண்டவர்.

அவரது பேத்தி ஒருவர், தாத்தாவுக்கு நூறாவது பிறந்த நாள் பரிசாக ஒரு கைத்தடியைக் கொடுத்திருக்கிறார். ஆனால், தாத்தாவுக்கோ தாம் இப்போது பயன்படுத்தும் கைத்தடி மீது அபாரமான அட்டாச்மென்ட். காரணம், அது அவருடைய அப்பா பயன்படுத்திய கைத்தடி!

"என் கடைக்குட்டி கொள்ளுப்பேத்தி ஜெனா ஒரு மாதக் குழந்தை. அவளுடைய முதல் பிறந்த நாள் வரை இருந்து அவளை ஆசீர்வதிக்க வேண்டும் என்பதே என் ஆசை!" என்கிறார் இந்த செஞ்சுரி தாத்தா!

– சி.எம்.




## பிரார்த்தனை கார்டு!

'பீநட்' என்று ஒரு கார்ட்டூன் கேரக்டர். உலகமெங்கும் பத்திரிகைகள் மூலம் வெகு பிரபலம். அதனை உருவாக்கியவர் சார்லஸ் சொல்ஸ் என்கிற கார்ட்டூனிஸ்ட். அவருக்கு கேன்ஸர். ஆஸ்பத்திரியில் இருக்கிறார். அவர் குணமடைய பிரார்த்தித்தும், வாழ்த்தியும் ஆயிரக்கணக்கான குழந்தைகளும், அவர்களது பெற்றோர்களும் மெகா சைஸ் கார்டு ஒன்றை கலிபோர்னியாவில் வைத்திருக்கிறார்கள்! அதைப் பார்வையிடுகிறது ஒரு குடும்பம்!

– பாரதி

செருப்பொலி.

"அக்காவிடம் கொஞ்சி முடிஞ்சதா? பிடி முதல்ல இதை."

குழந்தை தாவிக் கொண்டு சென்று அவனிடம் அடைக்கலமானது. மார்போடு ஒட்டிக் கொண்டது கோழிக் குஞ்சாய்.

அத்தனை நேர அழுகையும் மந்திரம் போட்டது போல நின்று போக, மனைவியின் கழுத்துச் சங்கிலியை கடித்தபடி என்னைப் பார்த்தது.

''சனியன்!'' என்றேன் குரோதமாய்.

''ச்சு. திட்டாதிங்க. ராசாத்தி, பட்டுக் குட்டி.''

குழந்தையின் கன்னங்களில் முத்தமிட்டாள்.

''இதுக்கு ஒண்ணும் குறைச்சலில்லே.''

அடக்க முடியாத பொருமல், முணுமுணுப்பாய் என்னிடமிருந்து வெளிப்பட்டது. அலுவலகக் கோப்புகளில் என் பார்வை சென்று, என் கொதிப்பை அதிகப் படுத்தியது.

வேலையை முடிக்க முடியாது போலிருக்கிறதே! ப்ச்!

''என்னை ரொம்பவும் திட்டினீங்களா?''

கேட்டவளை வெறித்துப் பார்த்தேன்.

''சந்தோஷமாயிருக்கு'' என்றவளை விநோதமாய்ப் பார்த்தேன்.

"அப்படியாவது நான் ஒரு மணி நேரமாய் உங்க மனசுல இருந்தேனே."

"என்ன உளர்றே?"

"நிஜமாய்த்தான் சொல்றேங்க. இவளை நான் கருத்தரிச்சதுலேயிருந்தே என் கவனம் முழுக்க குழந்தை மேலே! போதாததற்கு, சுஸ்வர் விஷமம் வேறே. உங்க கவனமோ முழுக்க, முழுக்க ஆபீஸ், வேலை, பதவி உயர்வுன்னு மாறிடுச்சு. நமக்குள்ளே இருந்த அன்னியோன்னியம் குறைய மாதிரி உணர்ந்தேன். இப்ப கொஞ்ச நாளாகவே என் மனசுல இந்த ஏக்கம்தான். அதை எப்படி உங்களிடம் சொல்றது? உங்க ஆபீஸ்ல செய்யற மாதிரி நான் ஸ்டிரைக்கா பண்ண முடியும்:?"

அவள் பேசப் பேச, எனக்குள் மூடியிருந்த ஜன்னல் மெல்லத் திறந்து, ஒளி புக ஆரம்பித்தது. ○

✉ தலையங்கத்தில் வலியுறுத்துவது போன்று, கடமைகளில் தவறியவர்கள் பேரில் பிரதமர் உறுதியான நடவடிக்கை எடுப்பதுடன் தமது கட்சியினரே மேற்கொள்ளும் முஸ்லீம் விரோத போக்கிற்கு இராஜதந்திரம் கருதியேனும் அழுத்தமான முடிவு கட்ட வேண்டும் என்ற வரிகள் பி.ஜே.பி அரசின் தாரக மந்திரமாக மாறி விட்டால் நமது நாட்டிற்கு நன்மை பயக்கும்.
திருச்சி – 4, எச். கௌஸ்பேக்.

✉ எத்தனையோ இடர்ப்பாடுகளுக்கிடையே படித்து தமது தன்னம்பிக்கை, விடாமுயற்சி மூலம் தேசத்திற்கே பெருமை சேர்த்து ஜொலிக்கும் பாரத ரத்னா அப்துல் கலாமின் சுயசரிதத்திலிருந்து நீங்கள் எடுத்துத் தந்த பகுதிகள், அவரை நினைத்துப் பெருமைப் பட வைத்தன.
சென்னை – 26, சி. மகேஷ்.

✉ ஆபாசம் என்ற வார்த்தையையே அகராதியிலிருந்து அகற்றி, என்றும் தரத்தை மட்டுமே நம்பி வந்து கொண்டு இருக்கும் 'கல்கி'க்காக மாதம் இரண்டு ரூபாய் பட்ஜெட்டில் நிச்சயமாகக் கூடுதலாக ஒதுக்குவோம். வெற்றிப் பாதையில் பீடு நடை போட மனம் நிறைந்த வாழ்த்துக்கள்.
திருச்சி – 17, உஷா முத்துராமன்.

# மாதம் இரண்டு ரூபாய் பெரிதல்ல!




✉ சி.பி.ஐ. இயக்குனர் ராகவனின் சிறப்புப் பேட்டி படித்தேன். போஃபர்ஸ் வழக்கு தொடர்பாக நிறைய விஷயங்களை அலசல் பாணியில் கொடுத்திருந்தார். சி.பி.ஐ. விசாரணை பற்றிய விளக்கம் உபயோகமானது. 'போஃபர்ஸ் வழக்கு எப்போது முடியும்?' என்ற 'பெரிய' கேள்விக்கு அவர் அளித்திருந்த பதில் தான் சரியான நழுவல்!
மொரட்டுப்பாளையம், சு.நா. இராஜேஸ்வரன்.

✉ திருச்சி கலெக்டர் மூர்த்தியின் சாதனைகளைப் பற்றிப் படித்தவுடன் வியப்பாக இருந்தது. அந்தச் சாதனைகளுக்குப் பின்னால், அவரது கடுமையான உழைப்பும், தம்மை மக்கள் தொண்டனாகப் பாவித்து அவர்களுக்கு உதவி செய்யும் சேவை – மனப்பான்மையும் தெரிந்தது.
மயிலாடுதுறை – 4, எல். துர்காதேவி.

✉ பி.ஜே.பி.யினர் தமிழகத்தில் மாநாடு நடத்தினால் மட்டும் போதாது. மக்களைக் கவரும்படியான தலைவர்களும், அவர்களின் செயல்பாடுகளும் இருந்தால் மட்டுமே கட்சி வளரும். இல்லாவிட்டால், திராவிடக் கட்சிகளின் மேல் சவாரி செய்து பழகிவிட்டு இன்று சாவின் விளிம்பில் இருக்கும் தமிழக காங்கிரஸின் நிலைதான் பி.ஜே.பி.க்கும் ஏற்படும்.
சிதம்பரம், ஜி.ஜி. சரவணன்.

✉ ரஜினியின் எண்ணங்கள் உயர்வுதான் என்றாலும், அவருடைய ரசிகர்கள் செய்யும் கேலிக்கூத்துகளைக் கண்டுகொள்ளாமல் இருப்பது பெயரைக் களங்கப்படுத்தும் விஷயம். அளவுக்கதிகமான ஆடம்பரத்தை மக்கள் விரும்புவதில்லை என ஜெயலலிதா விஷயத்தில் உணர்த்தியிருக்கும் வேளையில், பிரபலமானவராக உலாவரும் ரஜினி, தமது ரசிகர்களின் சில்லறைத்தனத்தைக் கண்டிக்காமல் இருப்பது அழகல்ல...!
தேவனாங்குறிச்சி, பா. வடிவேல்.

✉ நோயற்ற சமுதாயத்தை உருவாக்குவதற்காக "வருமுன் காப்போம்" என்ற திட்டத்தை தமிழக அரசு ஏற்படுத்தியிருக்கிறது. ஏற்கெனவே பஞ்சாயத்துகளில், "ஆரம்ப சுகாதார நிலையம்" என்ற பெயரில் மருத்துவமனைகள் இயங்கி வருகின்றன. ஆனால் கிராம மக்களைக் கேட்டுப் பார்த்தால் மருத்துவர்கள் சரியாக வருவதில்லை. குறிப்பிட்ட மருந்துகள் இருப்பதில்லை என்று ஏகப்பட்ட குறைகளைக் கூறுவார்கள். புதிதாகத் திட்டங்களைத் துவங்குவதற்குப் பதிலாக ஏன் ஏற்கெனவே இருக்கும் திட்டங்கள் சரி வர நடக்க முயற்சி மேற்கொள்ளக் கூடாது?
சென்னை – 59, ரொசாரியோ ரவிச்சந்திரன்.

✉ 2.1.2000 இதழில் 'புலி வாலைப் பிடிக்கலாமா?' என்ற தலைப்பில் எழுதப்பட்ட தலையங்கம் கூறும் பரிகாரம் சகிக்க முடியாதது. இலங்கையில் உண்மையில் என்ன நடக்கிறது, ஏன், எதனால், எப்போதிருந்து, எதற்காக இவை நடக்கின்றன என்பதைச் சிறிதும் ஆராயாமல் எழுதுவதா? பரிகாரம் கூறுவதா?
கொழும்பு – 3, ம. சிவதேசன்.

ஒருமுறை அமரர் குன்றக்குடி அடிகளார் தம் பட்டிமண்டபத் தீர்ப்புரையில் சொன்னார், ''வள்ளுவர் ஏட்டில் வாழ்கிறார்; எழுத்தில் வாழ்கிறார்; எண்ணத்திலும், செயலிலுந்தான் இன்னும் வாழவில்லை'' என்று. இதையேதான் வைரமுத்துவும் நூலில் ''வள்ளுவரை வாழ்வாக்கு வா!'' என அறைகூவல் விடுகிறார்.




'குழலினிது, யாழ் இனிது' என்ற குறள் வரிக்கு ஜெயமோகன் எடுத்தாளும் நித்ய சைதன்ய யதியின் சொற்கள் நம்மைச் சொக்க வைக்கின்றன.

''உதடுகளால் முத்தமிட்டு அறியப்படும் குழல்களும், விரல்களால் தொட்டு அறியப்படும் யாழும் என குழந்தையை அறியும் பேரனுபவம்''– அடடா!

'கோட்டம் முதல் குமரி வரை' என்ற நூலின் தலைப்பே கலைஞரின் கட்டுரைக்கும் தலைப்பாகப் பொருந்தும். அவரும், அவர் சார்ந்த இயக்கமும் வள்ளுவர் புகழ் பரப்ப மேற்கொண்ட, நாம் அறிந்த, முயற்சிகளின் தொகுப்பே நீண்ட, நெடிய கட்டுரை வடிவம் பெற்றுள்ளது. நூலில் இது சுருக்கமான முன்னுரையாகி, கலைஞரின் புதிய குறளோவியம் ஒன்று இடம்பெற்றிருந்தால் மலரின் மணம் கூடியிருக்கும் என்று நினைக்காமலிருக்க முடியாது.

தமிழ்க் குடிமகன் 'ஈன்றாள் பசி' என்பதற்கு 'கருவுயிர்த்துச் சில நாட்களே ஆன தாயின் பெரும்பசி' என்று புதிய நய உரை காண முயன்றுள்ளார். ஆனால் அது பெற்ற தாய் பசிதீர்க்கவும் மகனே கூட சான்றோர் பழிக்கும் செயலை மேற்கொள்ளக் கூடாது என்ற அறக் கருத்தின் ஆழத்தை, வலிமையை இழந்துவிடுகிறதே!

முல்லைவேந்தன் கட்டுரையில், ''வள்ளுவர் திருக்குறளைவிடப் பழைமையான நூல் உலகில் வேறு எம்மொழியிலும் இல்லை'' (பக்.56) என்கிறார்.

அ.ச. ஞானசம்பந்தனோ, ''தமிழகத்தின் வட பகுதியில் மிகப் பழங்காலத்திலேயே தோன்றி வளர்ந்த வடமொழியார் இயற்றிய தர்ம சாஸ்திரங்களும் வள்ளுவர் காலத்திற்கு முன்னரே பெரிதும் புழக்கத்தில் இருந்தன'' என்கிறார்.

ஜெயகாந்தன் தம்மை மறைத்துக் கொண்டு திரு.வி.கவையே அதிகம் பேசவிட்டுள்ளார். கணித ஆசிரியர் சிலம்பொலியாரின் 'குறளில் கணித இயல்' குறளாசானின் விரிந்த அறிவை விளக்கி வியக்க வைக்கிறது. கலைக்கோவன் தம் கட்டுரையில் 'தீயாவின்றி...' குறளில் தீக்குக் ''கலோரி'' என்ற பொருளைப் பொருத்திக் காட்டுவதும் இத்தகையதே!

மலரில் கவிதை, கட்டுரைகளோடு குறள் நெறிக் கதைகளுக்கு இடமளித்துள்ளமை பாராட்டுக்குரிய முயற்சி. நான்கும் நான் மணிக்கதைகள்.

நயமான கவிதைகள் மலருக்குப் புகழ் கூட்டுகின்றன. அப்துல் ரகுமான் தம் உரையிடையிட்ட புதுக்கவிதையில் மங்கை மையிடுவதை ''வீட்டிற்குள்ளே அவர், வாசலில் எதற்கு வரவேற்புக் கோலம்?'' என்று சொற்கோலமிடுவது சுகமான கற்பனை.

எழுத்து மலருக்கு மணம் ஊட்டினால் ஓவியம் ஒளி ஊட்டுகிறது. மரபு ஓவியம் மட்டுமல்ல நவீன ஓவியமும் உண்டு. ஓவியர்களுக்கு ஓவியம் மட்டுமே பொறுப்பல்ல. கருத்துக்கிசைய ஓவியம் உருப்பெற வேண்டாமா? சில படங்கள் குறளைச் சரியாகப் பிரதிபலிக்கவில்லை.

இந்தக் குறள் மலர் இனிய ஒரு தமிழ் விருந்து; கல்விக் கூடங்களிலும், நூலகங்களிலும் அனைவரும் பயன்படுத்துமாறு போற்றிப் பாதுகாத்து வைக்க வேண்டிய தமிழ் நிதி!

# படிக்கவும் பார்க்கவும் ஒரு மலர்!

*(கோட்டம் முதல் குமரி வரை – (குமரி முனையில்) திருவள்ளுவர் சிலை சிறப்பு விழா மலர்க்குழு, விலை ரூ. 100/-)*

**— ஆர்.பி. சாரதி**



# KALKI SADASIVAM MEMORIAL AWARD

Sri. T. SADASIVAM founder Mg. Director of KALKI organisation was a freedom fighter and courted imprisonment thrice. Besides he was an expert in the art of Public Relations and a pioneer in the advertising field. He not only procured advertisements for his magazine but also created them to help advertisers. In short what advertising agencies are doing today, he had done single handed as long back as the 1930s.

Sri. Sadasivam also produced two outstanding films "Shakunthala" and "Baktha Meera" both of which were resounding successes. His wife Smt. M.S. Subbulakshmi acted in the leading roles in both the films. Sri. Sadasivam was a connoisseur of music and if Smt. M.S. Subbulakshmi is a Bharata Ratna today, she owes a great deal to Sri. Sadasivam who shaped her as a shining diamond.

Sri. Sadasivam was a great devotee of Rajaji and helped him a great deal during the Swatantra Party days. In Rajaji's own words,"Sadasivam is to me what Lakshmana was to Rama".

In order to cherish the memory of the many splendoured personality that Sadasivam was, a Trust has been created in the name of **"KALKI SADASIVAM TRUST"** with an initial corpus donation of Rupees One Lakh by Sri. Shankar Ramachandran presently residing in U.S.A.

One of the objectives of the KALKI SADASIVAM TRUST is to select the best Tamil Advertisement of the year published in Tamil dailies or weeklies, during the period 1st January '99 to 31st December '99 for the KALKI SADASIVAM AWARD. The award carries with it a prize of Rs. 10,000 and a citation. It will be given to the most creative, artistically beautiful and socially conscious advertisement with effective copy matter. A panel of judges will select the best from the nominations received.

Nominations should reach the office of the Trust before 31st January 2000 in the form of a letter giving details of the creator or creators of the advertisement and enclosing a printed copy of the advertisement. The award will be given at a function sometime in February or March 2000.

It is hoped that in the following years the Trust's activities will expand and that TV advertisements as well as advertisements in English will also be considered for the KALKI SADASIVAM AWARD.

K. RAJENDRAN
Managing Trustee
KALKI SADASIVAM MEMORIAL TRUST

**Address of**
**KALKI SADASIVAM MEMORIAL TRUST:**
**No. 1, Fifth Street, Lake Area, Nungambakkam,**
**Chennai - 600 034. Phone : 8270480**



• பிரும்மதீர்த்தம்

திருக்குவளை என்றதும் சுந்தரமூர்த்தி நாயனார் நினைவுதான் வந்தது. நவவித பக்தியில் ஸக்யம் என்பது ஒன்று. ஈசனைத் தன் சகாவாகவே பாவித்து உரிமையுடன் பழகுவது. அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைத் தன் தோழனாகவே பெற்றிருந்தான். சுந்தரரும் அப்படியே!

சுந்தரமூர்த்தி நாயனார் சிவபெருமானின் தோற்றத்தையே கொண்டவர். கல்யாண சுந்தரராக சிவபெருமான் கோலம் கொண்ட போது கண்ணாடியில் பார்த்துக் கொண்டாராம். அந்தப் பிரதிபிம்பமே கண்ணாடியிலிருந்து எழுந்து வந்து சுந்தரராயிற்று. கடல் கடைந்த போது தோன்றிய ஆலகால விஷத்தை ஈசனிடம் கொண்டு சேர்த்தவர் இவர். அதனால் ஆலாலசுந்தரர் என்று பெயர் பெற்றார். ஈசுவரனுடைய சாபத்தினால் தமிழ்நாட்டில் வந்து பிறந்தார். தமிழ்நாடு செய்த தவப் பயன் என்றுதான் சொல்ல வேண்டும். அவருடைய தேவகணப் பெயரே மனிதகணத்திலும் வழங்கியது அகஸ்மாத்தாக நேர்ந்திருக்க முடியாது. எல்லாம் திருவிளையாடல்தான்!

சுந்தரமூர்த்தி நாயனாரிடம் அளவற்ற அன்பு கொண்டவர் குண்டையூர்க்கிழார். சுந்தரருடைய வீட்டுக்குத் தவறாமல் நெல்லும் பருப்பு வகைகளும் அனுப்பி வந்தார். ஒரு சமயம் மழை பொய்த்துப் பயிர் விளையவில்லை. குண்டையூர்க்கிழார் மனம் வருந்திக் கொண்டிருந்தபோது அந்த அற்புதம் நிகழ்ந்தது. காலையில் துயிலெழுந்த போது ஊரெங்கும் நெல் மலையாகக் குவிந்திருந்தது.

இதைக் காண சுந்தரர் வந்தார். எப்படி ஆரூரில் "பரவை பசிவருத்தம் நீங்க" வீட்டில் சேர்ப்பது? திருக்குவளைக்கு வந்து தோழரான சிவபெருமானிடம், "இந்த நெல்லை அனுப்பி வைக்க ஏற்பாடு செய்யும்" என்று கேட்டுக் கொண்டார். இரவோ

## தெய்வ தரிசனம் — 12

### சப்த விடங்க ஸ்தலம் - 3

• வெளிப் பிராகாரம்



# அல்லல் தீர்க்கும் அவனிவிடங்கர்!

**ஆனந்தி**

டிரவாக சிவ கணங்கள் நெல் மலையை மூட்டைகளாகக் கட்டி திருவாரூரில் சுந்தரர் வீட்டு வாசலில் சேர்த்து விட்டனர்.

திருக்குவளைக்கு கோளிலி என்று ஒரு பெயர் வழங்குகிறது. கோளிலி என்பதுதான் குவளையாயிற்றோ என்னவோ!

"கோளிலி எம்பெருமான் குண்டையூர்ச்
சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை எம்பெருமான் அவை அட்டித்
தரப்பணியே"

என்று சிவபெருமானிடம் பத்துத் தடவை கேட்டிருக்கிறார் சுந்தரர்.

பாதியோர் பெண்ணை
வைத்தாய்
படருஞ் சடைக் கங்கை
வைத்தாய்
மாதர் நல்லார் வருத்தம் அது
நீயும் அறிதியன்றே

என்று என்ன உரிமையுடன் கேட்கிறார் சுந்தரர்! தேவியை தன்னில் பாதியாக உடையவனாயிற்றே. கங்கையைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறாயே. பெண்களுடைய வருத்தம் உனக்குத் தெரியாதா? என்று சொல்லி நெல்லை அனுப்பி வைக்க ஆட்களை நியமிக்கும்படி கேட்கிறாரே. இது வல்லவா தோழமை!

பரவையாரின் வருத்தம் என்ன...? பங்குனி உத்ர திருவிழாவில் அடியார்களுக்கு உணவு இட அரிசி இல்லை என்பது தான். அதை அனுப்பி உதவினார் எம்பெருமான்.

பரவையாருக்குத் திருக்கோளிலி நாதர் நெல் அனுப்பிய விழா மாசி மாதத்தில் கொண்டாடப்படுகிறது. சில மூட்டை நெல் திருவாரூரில் உள்ள பரவை நாச்சியார் கோயிலுக்கு இங்கிருந்து அனுப்பப்படுகிறது. அங்கே ஆராதனைகள் செய்த பிறகு அன்பர்களுக்கு விநியோகிக்கிறார்கள். பத்து நெல் மணிகளாவது கிடைக்கப் பெற்றால் வீட்டில் வற்றாமல் அரிசி பொங்கும் என்பது நம்பிக்கை.

திருக்குவளையிலிருந்து குண்டையூர் மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது.

ஒன்பது கோள்களுக்கும் வந்த குறைகளை இல்லாமல் செய்தவர் என்பதால் கோளிலி என்ற பெயர் வந்தது. கிரஹ ஸஞ்சாரங்களினால் நமக்கு வரும் பாதிப்புக்களை இல்லாமல் செய்யும் தலம் என்றும் எடுத்துக் கொள்ளலாம்.

திருக்குவளைக்கு நான் தரிசனத்துக்காகச் சென்ற அன்று புயல் வீசியது. மழையான

• வண்ணமயமாக!



மழை. திருக்காறாயில் ஆதிவிடங்கரைத் தரிசனம் செய்து விட்டு இங்கு வந்தால் திருக்குளம் நிரம்பி வழிகிறது. கோவில் வாசலிலிருந்து உள் பிராகாரம் வரையில். ஒரு அடி தண்ணீர் நிற்கிறது. உள்ளே இருக்கும் தண்ணீர் கோபுர வாசல் வழியாகப் பாய்ந்து வெளியேறிக் கொண்டிருக்கிறது. எதிர்நீச்சல் போட்டுத்தான் உள் கோபுரத்தை அடைய முடிந்தது. கார்த்திகை மாதத்து ஞாயிற்றுக் கிழமையாதலால் சூரிய பகவானுக்கு விசேஷ பூஜை செய்து உலாவரச் செய்து விட்டு எல்லாரும் போய் விட்டார்கள். குருக்களய்யாவை அழைத்து வரப் போனார் அங்கிருந்தவர்.



• உள் பிராகாரம்

கருவறையின் முன் மண்டபத்திலிருந்த சித்திரங்களைப் பார்த்தால் தல வரலாறு தெரிந்து விடும். இந்தக் கோவில் தருமையாதீனத்தைச் சேர்ந்தது என்பதும் தெள்ளெனத் தெரிந்து விடும். தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்தப் பரமாச்சாரியாளின் ஓவியத்தை வண்ணச் சித்திரமாகக் காண்கிறோம்.

இன்னொரு சித்திரத்தில் கிரீடமணிந்து அரசரைப் போல விளங்கும் சுந்தரரைக் காண்கிறோம்.

பிரும்மதேவர் படைப்புத் தொழில் செய்யும் அதிகாரத்தைப் பெறுவதற்காக இங்கே தவம் செய்தார். வெண் மணலால் லிங்கம் பிடித்துப் பூஜை செய்தார். ஈசன் படைப்புத் தொழிலை பிரும்மாவிடம் ஒப்படைத்தார்.

மணலால் பிடித்து வைத்த லிங்கமானதால் எப்போதும் பித்தளைக் குவளை சாத்தி வைக்கப்பட்டிருக்கிறது. அபிஷேகம் செய்வதில்லை.

பிறகு பீமனுக்கு பகாசுரவதம் செய்ததால் வந்த பிரும்மஹத்தி தோஷம் நீங்கியதையும் சித்திரத்தில் காண்கிறோம்.

பிரும்மா தவம் செய்ததால் பிரும்ம தபோவனம் என்றும், புஷ்பவனம் என்றும் தென்கயிலை என்றும் இந்த ஊருக்குப் பல பெயர்கள் உண்டு.

தலவிருட்சம் தேற்றா மரம். தேத்தா மரம் என்பார்கள். கிராமங்களில் தண்ணீர் கலங்கி இருந்தால் தேற்றாமரத்து விதைகளைப் போட்டு வைப்பார்கள். தண்ணீர் தெளிந்து விடும். பிரும்ம புரீசுவரரை வழிபட்டால் கலங்கிய மனம் தெளிந்து விடும். மனக்கலக்கம் நீங்கி அமைதி பெறுவதை விட என்ன வேண்டும்?

தரிசனத்தைச் செய்து வைக்க, குடையைப் பிடித்துக் கொண்டு குருக்கள் வந்து விட்டார். ஆர்வத்துடன் பிரும்மபுரீச்வரருக்கு அர்ச்சனை செய்து தல புராணக் கதைகளையெல்லாம் கூறினார்.

கோவில் சமீபத்தில் கும்பாபிஷேகம் செய்யப்பட்டுப் புதுப்பொலிவுடன் விளங்குகிறது. வண்ணமயம். கோபுரம் மட்டுமல்ல. சுவர்கள் பல வண்ணங்கள் பூசப்பட்டிருக்கின்றன. நீலம், பச்சை, சிவப்பு, மஞ்சள், கரும்பச்சை என்று வானவில்லின் வண்ணங்களைக் கொண்டு வந்து குழைத்துப் பூசிய மாதிரி இருந்தது.

நாம் தரிசிக்க வந்திருப்பது அவனிவிடங்கரையல்லவா? பிரும்மபுரீசுவரரை அடுத்துள்ள தியாகராஜ சுவாமியின் கோவிலை அணுகுகிறோம். இவர் அவனிவிடங்கர். இவருக்கு "ஊழிப்பரன்" என்றும் பெயர் உண்டு. இங்கே இணைந்து அமர்ந்திருக்கும் அம்பிகை நீலோத்பலாம்பாள். திருஆரூரிலும், திருக்காறாயிலிலும் தரிசித்த அதே சுந்தர வடிவம். முகத்தைக் காட்டியே, தேகம், முழுமையும் காட்டாத மூடுமந்திர வடிவம்!, அதே மாயாவித்தனமுள்ள மந்தஹாஸம் மான் மழுவேந்திய கரங்கள்.

இங்கே இவர் சந்நிதியில் இருப்பது மரகதலிங்கம். தியாகர் சந்நிதியில் அவரை ஸேவித்துக் கொண்டு சுந்தரர் பரவையாருடன் காட்சியளிக்கிறார்.

திருக்குவளையில் தியாகேசர் ஆடுவது பிருங்க நடனம். வஸந்தோற்சவம் விமரிசையாக நடக்கும். 'பிருங்க நடனம் என்றால் எப்படி ஆடுவார்கள்?' என்று குருக்களைக் கேட்டேன். "வண்டு போல சுழன்று ஆடுவார்கள். அதாவது வண்டுகள் பூவுக்குப் பூ தாவுவது போல் ஆடிக் கொண்டும் சுழன்று கொண்டும் தியாகராஜசுவாமி உலா வருவது அற்புதமாக இருக்கும்" என்றார்.

பரவையார் சுந்தரர் திருமண விழாவையும் விசேஷமாகக் கொண்டாடுவார்கள்.

18 நாட்கள் பிரும்மோத்ஸவம் நடக்கும். கிராம தேவதைகளையும் சேர்த்து இருபத்து இரண்டு நாட்கள் மிக விமரிசையாக வஸந்தன் நடத்துவார்கள். முதல் நாளும் 15 ஆவது நாளும் தியாகேசர் தேரில் உலா வருவார்.

*சிங்காதனத் தியாகர் தென்*
*கோளிலித்தியாகர்*
*சிங்கார மேருவெனச் சிறந்தே...*
*தியாகக்கொடி செழிப்பச் செய்ய*
*திருத்தேர்*
*தியாகப் பெருமான் சிறந்தேறி - நாகரிக*
*வைகாசி மாதம் வஸந்தத் தியாகேசர்*
*ஒய்யாரமாக வரும்...*
*ஒப்பிலா மூர்த்தி யொருவன் வந்தான்*
*வாசவன் செய்*
*கற்பனையில் பூசைக் கடவுள் வந்தான்*
*- மைப்பலநேர்*
*மாயோன் திருமார்பில் வாழும் பரன்*
*வந்தான்*
*திருக்கோளிலிநாதன் தேவர் பிரான்*



• முன் கோபுரம்

வந்தான் என்று தியாகேசர் உலாவருவதை பெயர் குறிப்பிடாத கவிஞர் ஒருவர் பாடிப் பரவுகிறார்.

இந்த ஊரிலும் முசுகுந்த ஸஹஸ்ரநாம அர்ச்சனை ரொம்ப விசேஷம். முசுகுந்த சக்கரவர்த்தியின் பக்தியால் அல்லவா ஏழு தியாகேசர்களை நாம் தரிசிக்க முடிகிறது.

**வ**ண்டமரும் பூங்குழலி என்ற அழகிய பெயருடைய பிரமராம்பிகையின் சந்நிதி. மைக்கொள் கண்ணுமை என்றும் பாலின் மென்மொழியாள் என்றும் நாவுக்கரசரும், வண்டமருங்குழலாள் உமை நங்கை என்றும் "முல்லை முறுவல் உமை" என்றும் சுந்தரரும் பாடிப் பரவிய அழகு வடிவம். ஆர்வம் பெருக ஆசை தீர அம்பிகையைத் தரிசித்துக் கொள்கிறோம்.

ஆடிப்பூர அம்மனுக்குக் கமலாம்பாள் என்று பெயர். நீலோத்பலாம்பாள், அல்லி யங்கோதை கமலாம்பாள் என்று நீர்ப் பூக்களின் பெயராலேயே தேவி அழைக் கப்படுவது எத்தனை அழகாக இருக்கிறது. இந்தப் பிரதேசத்தின் நீர்வளமும் தெரிய வருகிறது.

**வ**ரலாற்றுச் சிறப்பும் உடையது திருக்கோளிலி ஆலயம். சோழர்களும் பாண் டிய மன்னர்களும் இந்தக் கோவிலுக்குத் திருப்பணிகள் செய்திருக்கிறார்கள்.

சடையவர்மன் சுந்தர பாண்டியன் காலத்திலும், இராஜராஜதேவன், இராஜாதி ராஜன் காலங்களிலும் திருப்பணிகள் செய்யப்பட்ட விவரங்கள் கல்வெட்டுக் களில் காணக்கிடைக்கின்றன.

சடையவர்மன் சுந்தர பாண்டியன் தன் பிறந்த நாளாகிய திருவாதிரையில் பெருமானும் நாச்சியாரும் சிறப்பமுது செய்தருளித் திருவுலாப்போதவும்; ஆளுடைய பிள்ளையார் திருவுலாப் போதவும் தேவாரம் அருளிப் பாடவும் நிலம் வாங்கி அளித்தார்.

**மீ**ண்டும் பிரும்மபுரீச்வரர் சந்நிதிக்கு வருகிறோம். ஒளியே வடிவமாய் ஓங்கும் பரம்பொருளுக்கு தீபச் சுடர் காட்டி வழிபடுகிறோம். "சூரியனுக்கும் சந்திரனுக்கும், மின் னலுக்கும் அக்னிக்கும் யார் ஒளியைத் தருகிறாரோ அந்தப் பரம்பொருளுக்கு இந்தக் கற்பூர ஜோதியைக் காட்டுகிறேன்" என்று சொல்லி கற்பூரம் காட்டி வழிபடு கிறோம்.

*கொத்தலர் பொழில் சூழ்தரு கோளிலி*
*அத்தனைத் தொழ நீங்கும் நம் அல்லலே.*

என்ற அப்பர் பதிகத்தைப் பாடிக் கொண்டே விடைபெறுகிறோம். பிரும்மதீர்த் தத்தின் மறு கரையிலிருந்து பார்க்கும்போது தென்னை மரங்களுக்கு மத்தியில் கோபுரம் எழுதிய சித்திரம் போல் தெரிகிறது.

படங்கள் : **யோகா**

பிரபஞ்சத்தின் தோற்றம், வளர்ச்சி பற்றிய அந்தப் புத்தகம் பெரியாரால் எழுதப் பட்டதல்ல. அது சிங்கார வேலரால் எழுதப் பட்டதாக என் நினைவு. உலகம் என்பது ஒரே நாளில் படைக்கப்பட்டதல்ல. உலக மும் உயிர்களும் மெள்ள மெள்ள பரிணாம வளர்ச்சியால் உரு வானவை என்கிற விஷயம்தான் அந்தப் புத்தகத்தில் மிகமிக எளி மையாகச் சொல்லப்பட்டிருந்தது.




பரிணாம வளர்ச்சித் தத்துவம் என்பது கல்லூரிப் பாடப் புத்தகத் தில் படித்த ஒரு விஷயம்தான் என் றாலும் மனத்தில் பதிகிறபடி அந்தப் புத்தகத்தில் தான் சொல் லப்பட்டிருந்தது. அதைப் படித்த தும் இதில் சொல்லப்பட்டிருக்கிற கருத்துக்கள் உண்மைதானே! கடவுள் எப்படி இதைப் படைத்திருக்க முடி யும்? கடவுள் என்று ஒருவர் இருக்க முடி யுமா என்கிற சந்தேகங்களெல்லாம் என் மனத்தில் எழ ஆரம்பித்து விட்டன.

ஆனாலும் நான் திருநீறு பூசிக் கொள் வதையோ, கோயிலுக்குச் செல்வதையோ நிறுத்திக் கொண்டுவிட வில்லை. வழக்கம் போல் பூஜை செய்தேன்; தேவாரம் பாடி னேன். எல்லாம் செய்து கொண்டுதான் இருந்தேன். இருப்பினும் மனத்துக்குள் ஒரு சந்தேகம். உண்மையிலேயே கடவுளைக் கும்பிடுகிறவர்கள் பக்தியோடு தான் கும்பிடு கிறார்களா? இல்லை சிறு வயதிலிருந்து ஏற்படுத்தப்பட்டுவிட்ட பழக்க தோஷத் தால் கும்பிடுகிறார்களா? இப்படியெல்லாம் என் மனம் கேள்வி கேட்டு பதில்களைத் தேட ஆரம்பித்து விட்டது.

ஒருபுறம் தேவாரம் பாடிக் கொண் டிருந்தாலும் மறுபுறம் பெரியாரின் நூல்களையும் குடியரசு இதழில் அவர் எழுதுகிற கட்டுரைகளையும் படிக்க ஆரம் பித்தேன். முன்பு அவர் எழுதிய கட்டுரை களைக் கூட தேடித் தேடி படிக்க ஆரம் பித்தேன்.

# பெரியாரின் எழுத்துக்கள் என்னை அதிர வைத்தன!

எனக்கு ஏற்கெனவே பாரதியார் மேல் மிகுந்த ஈடுபாடு. அவரது கவிதைகளை விட வும் கட்டுரைகள்தான் என்னுள் மிகுந்த தாக்கத்தை ஏற்படுத்தின. பாரதியார் தமது கட்டுரைகளில் நமது சமுதாய மூடப் பழக்கங்கள், ஜாதிக் கொடுமைகள்,

பெண்களின் அவல நிலைகள் பற்றி யெல்லாம் சாடியிருப்பார். அவை யெல்லாம் எனக்கும் ஏற்புடை யனவாகவே இருந்தன. அது வரை, ஜாதி என்பது சமூக ஒழுங்குக்காகத் தேவைதான் என்று நினைத்துக் கொண் டிருந்த நான், பாரதியின் கட்டுரைகளைப் படித்த பிறகுதான் அது களையப் பட வேண்டிய ஒரு சமூகக் களை என்பதை உணர்ந்தேன்.

இப்படி, பாரதியின் சிந்தனைகள் என்னை யொரு உயரத்தில் தூக்கி வைத்திருந்தன. அந்த உயரத்திலிருந்து நான் பெரியாரைப் பார்த்தபோது, அவர் எனக்கு மிக அருகில் இருப்பதுபோல் உணர்ந்தேன். அதாவது பாரதியார்தான் என் உள்ளத்தில் சீர்திருத்தக் கருத்துக் களை விதைத்தார் என்றாலும் அதை முளைவிடச் செய்தது பெரியாரின் கருத்துக்கள்தான். எனவே, தேடித் தேடி பெரியாரின் நூல்களைப் படிக்க ஆரம்பித்தேன். இந்தச் சமயத்தில்தான் மீண்டும் எங்கள் கல்லூரிக்குப் பெரியார் வந்தார்.



அது 1967-ம் ஆண்டு. நான் அப்போது பச்சையப்பன் கல்லூரியிலேயே பி.ஏ.பொருளாதாரம் இறுதியாண்டு படித் துக் கொண்டிருந் தேன். அப்போது தான் பெரியார் மறு படியும் வந்தார்.

எனக்கு யாப் பிலக்கணத்தில் ஆர்வம் உண்டு என்பதால், பெரி யாரை வரவேற்று ஒரு கவிதை எழுதச் சொன்னார் எங்கள் பேராசிரியர்.



பெரியாரை வரவேற்கும் ஆர்வத்தைவிட கவிதை எழுதக் கிடைத்த வாய்ப்பு என்கிற அளவில்தான் நான் அப்போது வரவேற்புக் கவிதையை எழுதினேன். கவிதையின் இறுதியில் வீ.சேஷாசலம் என்று என் பெயரையும் எழுதியிருந்தேன்.

அதைக் கண்ட என் பேராசிரியர், ''இதென்னடா பெயர்? பெரியாரை வரவேற்பதற்கு ஒரு பார்ப்பனப் பெயரா? வேறு ஏதாவது ஒரு பெயரைப் போடு!'' என்று என்னை பயமுறுத்தி விட்டார்.

பாரதிதாசன், கண்ணதாசன், கம்ப தாசன் என்றெல்லாம் கவிஞர்கள் தங்கள் புனை பெயர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவில்லையா! அதுபோல் நானும் ஒரு பெயரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால் என்ன என்று யோசித்த போதுதான் சட்டென்று 'பெரியார் தாசன்' என்கிற பெயர் என் நினை வுக்கு வந்தது. அதையே என் புனை பெயராகவும் வைத்துக் கொண்டேன்.

ஆனாலும் நான் அப்போது பெரியாரின் தாசனாகிவிடவில்லை. வழக்கம்போல் திருநீறெல்லாம் பூசிக் கொண்டு தான் பெரியாரை வரவேற்றுக் கவிதை படித்தேன். பெரியாரும் என் புறத் தோற்றத்தைக் கவனித்ததாகவே எனக்குத் தெரியவில்லை. என்னை அவர் பார்த்தபோது சிரித்தார். அவ்வளவுதான்.

அதுவொரு சாதாரண நிகழ்வாக அமைந்துவிட்ட போதிலும் பெரியாரின் கருத்துக்கள் என்னை ஈர்த்துக் கொண்டே தான் இருந்தன. குறிப்பாக, 'பெண் ஏன் அடிமையானாள்?' என்கிற அவருடைய புத்தகத்தைப் படித்த போது என்னுள் ஓர் அதிர்ச்சியே ஏற்பட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

அதுவரை எனக்கு, பெண்ணடிமை ஒழிப்பு என்பது பாரதியார் காட்டிய இடம் வரைக்கும்தான் தெரியும். "அவர்கள் தங்களை இழப்பதற்கு முன் என்னைப் பணயம் வைத்து இழக்கவில்லையே! பணயத்தில் அவர்கள் தங்களை இழந்த பிறகு என்னை எப்படி அவர்களால் பணயம் வைக்க முடியும்?" என்று வியாசர் கேட்காத கேள்வியை பாஞ்சாலி சபதத்தில் பாரதி கேட்பாரே... அதுவரைக்கும் தான் எனக்குப் பெண் விடுதலை பற்றித் தெரியும்.

ஆனால் அந்தப் புத்தகத்தில், பெண்களின் நிலையை, உளவியல் பார்வை, சமூகவியல் பார்வை, பொருளியல் பார்வை, எல்லாவற்றுக்கும் மேலாக மானுடவியல் பார்வை, அரசியல் பார்வை என்று பல்வேறு கோணங்களில் பார்த்த பெரியாரின் பார்வை எனக்குப் புதுமையாக இருந்தது.

அதிலும் அந்தப் புத்தகத்தின் பதினோராவது அத்தியாயத்தில், "ஓர் ஆணுக்கு ஒரு பெண் மனைவியாகிவிட்டதாலேயே, அவன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும் கற்பு என்கிற பெயரில் அவன் கூடவேதான் அவள் வாழ்ந்தாக வேண்டுமா? பெண்கள் என்ன பிள்ளை பெறும் இயந்திரமா? சந்ததிகளை உருவாக்குகிற பொறுப்பை அவள் மட்டும்தான் சுமக்க வேண்டுமா? சமையல் செய்வதென்பது பெண்களுக்கு மட்டுமே உரிய கடமையா என்ன? ஏன் ஆணும் பெண்ணும் போய்ச் சாப்பிட்டு வருகிற மாதிரியான பொதுவான சமையல் கூடங்களை ஏற்படுத்தக் கூடாது? உடல் அமைப்பில் வேண்டுமானால் ஆணும் பெண்ணும் சிறிது வித்தியாசப்பட்டிருக்கலாம். உணர்ச்சிகள் இருவருக்கும் பொதுவானது தானே! ஏன் பெண்களும் கிராப் வைத்துக் கொண்டு, சட்டை அணியக் கூடாது? எதற்காக அவர்கள் மட்டும் தங்கள் கூந்தலை வளர்த்துப் பேணிப் பாதுகாத்துச் சிரமப் பட வேண்டும்?" என்பது போன்று பெரியார் கேட்டிருந்த கேள்விகளெல்லாம் என்னுள் ஓர் அதிர்ச்சியையே ஏற்படுத்தி விட்டன.

பெரியாரின் சீர்திருத்தக் கருத்துக்களைக் கேட்டவர்களின் நிலை எப்படியிருந்தது என்பதை பாரதிதாசன் மிக அழகாகச் சொல்லுவார். "இமயமலை இல்லையெனச் சொன்னதுபோல் உணர்ந்தோம். பின் தெளிந்தோம்!" என்பார் பாரதிதாசன். அதே நிலைதான் எனக்கும்.

இதன் காரணமாக, பெண் பற்றி வழிவழியாக என்னுள் விதைக்கப்பட்டிருந்த ஒரு மாய பிம்பத்தைப் பாரதியாரைவிடவும் மூர்க்கமாகத் தாக்கினார் பெரியார்.

இதுமட்டுமல்ல; பெரியாரின் துணைவியார் நாகம்மையார் மறைந்தபோது குடியரசில் பெரியார் எழுதியிருந்த கட்டுரையைப் படித்து நெகிழ்ந்தேன். அதுவோர் உலக மகா காதல் காவியமாகவே எனக்குப் பட்டது.

"அன்பு போயிற்று என்பேனா? அறிவு போயிற்று என்பேனா? ஆற்றல் போயிற்று என்பேனா? இல்லை எல்லாம் போயிற்று என்பேனா? நல்லவேளை! அவர்கள் போய் விட்டார்கள். நான் ஏற்றுக் கொண்டிருக்கிற பணியில், நான் பல காலம் சிறைப்பட நேரிடலாம். வேறு எந்தத் தொல்லைகள் வேண்டுமானாலும் வரலாம். அதையெல்லாம் பார்க்க நேர்ந்தால் அவர்கள் கவலைப்பட நேரிடும். அவர்கள் கவலைப் படுவார்களே என்று நானும் கவலைப்பட நேரிடும். அதனால் என் பணிகளில் கணக்கம் ஏற்படலாம்...." என்று பெரியார் நீண்டதொரு கட்டுரையை எழுதியிருந்தார்.

தமது மனைவிமேல் எத்தனை அன்பும் மதிப்பும் வைத்திருந்தால் பெரியார் இப்படியெல்லாம் எழுதியிருப்பார் என்கிற பிரமிப்பு என்னுள் எழுந்தது. அதன் காரணமாகவே, அவரைச் சந்தித்துப் பேச வேண்டும் என்கிற ஆர்வமும் என்னுள் வளர்ந்தது.

(தொடரும்)

வர்த்தமானன் பதிப்பகத்தின் கையடக்கப் பதிப்பில் கை வண்ணம் மிக்க இரு நூல்கள்!

## நாலடியார் இலவசம், சிலப்பதிகாரம் வாங்கினால்!

இவற்றின் உரையாசிரியர் : **பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன் எம்.ஏ.,**

# சிலப்பதிகாரம்

**ரூ.40** **508** பக்கங்களில்

**முழுவதும் மூலமும் உரையுமாக**

# நாலடியார்

**(இலவசம்)** **176** பக்கங்களில்

**முழுவதும் மூலமும் உரையுமாக**

**அப்படி இந்தப் பதிப்பில் என்ன சிறப்பு?** ஒருபக்கம் பாடல் வரிகள் - எதிர்ப்பக்கம் உரை! இடப் பக்கத்தில் பாட்டு வரி எங்கே முடிகிறதோ அதுபோல, வலப்பக்கத்தில் அதன் உரையும் முடியும். **இஃதோர் சிறப்பு!** நெஞ்சை அள்ளும் வகையில் ஆங்காங்கே உரைப்பகுதியில் சிறு சிறு தலைப்புகள். **இஃதோர் சிறப்பு!** ஒரு நாவல் படிப்பது போல் இதன் உரைநடைப் பகுதியை விரைந்து படித்து முடிக்கலாம். **இஃதோர் சிறப்பு!**

**சிலப்பதிகாரம் வாங்குவோர்க்கு நாலடியார் இலவசமாகத் தரப்படும். 31.1.2000 வரை!**

கடிதம் எழுதுக: இரு நூல்களையும் V.P.P. யில் அனுப்பு கிறோம். தபால் செலவு ரூ.10 சேர்த்து மொத்தம் ரூ.50 தபால்காரரிடம் கொடுத்துப் பார்சலைப் பெற்றுக் கொள்க. M.O. அனுப்ப வேண்டாம். **முகவரி : வர்த்தமானன் பதிப்பகம், ஏ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ், 141, வடக்கு உஸ்மான் சாலை, தியாகராய நகர், சென்னை - 17. (பனகல் பார்க் அருகில்).** நேரில் பெற : எமது அலுவலகத்தில் ரூ.40 மட்டும் செலுத்தி இரு நூல்களையும் உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 9.30 முதல் மாலை 6.30 வரை. ஞாயிறு விடுமுறை.

**நூல்களின் சிறப்பு :** நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தில் வரும் மாந்தர்கள் நம் நெஞ்சை விட்டு அகலாதவர்கள். மானம் மிக்க தென்னவன் 'யானோ அரசன் ; யானே கள்வன் ; கெடுக என் ஆயுள் !' எனக் கதறி அழுது உயிர் துறந்தான்! தன் நெஞ்சத்தையே நீதி மன்றமாகக் கருதித் தன்னையே ஒரு குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி, தானே ஒரு புறம் நீதிபதியாக இருந்து, தனக்குள் தானே வாதப் பிரதிவாதம் செய்து, தனக்குத் தானே தண்டனை வழங்கி உடனே உயிர் நீத்தான். பாருங்கள் பாண்டியனின் மனமாகிய நீதி மன்றத்தை!

யானோ அரசன்? - ஒரு வாதம் (Argument)
யானே கள்வன்! - ஒரு தீர்ப்பு (Judgement)
கெடுக என் ஆயுள் - ஒரு தண்டனை (Punishment)

இப்படி மூன்று தொடரில் ஒருவரின் பண்பைக் கூறிய காப்பியம் ஏதேனும் உண்டோ? வல்வினை வளைத்த கோலை மன்னவன் செல்லுயிர் நிமிர்த்திச் செங்கோலாக்கிய வரலாற்றை எங்காவது கேட்டதுண்டா?

தாம் ஒரு சமணத் துறவியாக இருந்தும், 'திருமால் சீர் கேளாத செவி என்ன செவியே? கரியவனைக் காணாத கண் என்ன கண்ணே? நாராயணா என்னா நா என்ன நாவே?' என முழு முதற்கடவுளைப் போற்றுவதும், 'ஆனேறு ஊர்ந்தான்!' எனச் சிவபெருமானைப் பாராட்டுவதும் கோவலனை முருகப் பெருமானுடனும், கண்ணகியை வள்ளியுடனும் ஒப்பிட்டுக் கூறுவதும் இளங்கோவடிகளின் பெருமையைப் பறை சாற்றுகின்றன அல்லவா? கோவலன், மாதவி ஆகிய இருவரது உள்ளக் குமுறலைக் 'கானல் வரி' என்னும் அகத்துறைப் பாடலில் அமைத்துக் காட்டும் இளங்கோவடிகளின் புலமையை எப்படிப் புகழ்வது?

ஒன்றா, இரண்டா? சிலம்பின் பெருமை! காப்பியத்தைக் கற்று உணர்க!

'நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி' என்னும் பழமொழியிலிருந்தே நாலடியாரின் பெருமையை உணரலாம்!

கனகராஜ் மகிழ்ச்சியாக இருந்தான்.

பாரதிக்கு அவனைப் பார்க்கையில் வேடிக்கையாக இருந்தது. எதில் எல்லாம் மனிதர்களுக்கு ஆனந்தம் ஏற்படும்? குடும்பச் சந்தோஷத்துக்குப் பணம் ஈடா? கனகராஜ், வீடு வந்ததும் குழந்தையைக் கொஞ்சினான்.

''ஒழுங்கா பள்ளிக்கூடம் போறியா? ஒழுங்காச் சாப்பிடறியா?'' என்றெல்லாம் குழந்தையிடம் கேட்டான்.

''பாரதி, சௌக்கியமா?'' என்றான். அதோடு விடவில்லை.

''உன் கேசட்டுகளைக் கேட்டேன். ரொம்ப நல்லாத்தான் பாடியிருக்கே. அது விஷயமாத்தான் வந்திருக்கேன். அப்புறமா சொல்றேன்'' என்று குளிக்கப் போனான். போகும் வழியில் எதிர்ப்பட்ட மாமனாரிடம், ''என்ன மாமா, இளைச்சுட்டீங்களே?'' என்றான். அவர், திகைத்துப் போய் நின்றார்.



# முதல் மழைத் துளி

பணம்.

மனித மனத்தை சுற்றிவிடும் கயிறு அது. பம்பரம் மனம். நேசிப்பதற்காகவே நேசிப்பது இல்லை ஜனங்கள். தேவையைப் பொறுத்து, வேண்டியதைப் பொறுத்தே சிநேகம் கொண்டாடப்படுகிறது என்று கசந்து போய் நினைத்துக் கொண்டாள் பாரதி.

குளித்துவிட்டு, பூஜை மாடத்துக்கு முன் நின்று, ஏதோ ஸ்தோத்திரம் சொல்லிக் கொண்டான், கனகராஜ். காலைப் பலகாரத்தை முடித்துக் கொண்டு, பாரதியை



# 12

## பிரபஞ்சன்

அழைத்து தனக்கு முன் அமர்த்திக் கொண்டான்.

அவன் முகம் தெளிவாகவும், அன்பை வெளிப்படுத்துவதாகவும் இருந்ததைப் பாரதி ஆச்சரியத்தோடு பார்த்தாள்.

"உன்னோட நண்பர் உதவியாலே, எனக்கு நிறையப் பணம் கிடைச்சது பாரதி. அதுக்கு உன்னைத்தான் காரணம் சொல்லணும்..."

எனக்கு என்கிற வார்த்தையைக் கேட்டு அவள் தனக்குள் சிரித்துக் கொண்டாள். இப்போதும் கூட, அவனால், "நமக்கு" என்று சொல்ல முடியவில்லை.

சற்று நேரம் அமைதி காத்தான். பிறகு தொடர்ந்தான்.

"எங்க கம்பெனி ஜி.எம். தெரியுமில்லையா? அவர், சினிமாக்காரர்களுக்குக் கூடத் தெரிந்த பெரிய புள்ளி. கொடுக்கல் வாங்கல் எல்லாம் கூட அவருக்கு உண்டு."

"உம்."

"அப்படி நிறையப் பேர் அவர்கிட்ட வந்து போவாங்க. அதுல ஒரு புரொடியூசர். நமக்கு ரொம்ப வேண்டியவர். ரொம்ப நல்ல மாதிரி. சங்கீதம் எல்லாம் அவருக்குத் தெரியுமாம்."

"உம்."

"அவர் உன் பாட்டைக் கேட்டிருக்கார். அவருக்குப் பிடிச்சுப் போச்சாம். இப்போ, புதுசா ஏதாச்சும் ஒரு குரல் வந்தா ரொம்ப நல்லா இருக்கும்கிறது சூழ்நிலையாம்.

பாரதியம்மா விரும்பினா, என் படத்துல பாடலாமேன்னார். ரகுமான் மியூசிக் போடற படம்னார். உன் பேரைச் சொன்னதும், ரகுமான், அந்த அம்மா ஒரு பாட்டு பாடினாக் கூட போதும்னாராம். உன் மேல அவ்வளவு மரியாதை அவருக்கு. நான் சரின்னு சொல்லிட்டேன்."

"சரின்னு சொல்லிட்டீங்களா?" என்றாள் பாரதி, அதிர்ச்சியுடன்.

"ஏன்? சரின்னுதான் சொன்னேன். நல்ல 'ஆஃபர்' ஆச்சே?"

"எனக்கு யோசிக்கணும்."

"இதுல யோசிக்க என்ன இருக்கு?

பூஜை அறையில் இருக்கும் அப்பாவுக்கு இது கேட்குமே என்கிற கவலையில் இருந்தாள் பாரதி. அப்பாவும் அம்மாவும் எப்போதுமே, தர்க்கம் செய்து கொண்டிருக்கிறார்களே என்று பார்த்துக் கொண்டிருந்தாள் குழந்தை.

கனகராஜுக்கு ஆச்சர்யம்.

"இதிலே என்ன சிந்திக்க இருக்கு?"

"இல்லை. சினிமாவில பாடறதைப் பத்தி நான் சிந்திக்க வேணும்."

"சினிமாவில பாடறது, அல்ப சொல்பமான காரியமா, என்ன? வாய்ப்புக்கு நீ அலையலை. அது தானா உன்கிட்ட வந்துச்சு. அதனால அதை அலட்சியமா பேசாதே."

"எனக்கு எதன் மேலும் அலட்சியமே இல்லீங்க. எனக்குச் சினிமா பற்றி நிறைய 'ரிசர்வேஷன்' உண்டு."

"என்ன பேசறே, நீ? எம்.எஸ்., விசுவநாதய்யர், சேஷகோபாலன், பாலமுரளி, எம்.எல்.வி., இப்போ நிறைய பேர் பாடத்தானே செய்யறாங்க? அவங்களை விட நீ உசத்தியோ?"

அவள் புண்பட வேண்டும் என்று அவன் பேசிக் கொண்டு இருந்தான். ஆனால், எதனாலும் தான் புண்பட்டு விடக்கூடாது என்கிற ஜாக்கிரதை உணர்வில் இருந்தாள், அவள்.

"நிச்சயமா உசத்தி இல்லை. என்னால் வணங்கப்படற மேதைகள் அவர்கள். அவர்களால் அது சாத்தியப்படலாம். என்னால முடியாது. என்னுடையது கற்பித சங்கீதம். எழுதிக் கொடுத்த வார்த்தைகளை என்னால, இசைக்கிறது எனக்குச் சாத்தியம் இல்லை. அது ஒரு தனிக் கலை. எனக்கு வரல்லை."

அவன், சலித்துப் போனவனாக எழுந்து, கூடத்தின் குறுக்கும் நெடுக்குமாக உலவினான். வைத்தியநாதனை அழைத்தான்.

"நீங்களே உங்கள் மகளுக்குப் புத்தி சொல்லுங்க, மாமா..."

அவர் தர்மசங்கடத்துக்குள்ளானார்.

"என்ன தம்பி?"

"உங்க மகளுக்குச் சினிமாவில் பாட ஒரு நல்ல வாய்ப்பு வர்றது. அதை வேண்டாங்குது, இந்த அம்மா."

அப்பா, சிவனே என்று கூரை விட்டத்தைப் பார்த்தார்.

"சொல்லுங்க, மாமா."

"மாப்பிள்ளை, இதெல்லாம், அவாள் இஷ்டம். கலைஞர்கள்லே, சில பேருக்கு, எல்லா சாதனங்கள்ளேயும் பாட முடியும். சிலருக்கு முடியாது. இதையெல்லாம், வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டா சொல்ல முடியாது."

"உங்க மக கெட்டுப் போறதுக்கு நீங்களே காரணம்."

"கெட்டுப் போறதுக்கா?"

"பின்ன, என்ன? பாட்டுக்கு சில ஆயிரம் கிடைக்கும்னு சொன்னார். ஒரு நாளைக்குப் பத்தும் பதினைஞ்சும் சம்பாதிக்கிறது சாமான்ய காரியமா, என்ன?"

"இதுல, சம்பாத்தியம் விஷயம் இல்லை" என்று தயங்கியபடி சொன்னார், வைத்தியநாதன்.

"வேறு என்ன விஷயம்?"

"கலைஞர்களோட சுதந்தரம்."

"என்னது?" என்று அவரைப் பார்த்துச் சிரித்தான் கனகராஜ்.

"சுதந்தரம்..." என்றபடி, அந்த வார்த்தை ஏதோ தமாஷ் என்பது போல அவன் சொல்லிக் கொண்டு, மீண்டும் குறுக்கும் நெடுக்குமாக நடந்தான்.

கடைசியாக முடிவு சொல்கிறவன் போல அவன் சொன்னான்.

"நாளைக் காலையில, அந்தக் கம்பெனி மானேஜர் வர்றார். ஏதாவது அக்ரிமென்ட்ல கையெழுத்துப் போட வேண்டி இருக்கும். அவங்க வரச் சொல்ற நாளுக்கு, நாம் ரிக்கார்டிங்குக்குப் போக வேண்டியிருக்கும்."

அவன் முற்றுப் புள்ளி வைப்பது போலச் சொல்லிக் கொண்டு அறைக்குள் போய், சட்டை அணிந்து கொண்டு திரும்பினான்.

"எல்லாம் யாருக்காக மாமா? குடும்பத்துக்காகத்தானே? எல்லாம், இந்தக் குழந்தையோட எதிர்காலத்துக்குத்தானே?"

பெரியவர் மௌனமாக இருந்தார்.

அவன் புறப்பட்டான்.

"பலகாரம் சாப்பிட்டுப் போங்களேன்" என்றாள் பாரதி.

"பலகாரம் இடக்கட்டும், பலகாரம். நல்லா யோசிச்சு வை" என்று வெளியேறினான் அவன்.

கனகராஜ் சென்று, வெகு நேரம் ஆன பிறகும், பாரதியும் அவள் அப்பாவும் அமைதியாக உட்கார்ந்திருந்தார்கள்.

"என்னப்பா, இது?"

பாரதிக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது. முகத்தை மூடிக் கொண்டு அமைதியாக அழுதாள்.

அப்பா, தரையைப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தார்.

பாரதி, கண்களைத் துடைத்துக் கொண்டாள். குழந்தை, அம்மாவைப் போய் அணைத்துக் கொண்டது. குழந்தையைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு, "நீ போய் விளையாடும்மா" என்றாள். குழந்தை, "எதுக்கும்மா அழுறே?" என்றாள்.

"சும்மாச்சும்"

"சும்மாச்சும் யாராவது அழுவாளா?"

"இல்லை. சும்மாச்சும்... நீ போய் விளையாடு."

குழந்தை திரும்பித் திரும்பிப் பார்த்தபடி நடந்தாள்.

"என்னப்பா செய்யலாம்?"

"உனக்குப் பிடிக்கலை, இல்லையா?"

"ஆமாம்பா.. எனக்குப் பிடிக்கலை."

"அப்போ, முடியாதுன்னு சொல்லிடு."

சற்று நேரம், யோசித்த பிறகு, அவர் சொன்னார்.

"இல்லற தர்மம்னு ஒண்ணு இருக்கு. சுதர்மம்னு ஒண்ணு இருக்கு. முன்னது, மற்றவங்க சுகதுக்கங்கள் சார்ந்தது. சுதர்மம், உன் ஆத்மா சம்பந்தப்பட்டது. இல்லற தர்மமும், சுதர்மமும் மோதினா, நீ சுதர்மத்தின் பக்கம்தான் இருக்கணும்."

அவள் கண்கள் நிரம்பின.

"அந்த உதவியை, அரவிந்தன் செய்திருக்கப்படாது. அதனாலதான், இவர், திரும்பவும் ஆரம்பிச்சுக்கிட்டார்."

"அவர் என்ன செய்வார்? அவர் நல்லதை நினைச்சார்..."

சற்று நேரம் சென்ற பின், அவள் முடிவுடன் சொன்னாள்.

"என்ன ஆனாலும், சரி. என்னால் முடியாது."

"அப்படியே இரு."

மாடிக்குச் சென்று, செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றத் தொடங்கினாள். வேலையில் ஆழ்ந்தால், துக்கம் மறக்கும் என்று அவள் நினைத்தாள். மல்லிகைக் கொடி, பாதி புஷ்பித்து இருந்தது. பூக்களைப் பறித்தாள். குழந்தைக்கு வைக்கலாமே...

மனசுக்குள் ஒரு பாடல் புரண்டது.

'நிதி சுகமா, நிம்மதி தருமா...
இதயம் நிரப்புமா, இன்பம் அருளுமா?
மலர்கள் பூத்திடும்.. மாலைத் தென்றல் வீசும்
கலகலவெனச் சிரிக்கும் குழந்தையை ஆடி விளையாடும்
மனசை நெருடும் மதி மயக்கும்
மனிதக் காதல் என்னைச் சுயமாக்கும்...
வெள்ளிப் பண ஓசை ஸ்ருதி போல் ஆகுமா....



வெள்ளையோ கருப்போ ஆத்மாவை நிரப்புமா
உப்பு புளிக்கு பணத் தேவை இருக்கும்
உள்ளம் வெறுத்திட கீதமே சிறக்கும்....

**ம**றுநாள் மாலை, அந்த நபர் வந்து சேர்ந்தார். பட முதலாளியின் ஆளாம். மட்டமான சென்ட், அருவருப்பைத் தந்தது. புரளும் வேஷ்டி, மினுக்கும் சட்டை என்று இருந்தார் அந்த ஆள்.

"முதலாளி அனுப்பினாரம்மா" என்றார் அவர்.

அவர்முன் சம்பிரமமாக அமர்ந்திருந்தான் கனகராஜ்.

"இவர்தான், நான் சொன்னேனே, புரடியூசரின் வலது கை" என்றான்.




அவள் அமைதியாக, நாடகத்தைப் பார்த்துக் கொண்டு இருந்தாள்.

"அம்மாவுக்கு இரண்டு பாட்டு தர முடிவு பண்ணி இருக்கார், டைரக்டர்."

அடடா, என்ன கருணை. கருணா ரசம்.

"அம்மா பாட்டுக் கேட்டு சொக்கிட்டார், அவர்"

இது அற்புத ரசம்.

"அம்மா குரல் சுசீலாம்மா மாதிரி இருக்காம்."

இது உவமை அணி.

"அம்மா. இந்தப் படத்துக்குப் பிறகு, எங்கோ போயிடுவாங்க. அப்புறம் பாருங்க கனகராஜ், ஒரே பிசிதான். பண மழை கொட்டும்."

இது உருவக அணி.

காப்பி குடித்தார். அப்புறம் கேட்டார்.

"அம்மா என்ன சொல்றீங்க?"

"சம்மதம்" என்றான் கனகராஜ்.

அவர், பாரதியைப் பார்த்தார்.

"நீங்க என்னம்மா சொல்றீங்க?"

"அவ என்ன சொல்றது? நானே சொல்றேனே."

அவள், அவர்கள் இருவரையும் பார்த்தபடி இருந்தாள்.

"என்ன, சார்? அவங்க சும்மாவே உட்கார்ந்திருக்காங்க..."

"சொல்லேன், பாரதி."

அவள், வந்தவரின் முகத்தைப் பார்த்துச் சொன்னாள்.

"எனக்குச் சம்மதம் இல்லை."

ஒரு கடுமையான, விகாரமான மௌனம் நிலவியது. வந்தவர், கனகராஜைப் பார்த்தார்.

"என்ன, பாரதி என்ன இது?"

"என் முடிவு."

"எனக்கு இது அவமானம்."

"மன்னியுங்க. என்னால இது ஆகாது."

"என் வார்த்தையை மீறயா?"

"வேறு வழி தெரியலை, எனக்கு."

வந்தவர் எழுந்தார்.

"அவசரப்பட்டுடாதீங்க, கனகராஜ். அந்த அம்மா, பெரியவங்க. அவங்க இஷ்டத்தை மதியுங்க. வர்றேம்மா."

அவர் கைகூப்பி வணங்கினார். போய்ச் சேர்ந்தார்.

கோபமாகப் பாரதியைப் பார்த்தபடி இருந்தான், கனகராஜ்.

(தொடரும்)

# பவர் ஃபைனான்ஸ்

## ஒளிமயமான எதிர்காலம்
## நிலையான வருமானம்

## தமிழக அரசு நிதி நிறுவனம்

வழங்குகிறது

# 13.14%

| காலம் | ஆண்டு வட்டி | |
|---|---|---|
| | மாதமொரு முறை | மூன்று மாதங்களுக்கு ஒரு முறை |
| 12 மாதங்கள் & 1 நாள் | - | 12.12% |
| 25 மாதங்கள் | - | 12.63% |
| 36 மாதங்கள், 48 மாதங்கள் & 60 மாதங்கள் | 13% | 13.14% |

# 18.18%

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 13%)

- இந்நிறுவனம் வங்கிட்டனி சாராத நிதி நிறுவனமாக ரிசர்வ் வங்கியில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதன் பதிவு எண் : 07. 00389 ஆகும்.
- முழுமையான பாதுகாப்பிற்கு CRISIL வழங்கியுள்ள FA+ மதிப்பீடு.
- துவக்கத்திலிருந்து தொடர்ச்சியாக இலாபம் ஈட்டி வருகிறது.
- கடந்த மூன்று ஆண்டுகளாகத் தொடர்ந்து 20% ஈவுத்தொகை வழங்கி வருகிறது.

*மேலும் விபரங்களுக்கு :*




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம்** (பவர்ஃபின்)

பதிவு அலுவலகம் : 84, டி.டி.கே. சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை – 600 018.

Visit us at : www.tnpowerfinance.com www.tninfrafinance.com

28-9-99 தேதியிட்ட 'எகனாமிக் டைம்ஸ்' இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது

"Details are also available on the Internet" www.tn.gov.in www.chennaionline.com

# அக்னிசர்மா பக்கம்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பெரும்பாலான கிரகங்கள் சாதக மாவே உலவறதால, தன்னம்பிக்கை மேலோங்கி, துணிச்சலா செயலாற்றுகிற வாரமா இருக்கும். நீண்ட நாள் உடல் உபாதைகள் ஒரு முடிவுக்கு வரும். சிலருக்கு எதிர்பாராத பயண அனுகூலம் இருக்கும். பணப் பிரச்னை இருக் காது. ஆனா, சில விசேஷமான காரியங்களுக் காக நிறையச் செலவு ஆகிற சூழ்நிலை வரும். பெண்களுக்குப் பதவி உயர்வோ, சம்பள உயர்வோ கண்டிப்பா இருக்கும்.



**ரிஷபம் :** (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

ஏராளமான பிரச்னைகளைக் கையாண்டுக்கிட்டிருக்கற உங்களுக்கு இந்த வாரம் புதுப் பிரச்னை, உடல் ஆரோக்கியம் சம்பந்தமானது. உஷ்ணத்தால சில பாதிப்புகள் இருக்கும். அதிக அலைச்சல், தூக்கமின்மை, பணிச்சுமைன்னு ரொம்பவே சிரமப்பட்டாலும் உங்க காரியங்களை கவனமா முடிப்பீங்க. புதிய முயற்சிகள்ல இறங்க இது சரியான நேரம் இல்லை. மேலதிகாரிகளோட இடையூறு, அதிருப்தி, கோபத்தை அடிக்கடி சந்திக்க வேண்டி வரும். வெளியூர் பயணங்களைத் தவிர்த்துடுங்க. முடிஞ்சா லோக்கல் பயணங்களில்கூட டூ வீலரைத் தவிர்க்கறது நல்லது. பணம் நிறைய செலவாகற வாரம் இது.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் வரை)*

பிரமாதமான நேரம் இன்னும் தொடருது. புத்தி சாதுர்யத்தால எடுத்த காரியங்களை வெகு சிறப்பா செய்து முடிப் பீங்க. அரசாங்கப் பணியாளர்களுக்கு இட மாறுதல், புரமோஷன்னு விருப்பமான விஷயங்கள் நிறைவேறும். வழக்குகள் சாதகமாவே தீர்ப்பா கும். ஆனா, நண்பர்கள் விஷயத்துல எச்சரிக் கையா நடந்துக்கங்க. முக்கியப் பொறுப்புகளை மத்தவங்ககிட்ட ஒப்படைக்காதீங்க. வீட்டுல ஒரு நல்ல காரியம் நடக்கும். மனை, டூ வீலர்னு ஏதா வது வாங்குவீங்க. சிலருக்கு மகான்கள் தரிசனம், புண்ணிய யாத்திரைக்கான வாய்ப்பும் கூடி வரும்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

குரு பார்வை நல்லா இருக்கு. பலருக்குக் கல்யாண நேரம் கூடி வரப் போவுது. சினிமா இசைத் துறையினருக் குப் புகழ் ஓங்கி நிக்கிற வாரம். புதிய வாய்ப் புகள், விருதுகள் தாராளமா வரும். அரசு ஊழி யர்களுக்கு நீண்ட நாள் பாக்கிகள் வந்து சேரும். சிலர் ஃப்ளாட் மாதிரி ஏதாவது அசையா சொத்து வாங்குவாங்க. உடன் பிறந்தவர்களால ஒரு நன்மை நடக்கும். நீண்ட நாள் நண்பர் களைச் சந்தித்து அளவளாவும் வாய்ப்பு வரும். இளைஞர்களுக்கு வெளிநாட்டு வேலை வாய்ப்புக்கான சாத்தியம் பிரகாசமா இருக்கு.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கல்யாணக் களை கட்டியிருக் குமே வீட்டுல? தொடர்ந்து சில நல்ல காரியங்கள் நடக்கப் போகுது. பலர் வீடு கட்டி கிரகப் பிரவேசம் செய்வீங்க. குறிப்பா, சினிமாக் காரங்களுக்கு அந்த ராசி அதிகமாவே இருக்கு. பண வரவு கூடுதலா இருக்கற நேரம்ங்கறதால அடிப்படை வீட்டு உபயோகப் பொருட்கள், ஆடம்பரப் பொருட்கள்னு வித்தியாசமில்லாம வாங்கித் தள்ளுவீங்க. மருத்துவர்கள், ராணுவம், போலீஸ் மாதிரியான மக்கள் சேவகர் களுக்கு மட்டும் இந்த வாரம் சவாலானதா இருக்கும்.

ரிஷப ராசிக்காரரான இளையராஜாவுக்கு அதிக அலைச்சலும் பணிச் சுமையும் நிறையவே இருக்குமாம்.





**கன்னி :** *(உத் திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

அஷ்டம கேது அவ்வளவு நல்ல தில்லை. வாரிசுகளால சில சங்கடங்கள் ஏற்படும். சொத்துப் பிரிவினை மாதிரியான விஷயங்களைப் பத்தி பேசிட்டிருந்தீங்கன்னா, அந்த சிந்தனையையே இப்ப தள்ளிப் போடறது நல்லது. கடன் வாங்கற வேலை வேணாம். பல பிரச்னைகள் ஏற்படும். சீட்டு கட்டறது, லோக்கல் பெனிபிட் பண்ட் மாதிரியான காரியங்கள்லேயும் தலை யிடாதீங்க. பொருளாதார இழப்புக்கான சாத் தியம் பலமா இருக்கு. சிலருக்கு திடீர் உடல் நலக் குறைவு ஏற்படும். கெட்ட சகவாசம் வேணாம். நண்பர்கள்கிட்டயும் எச்சரிக்கையா பழகுங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

விளையாட்டுத் துறையினருக்கு

எதிலும் வெற்றி வாய்ப்பு பிரகாசமா இருக்கும். வீட்டுல மகிழ்ச்சி கரைபுரண்டு ஓடற மாதிரி சில நல்ல காரியங்கள் நடக்கும். விருந்து, கேளிக்கைக்குக் குறைவிருக்காது. அரசு விவகாரங்கள் சுமுகமா தீர்வாகும். வழக்குகள் ஏதாவது பெண்டிங்ல இருந்தா, இப்ப பைசலாயிடும். பணப் பிரச்னை இருக்காது. பெண்களால ஆதாயம் உண்டு. வீடு, மனை வாங்கற யோகம் பலருக்கு இருக்கும். கலைத் துறையினருக்கு, போட்டியாளர்களால சில சங்கடங்கள் ஏற்பட்டு விலகும்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்க வசீகரமான தோற்றமும் பேச்சுமே வெற்றி தேடித் தரும். குறிப்பா, எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் துறைல இருக்கறவங்களுக்கு அது ரொம்ப ஆதாயமான வாரம். தொழில் தொடங்க சரியான நேரமும்கூட. எதிர்பார்த்த கடனுதவிகள் சுலபமா கிடைக்கும். நண்பர்களும் உதவுவாங்க. எழுத்தாளர்கள், கவிஞர்களுக்குப் புதிய வாய்ப்புகளும் புகழும் சேரும். விவசாயத் துறையினருக்கு அபார வளர்ச்சி இருக்கும். செவ்வாய் நாலுல இருக்கறது மட்டும் கொஞ்சம் இடைஞ்சல். பெற்றோர் உடல் நலன்ல பிரச்னை வரலாம். வீடு, மனை வாங்கற விஷயம் சிக்கல் தரும். உடன் பிறந்தவங்களோட சண்டை, சச்சரவுகள் ஏற்படும்; எச்சரிக்கையா இருங்க.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

செயற்கரிய காரியங்கள் செய்து பாராட்டுப் பெறுவீங்க. பண நடமாட்டம் அமோகமா இருக்கறதால செலவும் ஏராளமா இருக்கும். சிலருக்கு திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள், குறிப்பா வெளிநாடு சான்ஸுக்கு வாய்ப்பு இருக்கும். சமூகப் பணியாளர்களுக்குப் புகழ் கூடும். பெண்களுக்குத் திருமண யோகம் கூடி வரும். கல்யாணமானவங்களுக்குக் குழந்தை பாக்கியம் கைகூடும். வழக்கறிஞர்கள் வெற்றிப் பாதைல நடை போடுவாங்க. சில எதிர்பாராத மனிதர்கள் தக்க சமயத்துல உதவி, உங்களை மகிழ்ச்சில ஆழ்த்துவாங்க.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

சோதனையான வாரம்தான். வழக்கமான காரியங்களைக் கூட ரொம்ப சிரமப்பட்டே முடிப்பீங்க. உடல் ஆரோக்கியமும் சீரா இருக்காது. குடும்பத்துல சில குழப்பங்கள், சண்டை, சச்சரவுகள் ஏற்படும். தந்தையுடன் கருத்து வேறுபாடு ஏற்பட்டு ஆளுக்கொரு பக்கம் திரும்பிக்கற சூழ்நிலை உண்டாகும். ஆபீஸ்ல பலவித பிரச்னைகளை சமாளிக்க வேண்டி வரும். மேலதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாவீங்க. கணக்கு வழக்குகள் பார்த்துக்கற வேலைல இருக்கறவங்களுக்கு இது சோதனையான நேரம். ரொம்ப எச்சரிக்கையா இருக்க வேண்டியது அவசியம்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

சில எதிர்பாராத அனுகூலங்களுக்குத் தயாரா இருங்க. வீட்டுல சில விசேஷங்கள் நடக்கப் போவுது. உங்க நீண்ட நாள் லட்சியங்கள் நிறைவேறும் சூழ்நிலை உண்டாகும். வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். எதிரிகள் காணாமப் போயிடுவாங்க. பெண்களுக்கு நகை வாங்கும் யோகம் இருக்கும். சிலர் நீண்ட தூர சுற்றுப்பயணங்கள் மேற் கொள்வார்கள். கலைஞர்கள், சமூக சேவகர்கள், ஆன்மீகத் துறையினருக்கு இது அற்புதமான வாரம். நல்ல பெயர் எடுக்கறது எப்படின்னு க்ளாஸ் எடுக்கலாம்ங்கற அளவுக்கு உங்களுக்குப் பேர் கூடும். பணப் பிரச்னை இருக்காது.

## நடக்குமென்பார் நடக்கும்!



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

அறிவாற்றல் மேலோங்கி இருக்கற வாரம். எடுத்த காரியத்தைத் திறமையா செய்து முடிப்பீங்க. புகழ் - பணம் ரெண்டும் தாராளமா புழங்கும். பெரியவர்கள், நண்பர்கள் சகாயமா இருப்பாங்க. தொழில் துறையினருக்குப் புதிய ஒப்பந்தங்கள் ஏற்படும். அரசு அதிகாரிகளுக்கு இட மாற்றம் இருக்கும். கல்வியாளர்கள், வழக்கறிஞர்களுக்கு இது ஆதாயமான கால கட்டம். ஆன்மீக ஈடுபாடு அதிகரிக்கும். பெண்களுக்குக் கொஞ்சம் உடல் நலக் குறைவு ஏற்பட்டு விலகும். மாணவர்கள் படிப்பில் வெற்றி நடை போடுவாங்க. சிலருக்கு பூர்வீக சொத்து ஏதாவது தாய் வழில கிடைக்கற சான்ஸ் இருக்கு. ●

பிரணவமாகிற வில்லிலே ஆத்மாவாகிற 'அம்பைப் பூட்டி எம்பெருமானின் சரணாரவிந்தத்தில் தைக்க எய்தால் அது அங்கேயே பற்றி நின்றுவிடும் என்று சொன்னேன்.

அச்சுதன் என்று அவனுக்குப் பெயர். தான் கீழே நழுவி விழாதவன். தன் திருவடியைப் பற்றினவர்களை நழுவ விடாதவன் என்று பொருள். அப்படிப்பட்ட அச்சுதனுடைய திருவடியிலே சரணாகதி செய்வதற்கான மந்திரம் பிரணவம்.

'ஓம்' - பிரணவம் - என்றால் யார்? என்றொரு கேள்வி -

இதை உபநிஷத் ஸ்பஷ்டமாகச் சொல்கிறது. ஓம்காரமென்றால் பகவானாகிற விஷ்ணு. விஷ்ணுதான் ஓம்காரமாக இருக்கிறான் என்று எப்படித் தெரிகிறது?

உபநிஷத்தே இன்னொரு இடத்தில் சொல்கிறது : 'அகாரோ விஷ்ணு வாசக:' என்று. ஓம்காரத்தில் வருகிற 'அ' இருக்கிறதே, அதான் விஷ்ணு. 'ஓம்'காரம் மூன்று பதமாக இருக்கிறது; மூன்று அக்ஷரமாக இருக்கிறது; மூன்று வாக்யமாக இருக்கிறது- ஒரே அக்ஷரமாகவும் இருக்கிறது. இதற்குள்ள பெருமையைச் சொல்லவே முடியாது.

பூர்வ காலத்தில் மஹரிஷிகளெல்லாம் மண்டலம் மண்டலமாயிருந்த ரிக் வேதத்தைப் போட்டுக் கடைந்தார்கள். புத்தியாகிற மத்தால் கடைந்தபோது, அவ்வளவு வேத வான்மயமும் எட்டு அக்ஷரமாக வந்து நின்றது.

அதே மாதிரி, ரொம்ப கடினமான வேதம் யஜுர் வேதம், அந்த யஜுர் வேதத்தைக் கடைந்தபோதும் எட்டு அக்ஷரங்கள் கிடைத்தன. அதே மாதிரி ஸாம வேதம். அதையும் கடைந்து எட்டு அக்ஷரங்கள் பெற்றார்கள். (அதர்வண வேதம் தனியே சொல்ல வேண்டாம். முதல் மூன்று வேதங்களைச் சொன்னால் அதர்வண வேதத்தைச் சொன்னது போல்தான்.)

மூன்று வேதங்களைக் கடைந்து பெற்ற 3X8 = 24 அக்ஷரங்கள் கிடைத்தன. இந்த 24 அக்ஷரங்களே காயத்ரி மந்திரமாயின. சமஸ்த வேதமும் இவ்வாறு காயத்ரி மந்திரமாக மாறிப் போய்விட்டது. அதை மேலும் சுருக்கினார்கள் மஹரிஷிகள். அதை அதர்வண வேதம் விவரிக்கிறது :

அ, உ, ம என்ற மூன்று அக்ஷரங்கள் தோன்றின. அசம்ஹிதாகாரம், சம்ஹிதாகாரம் என்று இதற்கு இரண்டு வடிவங்கள். சம்ஹிதை என்பது சேர்த்துச் சொல்வது. அசம்ஹிதை என்றால் பிரித்துச் சொல்வது.

பிரணவத்தின் சம்ஹிதாகாரம் ஓம். பிரித்துச் சொன்னால், அதுவே அ, உ, ம. ஏகபதமாக, ஒரே அக்ஷரமாக அவை சேரும் போது 'ஓம்' - அதுதான் உயிர் முடிச்சு. அதன் ஆகிருதியை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

வேதமனைத்திற்கும் வித்தான பிரணவத்தை விவரித்தால் வியாக்ருதி, வியாக்ருதியை விவரித்தால் காயத்ரி, காயத்ரியை விவரித்தால் எல்லா வேத மந்திரங்களும்!

'உலகம் யாவையும் தாமுளவாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கா'

என்று ராமாயணத்தின் ஆரம்பத்திலே எழுதினான் கம்பன்.

ஸ்ரீ ஸ்துதியிலே இதையே ஸ்வாமி தேசிகன் விவரிக்கிறார் :

ஜன்ம (உண்டாக்குதல்) ஸ்தேம (நிலை பெறச் செய்தல்) ப்ரளய (அழித்தல்) - இந்த மூன்று காரியத்தையும் பண்ணுகிறான் அவன். அவன் எங்கே இருக்கிறான்...?

ச்ருதி சிரஸி விதீர்த்தே. ச்ருதிகள் என்கிற வேதங்களின் சிகரத்தில் இருக்கிறான்.

சரீரத்துக்கு உத்தமாங்கம் - அதாவது உத்தமமான உறுப்பு எது? என்று கேட்டால் சிரஸ்.

ச்ருதிகளுக்கு சிரஸ் எது? என்றால் பிரணவம்!

ஸ்ரீநிவாஸன் இருக்கிறானே திருவேங்கட மலை மேல், அவன் எங்கே இருக்கிறான் என்று ப்ரும்ம சூத்திர, பாஷ்யத்தில் ராமாநுஜர் சொல்கிறபோது,

ஸ்ருதி சிரஸி தீர்த்தே
ப்ரும்மணி ஸ்ரீநிவாஸே

## 52

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

என்கிறார்.

ச்ருதிகளுக்கு சிரஸாயிருக்கும்படியான பிரணவத்தில் பிரகாசிக்கிறானே, அந்த ஸ்ரீநிவாஸனிடத்திலே என்னுடைய புத்தியானது பக்தியுடன் எப்போதும் நிலைத்து நிற்கட்டும் என்கிறார்.

ஆக, பிரணவப் பொருளாய் பரமாத்மா விளங்குகிறான். பிரணவத்தில் பிரகாசிக்கிறான்.

அதனால் அகாரோ விஷ்ணு வாசக : என்று ஏற்படுகிறது.

**அ,** உ, ம என்று மூன்று சொன்னேன். பராசர பட்டர் என்கிற ஆசார்யர் பிரணவத்தை விவரிக்கிறபோது, 'அ' என்கிற அக்ஷரத்தினாலே விஷ்ணு சொல்லப்படுகிறான் என்கிறார். உலகத்தைப் படைத்து, காத்து, அழிக்கும்படியான தன்மை இந்த அ என்கிற





## 2100ல் ஒரு டாக்டர் ஜோக்!

இப்போது எதற்கெடுத்தாலும் ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்கள் வந்துட்டாங்க... ஏன்... இன்னிக்கு மரங்களுக்கு மருத்துவம் செய்யக் கூட டாக்டர் ரெடி...!

இனி 2100 ஜோக்குக்கு வருவோம்...

ஒருத்தர் வேகமா ஓடி வர்றார்... ஒருமர டாக்டர் கிட்ட...

''டாக்டர்... எங்க தோப்புலே இருக்கிற ஒருமரத்துக்கு உடம்பு சரியில்லே... உடனே நீங்க வந்து பார்க்கணும்...''ங்கறார்...

டாக்டர் மெதுவா தலையை நிமிர்ந்து பார்த்து.

''என்ன மரம் அது...'' என்றார்.

''பூவரசு மரம்..'' என்றார் வந்தவர்...!

''சாரி... அதுக்கான டாக்டர் அடுத்த கட்டடத்தில் இருக்கார்... நான் புளிய மரத்துக்கான டாக்டர்...'' என்றார் இந்த டாக்டர்.''

நன்றி: **இன்று ஒரு தகவல்– தென்கச்சி கோ. சுவாமிநாதன்**
தகவல்: **ராஜிராதா**

அக்ஷரத்திலே இருக்கிறது. 'அ' என்கிற தாதுவுக்கு ரக்ஷிப்பது என்று பொருள். ரக்ஷிப்பவனான பரமாத்மா ஓம்காரத்தில் இருக்கிறான்.

அடுத்தது 'உ' என்கிற அக்ஷரம். இதற்கு இரண்டு பொருள் ஏற்படுகிறது. 'உ' என்றால் மஹாலக்ஷ்மி. மஹாலக்ஷ்மியுடன் அவன் இருக்கிறான். இன்னொரு அர்த்தமும் இருக்கிறது. 'உ'வுக்கு. – 'அ' வாகிற **அவனுக்கே** மற்றொன்றுக்கு அல்ல – என்கிற அர்த்தத்தைக் காட்டுகிறது 'உ'. மற்றொன்றை அழிக்கிறது. அவனுக்கே என்ற அர்த்தத்தை வலியுறுத்துகிறது.

**அவனுக்கே** உரியவர் யார் என்றால், அந்த 'ம' சப்தம் – ம என்கிற அக்ஷரம்தான். அதற்கு என்ன பொருள்...? 'ம' என்பது ஜீவாத்மா. இந்த ஜீவாத்மா அவனுக்கே உரியது என்று அர்த்தம் – விஷ்ணுவுக்கே! மற்றொன்றின் பொருட்டு அல்ல.

ஆக, பிரணவத்தினால் என்ன பொருள் கிடைக்கிறது என்றால், 'எம்பெருமான் விஷ்ணுவுக்கே – லக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீயஃப்பதியான நாராயணனுக்கே இந்த ஜீவன்'.

இந்தப் பிரணவம் எங்கேயிருந்து வந்தது? சர்வ வேதங்களிலிருந்து. ஆக, சர்வ வேத சாரம் என்ன? – 'அவன் திருவடிக்கே நாம்' என்பதுதான்!

முழுமையாக வேதத்தை ஒரே வாக்கியத்தில் எழுதுவதானால் 'எம்பெருமான் நாராயணன் திருவடிக்கே நாம்' என்றுதான் எழுதியாக வேண்டும்.

அர்ஜுனனுடைய தேர்த் தட்டில் இதைப் பார்க்கலாம். சுவாமி தேசிகன் பரமார்த்த ஸ்துதியிலே விவரிக்கிறார் :

'யக்ஞத்திலே, ஹோம குண்டத்திலே பிரகாசிக்கக்கூடிய ஹே விஜயராகவா! உன்னை ஞானிகள், உயர்ந்த தபோதனர்கள், ஆசார்ய புருஷர்களெல்லாம் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? நீ முதலிலே இருக்கிறாய். முதலில் இருந்து ரக்ஷணம் பண்ணுகிறாய் என்று அவர்கள் சொல்கிறார்கள். எந்தெந்த இடத்தில் நீ முதலில் இருக்கிறாய் என்றால், அபிரக்ஷிதம் – எல்லோரையும் ரக்ஷிப்பதற்காக முன்பு இருக்கிறாய். ரக்ஷகன் என்கிறவன் முன்னே இருக்க வேண்டும். முன்னே இருந்தல்லவா ரக்ஷிக்க வேண்டும். அதனால் ஓம்காரத்தில் நீ முன்னே இருக்கிறாய் – 'அ' என்கிற அக்ஷரத்தில் இருந்து ரக்ஷிக்கிறாய். அதே மாதிரி பார்த்தனுடைய தேர்த் தட்டிலே முன்னே உட்கார்ந்திருக்கிறாய்....' – இது சுவாமிதேசிகனின் விவரிப்பு.

தேரின் அமைப்பு பிரணவம் மாதிரியே இருக்கிறது. 'அ'வாகிற பகவான் முன்னே இருக்கிறான். அவனுக்கே உரியவனான அர்ஜுனன் – ம – பின்னாலே இருக்கிறான்!

அர்ஜுனன் ரதமே பிரணவஸ்வரூபம் தான்! அதை தியானம் பண்ணினாலே பிரணவம் எப்படியிருக்கிறது என்பது நமக்கு ஸ்பஷ்டமாகத் தெரியும்.

பிரணவத்தில் முன்னே இருந்து கொண்டு, அதை உச்சரிக்கக்கூடியவர்களுடைய உள்ளுக்குள் இருக்கிற காம, குரோத, லோப, மோக மதமாத்ஸர்யமென்ற துர்க் குணங்களையெல்லாம் அழித்து, அவர்களுக்கு நல்ல குணங்கள் கொடுத்து ரக்ஷிக்கிறாய். அதே போல் அர்ஜுனனுடைய தேர்த் தட்டிலே முன்னே இருந்து கொண்டு துஷ்டர்களான துரியோதனாதிகள், துச்சாதனாதிகள், சகுனியர்களை அழிக்கிறாய். அழிப்பதற்காக அங்கே முன்னே இருந்தாய்...'

## அருள்வாக்கு



முக்தி நிலையை அடைய அருகதை பெற்ற சாதகனை முமுக்ஷு என்பார்கள். இடையறாத பக்தி செலுத்திச் செலுத்தி ஒருவன் இந்த அருகதையைப் பெற்று விடுகிறான். அவனுக்கு முக்தி கிடைக்கிற சமயம் கைக்கு எட்டினாற்போல் வந்து விடுகிறது. அப்போது அவன் ஒரு தர்மசங்கடமான நிலையில் இருக்கிறான். கன்னிகா தானம் செய்து தருகிற தகப்பனாரின் மன நிலை மாதிரிதான் இவனுக்கும் இருக்கிறது. தகப்பனாரே வரன் தேடி அலைந்த மாதிரி இவனேதான் முக்திக்காகப் பெரிய பிரயாசை செய்து பக்திமார்க்கத்தில் எல்லா அநுஷ்டானமும் செய்தான். அதனால் மனசு பூரணமாகச் சுத்தமாகி பரமாத்மாவில் இரண்டறக் கரைகிற நிலை வந்து விட்டது. கரைந்தபின் பகவானும் இல்லை, பக்தியும் இல்லை. மணப்பெண்ணை வரனுக்குக் கொடுக்கிற தகப்பனாருக்கு அழுகை வருகிற மாதிரி, மனப் பெண்ணை பரமாத்மாவுக்குத் தத்தம் செய்கிற முமுக்ஷுவுக்கும் பெரிய துக்கம் உண்டாகிறது.

இந்தத் துக்கத்தை சுலோகத்தில் வெளியிடுகிறார் ஒரு கவி. 'பஸ்மோத்தூளன பத்ரமஸ்து பவதே' என்று ஆரம்பமாகும் சுலோகம் அது.

''பரமேசுவரன் என் பக்தியில் மகிழ்ந்து என்னை மோக்ஷத்தில் சேர்க்க இருக்கிறான். இனிமேல் நான் விபூதி பூசிக் கொண்டும் ருத்ராட்சம் போட்டுக் கொண்டும், பூஜை ஜபம் முதலிய படிகளில் ஏறிப் போக வேண்டியதில்லை. ஏ, விபூதியே! போய் வா! உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும்; சுபமான ருத்ராட்ச மாலையே, உனக்கும் பிரியாவிடை கொடுக்கிறேன். ஹா, பக்தி மார்க்கப் படிக்கட்டுகளே, உங்களையும் விட்டுப் பிரிகிறேன். எனக்கு பக்தி, பகவத் குணாநுபவம் என்கிற ஆனந்த பிரபஞ்சத்தையே தந்த உங்களை எல்லாம் சிதைத்துப் போடுகிற மோக்ஷம் என்கிற மகா மோகத்தில் தோய்ந்து போகிறேன்'' என்கிறார்.

மோகத்தைப் போக்குவதுதான் மோக்ஷம். ஆனால் பக்தி இன்பத்தையும், அதற்கான சாமக்கிரியைகளையும் கைவிட்டு விட்டு மோக்ஷம் பெறவேண்டும் என்கிற போது இந்தப் பரம பக்தருக்கு மோக்ஷமே மோகமாகத் தோன்றுகிறது!

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

இந்த இடத்திலே, மேலையோர் – அதாவது பெரியவர்கள் காட்டும் இன்னொரு விஷயத்தையும் கவனியுங்கள் என்கிறார் :

ராமாயணத்திலேயும் கவனியுங்களேன். தண்டகாரண்ய வனத்திலே முன்னே போகிறான் பரமாத்மா. அப்புறம் மஹாலக்ஷ்மியாகிற சீதை போகிறாள். கடைசியில் லக்ஷ்மணன் போகிறான். அதைப் பாருங்கள் என்கிறார்.

'ஹ' என்று ஆச்சர்யத்தோடு முடிகிறது வால்மீகி ராமாயணத்தில் இந்தக் காட்சியை விவரிக்கும் சுலோகம்.

அப்படி ஆச்சர்யப்பட என்ன காரணம்...?

எல்லோரும் ஓம்காரத்தைக் காது கொண்டு கேட்கலாம். ஓம்காரத்தைப் பார்க்க முடியுமா...? ஓம்காரம் நடப்பதைப் பார்க்க முடியுமா? இங்கே தண்டகாரண்யத்திலே நடந்து போகிறதே ஓம்காரம் – அந்தப் பிரணவம் நடப்பதைப் பாருங்களேன்... என்கிறார்.

ராமன் முன்னே நடக்கிறான் – அ என்கிற அக்ஷரத்துக்குப் பொருளானவன். அதற்கு அடுத்து 'உ' என்கிற அக்ஷரத்துக்குப் பொருளான மஹாலக்ஷ்மி இடையிலே போகிறாள். இவர்களை அடுத்து, இவர்கள் திருவடியில் கைங்கர்யம் பண்ணும்படியான ஜீவாத்மா, கைங்கர்ய ஸ்ரீயுடன் விளங்கும்படியான இளையபெருமாள் லக்ஷ்மணன் நடந்து போகிறான்.

'அ, உ, ம நடந்து போவதைப் பாருங்கள்!' என்கிறார்! வால்மீகி ராமாயணத்தில் அந்த சுலோகத்திலேயே பிரணவம் அமைந்திருக்கிறது.

(தொடரும்)

**தினசரிகளில் இன்னமும் ஹைஜாக் பற்றி ஏதானும் செய்தி வந்து கொண்டே இருக்கிறது... நம் ஊர் அரசியல்வாதிகள் ஏறிய தில்லி விமானத்தை, மக்கள் மீது ரொம்பக் கருணை கொண்ட, மனிதாபிமானவாதிகள் யாராவது ஹைஜாக் செய்தால் எப்படி இருக்கும்? சும்மா ஒரு கற்பனைதான்....**

**விமான பைலட் :** என் தலைக்குப் பின்னால் துப்பாக்கியுடன் ஒருவர் நிற்கிறார். கழுத்தில் வெடிகுண்டு. கையில் ஏகே-47. விமானத்தைக் கயிலாய மலைக்குக் கொண்டு போகணும் என்கிறார். அவர் ப்ளேன் சஸ் ஹைஜாக்ட்.

**வாஜ்பாய் :** ரொம்ப நிம்மதி. சீக்கிரம் மவுண்ட் கைலாஷுக்குக் கொண்டு போயிடுங்க. ஹர ஹர மகாதேவ்! (கண்களை மூடிக் கொள்கிறார்)

**சோனியா :** ஆ, ஹைஜாக்கா! இது நிச்சயம் அமைச்சர் அனந்தகுமாரோட வேலையாத்தான் இருக்கணும். இந்திரா காந்தி டிரஸ்ட்டைக் கலைக்க அவர்தான் இந்த மாதிரி ஏற்பாடு செய்திருக்கணும். ஐயோ, வி. ஜார்ஜைக் கூப்பிடணுமே!

**ஹர்கிஷென் :** நோ, நோ. ப்ரியங்காவைக் கூப்பிடச் சொல்லுங்க. அவங்கதான் இந்த மாதிரி சமயத்துல ஏதாவது செய்து நம்மைக் காப்பாத்த முடியும். சீக்கிரமா ஜன்னல் வழியா, கையை வேகவேகமா ஆட்டுங்க. யாராலும் உதவிக்கு வரலாம்.

**ஜோதிபாசு :** எனக்கு ரொம்ப வயசாச்சு. கைலாஷ் போறதுக்குப் பதிலா லண்டன்ல இறக்கி விட மாட்டானா? ப்ளீஸ், எனக்கு மெடிகல் செக்அப் செய்து கொள்ளணும்.

**ஹர்கிஷென் :** நத்திங் டூயிங். பீஜிங் போய் நிறுத்தட்டும். அதுதான் ட்ரீட்மென்ட்டுக்கு பெஸ்ட் ப்ளேஸ்.

**சுப்ரமணிய சுவாமி :** ஆர்.எஸ்.எஸ்.ஸும் அல்-உம்மாவும் சேர்ந்துதான் இதைப் பண்ணியிருக்கணும். எனக்கு யு.எஸ். லேருந்து மாடலின் ஆல்பர்ட்டும், டால்போட்டும் போன்ல சொன்னாங்க. நான்தான் கவனிக்கலே. தரை இறங்கின உடனே முதல்ல சுப்ரீம் கோர்ட்டுல ஒரு கேஸ் போடணும்.

**தேவ கவுடா :** ஹையோ, ஹையோ! இந்த பிளேனைக் கடத்தப் போறாங்கன்னு தெரிஞ்சிருந்தா எப்படியாவது ஜே.எச். பாட்டீல், ஹெக்டே ரெண்டு பேரையும் கூடவே ஏறிக்கச் சொல்லியிருப்பேனே! தெரியாம போயிட்டுதே!

**வாஜ்பாய் :** எதுக்கு எல்லாரும் அழறீங்க? எவ்வளவு நிம்மதி! அயோத்தி பிரச்னைக்குத் தீர்வு. பெண்கள் இட ஒதுக்கீட்டுப் பிரச்னைக்குத் தீர்வு. கார்கில் இன்டலிஜென்ஸ் தோல்வி பிரச்னைக்குத் தீர்வு. அமிருதசரஸில் பிளேனை நிறுத்தாததுக்குத் தீர்வு, இன்னும்



# ஆகாயவெளியிலும் அலுக்காத அரசியல்!

ஏராளமான பிரச்னைகளுக்குத் தீர்வு கிடைச்சிருக்கே, ஆகா!

**கருணாநிதி :** மூப்பனார் ஐயா, என்ன ஒண்ணுமே சொல்லாம வாயை மூடிட்டு இருக்கீங்க? இப்படி மௌனமா இருந்தா எப்படி.?

**மூப்பனார் :** நல்லா யோசிச்சு ஒரு நல்ல முடிவுக்கு நான் வரணும். வந்ததும் சொல்றேன். இந்தாங்க, இந்தப் புத்தகத்தை வச்சக்குங்க. 'யு கேன் ஜம்ப்'.

**கருணாநிதி :** நீங்க எந்த அர்த்தத்துல இந்தப் புத்தகத்தை எனக்குக் கொடுத்திங்கன்னு புரியுது. இருந்தாலும் உங்க முடிவு என்ன?

**மூப்பனார் :** கொஞ்சம் இருங்க. சோனியாஜியக் கேட்டு, அவங்க என்ன சொல்றாங்களோ அப்படியே செய்யறேன். (எழுந்திருக்கிறார்)

**சோனியா :** நான் இன்னும் ரெண்டு நாளைக்கு யாரையும் பார்க்க முடியாது. என் வீட்டுக்குப் பக்கத்துல யாரும், எதுக்கும் வர வேண்டாம்!

*(மூப்பனார் வீட்டுக்குத் திரும்புகிறார். கன்னத்தில் கை, வாயில் பாக்கு)*

**ஹர்கிஷன் :** சோனியாஜி, எனக்கென்னமோ இந்த ஹைஜாக்கை வாஜ்பாயியேதான் அரேஞ்ச் பண்ணியிருக்கணும். அவர் நிம்மதியா தூங்கறதைப் பார்த்தா, நம்மை எல்லாம் ஒரேயடியா ஒழிக்கறதுக்கு கிளின்டனோட சேர்ந்து இப்படி ஒரு திட்டம் போட்டிருப்பார் போலத் தோணுது.

**ஜோதிபாசு :** என்னை மட்டும் இறக்கி உட்டுட்டு பாக்கிப் பேரை ஹைஜாக் பண்ணக் கூடாதா? எனக்கு வயசாச்சே, ஐயோ, உங்க யாருக்குமே தெரியலியா?

**ஹர்கிஷன் :** சும்மா புலம்பிக்கிட்டே இருக்காதீங்க.

**ஜோதிபாசு :** இல்லே, பொலிட் பீரோவைக் கூட்டி...

**ஹர்கிஷன் :** நாம்ப இருக்கறது முப்பத்தஞ்சாயிரம் அடி உயரத்துல. பொலிட் பீரோ என்ன, காட்ரெஜ் பீரோவா? அப்படியே தூக்கிட்டு வரதுக்கு?

**ஜோதிபாசு :** ஐயோ, எனக்கு வயசாச்சு. என்னை விட்டுடுங்க. விமான அமைச்சர் ஷரத் யாதவ்வா? இல்லே மம்தா பானர்ஜியா?

**ஹர்கிஷன் :** ஹா, மம்தான்ன உடனே ஜெயா ஞாபகம் வந்திட்டுது. ஜெயா.... ஜெயலலிதா எங்க போய்ட்டார்? ஐயோ, பிரமாதமா ஒரு வேன் கொடுத்தார். புதுசு புதுசா ஐடியா எல்லாம் கொடுத்தாரே? மேடம் ஜெயா...

**ஜெ :** எதுக்கு எல்லாரும் கிடந்து அலட்

டிக்கறீங்க? சும்மா தூங்குங்க. ஒண்ணும் ஆகிடாது. நாம கைலசத்துக்கும் போக மாட்டோம். வைகுண்டத்துக்கும் போக மாட்டோம்!

*(யாரோ அவர் அருகே நெருங்க, அவர் மண்டையில் தமது முஷ்டியால் ஒரு குத்து விட அவர் மயங்கி விழுகிறார்)*

**ஹர்கிஷன்** : ஐயோ – அது லாலு. லாலு பிரசாத் யாதவ்! உங்களை ஐடியா கேக்க வந்துட்டிருந்தார். கொன்னுட்டீங்களே!

**கருணாநிதி** : அம்மையார் அடிதடிக்கு அஞ்சாதவர் என்பதை இங்கேயும் காண்பித்து விட்டார். மனித உரிமைக் கழகம் பற்றி அவருக்குக் கவலை இல்லை. ஐயோ, இப்படி முன் யோசனை இல்லாமல், முரடன் என்று நினைத்து லாலுவை அடித்துச் சாய்த்து விட்டாரே!

**லாலு** : நான் இங்கே பத்திரமாக இருக்கிறேன். அவன் கடத்தல்காரன்!

**மூப்பனார்** : அவர் செய்தது சரிதான். எதிரி என்றால் ஒரு போடு போட வேண்டியதுதான். அதைத்தான் அம்மையார் செய்தார்.

**கருணாநிதி** : அப்படியானால் நீங்கள் ஏன் அப்படிச் செய்யவில்லை?

**மூப்பனார்** : அவர்தான் செய்யப் போகிறாரே? நானும் ஏன் என் கையைக் கறைப் படுத்திக் கொள்ள வேண்டும்? நாளை காமராஜர் ஆட்சி அமைக்கிறபோது, என் கையில் கறை இருக்கலாமா? எதிரியை, எதிரி போல இருக்கிற நண்பர் தாக்கினால் பாராட்ட வேண்டும். அதில் தவறில்லை. அதுதான் பண்பு. இதெல்லாம் தில்லியில் சகஜம்.

**முலாயம்சிங்** : மைனாரிடிக்கும், தாழ்த்தப்பட்டவர்களுக்கும் என்னை விட்டா இனி யார் கதி? காப்டன், என்னை மட்டும் லக்னோவுல பத்திரமா இறக்கி விட லேன்னா, நான் காக்பிட்டுக்கு வந்து தர்ணா பண்ணுவேன்.

**கருணாநிதி** : வாஜ்பாய்! நீங்க தூங்கறீங்களா, முழிச்சுக்கிட்டு இருக்கீங்களா? ஒரே குழப்பமா இருக்கே? இது மாதிரி ஹைஜாக் எல்லாம் நடந்தா என்ன பண்ணணும்னு தேசிய செயல் திட்டத்துல இருந்துதா?

**ஹர்கிஷன்** : இதான் ஹிடன் அஜெண்டா! நாங்க சொன்ன போது உங்களுக்குப் புரியலே.

**மாயாவதி** : எல்லாரும் கொஞ்சம் சும்மா இருக்கீங்களா? எங்க தலைவர் கன்ஷிராம் கடத்தல்காரர்களோட பேச்சு வார்த்தை நடத்திட்டு இருக்கார். அவரே விமானக் கடத்தல்காரர்களோட சேர்றதா ஆஃபர் கொடுத்திருக்கார். கொஞ்சம் வெய்ட் பண்ணுங்க!

**காப்டன்** : உங்களுக்கு ஒரு நல்ல சேதி. மக்களுக்கு ஒரு மோசமான சேதி. கடத்தல்காரர்கள் மவுண்ட் கைலாஷ்ல இருக்கறவங்க பிழைச்சுப் போகட்டும்னு தீர்மானம் பண்ணி, விமானத்தை தில்லிக்கே திருப்பச் சொல்லிட்டாங்க. விமானம் தில்லியில இறங்கப் போகிறது! பெல்ட்டைக் கட்டிக்குங்க!

**— சாருகேசி**

---



**"கல்யாணமான அன்னிக்கே என் மாமியார் புத்தியக் காட்டிட்டா!"**

**"என்ன பண்ணினா?"**

**"ரெண்டு காலையும் எடுத்து வைக்காம உள்ளே வான்னு சொல்றா!"**

**"அந்தப் பத்திரிகை ஆசிரியர் ரொம்ப மோசம்!"**

**"என்ன சங்கதி?"**

**"நா எழுதி பிரசுரமாகாத ஜோக்குகளை அதோட ஒரிஜினல் எழுத்தாளருக்கு திருப்பி அனுப்பிச்சுடறார்!"**

**- அம்பை தேவா**



● எஸ். நாகராஜன், மேல்பாதி.

*? குஷ்புவுக்குக் கோயில் கட்டுவது தவறில்லை என்று சத்யராஜ் கூறியிருக்கிறாரே?*

! சத்யராஜின் பகுத்தறிவு கடவுள் மறுப்பு என்பதில் இல்லை; யாரைக் கடவுளாக்கலாம் என்பதில்தான் இருக்கிறது போலும்.

● இளங்கோ, கல்யாண ஓடை.

*? பேருந்துகளில் ஐந்நூறு ரூபாய் நோட்டுகளை வாங்க மறுக்கிறார்களே; அந்த அளவுக்கா கள்ளநோட்டுகள் பெருகி விட்டன?*

! தலை இருக்கும் வரை தலைவலி இருக்கும். நோட்டுகள் இருக்கும் வரை கள்ள நோட்டுகள் இருக்கும். அஞ்சலக சேமிப்புத் திட்டத்தில் செலுத்தினால் கூட நோட்டுகளின் சீரியல் எண்ணைக் குறித்து வைத்துக் கொண்டுதான் வாங்கிக் கொள்கிறார்கள். அப்படியிருக்க, கண்டக்டர்கள் பயப்படுவதில் ஆச்சர்யமென்ன?

● ஆர். சாலமோன், ஆலங்குளம்.

*? திடீர் மின் கட்டண உயர்வு...?*



• புதிய பகுத்தறிவு!



• சேர்வதும் சேராததும்...!

• அனலும் தென்றலும்



• சாதனையா சோதனையா



• 'சோ' ஸாரி!



• 35 நாட்களுக்கு..



• 'எதிர்கால'த் தீர்ப்பு!

# ராம்தாஸ்

! தமிழக அரசின் புத்தாண்டுப் பரிசு. அமெரிக்காவில் இதைவிட பத்து மடங்கும் ஆப்பிரிக்காவில் இருபது மடங்கும் தேவலோகத்தில் முந்நூறு மடங்கும் மின் கட்டணம் அதிகம் என்று அரசு தன்னிலை விளக்கம் தரலாம். ஆனால், மின் வாரியத்தில் சிக்கனம் இல்லை; மின் வினியோக ஆற்றலும் இல்லை; அரசின் இலவச மின்சாரக் கொள்கையில் பொருளாதார சிந்தனையோ, நியாயமோ இல்லை என்பதையெல்லாம் மறைக்கவோ மறுக்கவோ முடியாது.

● டி. அழகர்சாமி, மதுரை.

*? லஞ்ச ஊழல் பேர்வழிகளைப் பிடிக்க இனி பொதுமக்கள் வீடியோ, போட்டோ, ஆதாரங்களைத் தரும்படி மத்திய அரசு யோசனை கூறுகிறதே?*

! யார் கண்டது! போகிற போக்கைப் பார்த்தால், இன்னும் கொஞ்ச நாளில் அரசியல்வாதிகளும் அதிகாரிகளும் லஞ்சம் வாங்குவது

போல் காமெராவுக்குப் போஸ் கொடுக்கவும் தயாராகி விடுவார்கள்!

● ஜோ.பன்னீர்செல்வம், சென்னை- 84. ❑

? சென்னை மாநகராட்சி, சாலைகளில் ஒரு பக்கத்து வீடுகளுக்கு ஒற்றைப் படை எண், மறு பக்க வீடுகளுக்கு இரட்டைப் படை கதவு எண் என்று வரும்படி எண் களை மாற்றியமைத்து வருகிறதே. இது குழப் பத்தை ஏற்படுத்தாதா...?

! சாலையின் குறுக்கும் நெடுக்குமாக அலைந்து தேட வைக்கும், வெறுப்படையச் செய்யும் ஏற்பாடு. ஏற்கெனவே புழக்கத்தில் உள்ள எண்களை மாற்ற அவசியமே இல்லை. இடைச் செருகலாகப் புகும் புதிய வீடுகளுக்கு A, B, Cயே உசிதம். போஸ்ட்மேன்களைக் கேட்டுப் பாருங்கள்! வீடுகளில் குடியிருப் போருக்கோ இது ஒருவகை Y2k தலைவலி.

● எம். பிச்சைக்கனி, திருமால்பூர்.

? 'இந்தியாவின் எதிர்காலம் அ.தி.மு.கவின் கைகளில்தான் பாதுகாப்பாக இருக்கிறது...' என்று முன்னாள் மத்திய அமைச்சர் கடம்பூர் ஜனார்த்தனன் கூறியுள்ளாரே?

! 'இந்தியாவின் எதிர்காலம்' என்று ஒரு துண் டுக் காகிதத்தில் எழுதி 'ஜெ' கையில் கொடுத்து வைத்திருக்கிறாரோ என்னவோ!

● என். பாலகிருஷ்ணன், மதுரை.

? 'வடக்கத்தி இசையும் தென்னாட்டு இசையும் ஒருபோதும் சேராது. ஜுகல்பந்தி நடத்துவது வேஸ்ட்' என்று சுப்புடு கூறிய கருத்தில் உடன்பாடு உண்டா?

! இசை சேராவிட்டாலும் கூட்டம் சேர் கிறது; வசூல் சேர்கிறது. சுப்புடுவுக்கு 'வேஸ்ட்' டாகத் தெரிவது வேறு சிலருக்கு ஆதாயமாக முடிகிறதே!

● அவ்வை கே. சஞ்சீவிபாரதி, கலிங்கியம்.

? தமிழகத்தில் 35 லட்சம் புதிய உறுப்பினர்களைச் சேர்க்க தமிழக காங் கிரஸ் திட்டமிட்டிருக்கிறது என்கிறாரே திண்டிவனம் ராமமூர்த்தி?

! திட்டத்துக்கென்ன! என்ன வேணுமானா லும் போடலாம். 35 நாட்களுக்கு உட்கட்சிப் பூசலில்லாமல் இருக்க முடிகிறதா என்று முதலில் பார்க்கட்டும்.

● க.நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

? மார்ச் மாதத்தில் சென்னைக்கு கிருஷ்ணா நீர் வந்து விடும் என்று முதல்வர் கருணாநிதி கூறியிருப்பதை நம்புகிறீர்களா?

! இப்போதைக்கு ஆட்டைத் தூக்கி மாட்டில் போட்ட கதையாக, போரூர் ஏரித் தண்ணீரை செம்பரபாக்கத்துக்குக் கடத்தி, அங்கிருந்து விநியோகம். கிருஷ்ணாவை அப்படிக் கடத்த முடியாதே! அதுதான் பயமாயிருக்கிறது.

● கங்கா கணேசன், பொறையாறு. ✱

? இந்த நூற்றாண்டை இந்தியாவின் சாதனை நூற்றாண்டாக உருவாக்க ஆராய்ச் சித் துறைக்கு முதலீடு அதிகரிக்கப்படும் என பிரதமர் விஞ்ஞானிகளுக்கு அழைப்பு விடுத் திருப்பது மிகவும் வரவேற்கக்கூடியது அல் லவா?

! என்ன ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்படு கின்றன என்பதைப் பொறுத்துத்தான் வர வேற்பு. மீண்டும் வேண்டாம் போக்ரான்கள்.

● எஸ். உஷா தேவி, சென்னை – 26.

? ஜெயா டி.வி.யில் தங்களைக் கவர்ந்த நிகழ்ச்சி எது?

! மார்கழியில் அதிகாலை ஒளிபரப்பான, பாலப்ருந்தம் சிறுமிகள் பாடிய திருப்பாவை – என்ன துல்லியம்! அதைத் தொடர்ந்து சுதா சேஷையன் வழங்கிய திருவெம்பாவை உரை.

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

? டாக்டர் ராம்தாஸின் காட்டமான பேச்சுகளைப் பார்க்கும்போது, வரும் தேர் தல்களில் தி.மு.கவுடன் 'டூ' விட்டு விடுவார் போலிருக்கிறதே?

! அப்படியெல்லாம் அவசரப்பட்டுச் செய்து விட மாட்டார். தேர்தல் நேரத்தில் காற்று எப் படி வீசுகிறது என்பதைப் பார்த்துக் கொண்டு தான் முடிவெடுப்பார், பாருங்களேன். அத னால்தான் இப்போதைக்கு ஒரு சமயம் அனல் பறக்கிறது; ஒரு சமயம் தென்றல் வீசுகிறது.

● கே. கான்முகமது, பேராவூரணி.

? சோ, மன்னிப்பு...?

! மன்னித்து விடுங்கள்!

# தி.மு.க.வுடன் 'டூ' விடுவாரா...?

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஜோ. பன்னீர்செல்வம்,
21, டாக்டர் அழகப்பா ரோட்,
புரசைவாக்கம், சென்னை - 600 084.

✱ ரூ. 25 பரிசு பெறுபவர் :
கங்கா கணேசன்,
இலக்கிய இல்லம்,
பொறையாறு - 609 307.

## இருப்பதும் இல்லாததும்

வந்ததும் தெரியவில்லை, போனதும் புரியவில்லை - ஆட்டோ டாக்ஸி ஸ்ட்ரைக் கைத்தான் சொல்கிறோம்! ஒரு வாரம் என்றார்கள்; மூன்றாவது நாளே பிசுபிசுத்து விட்டது; என்னவோ மும்பைக்காரர்கள் சுவாசித்த காற்றில், தூய்மையின்மை ஒரு 2.5% குறைந்ததாகச் சொன்னார்கள் - நம்பினோம்; BEST பஸ்காரர்கள் 33% வருவாய் கூடியதென்றார்கள் - தினக் கலெக்ஷன் ஒரு கோடியே 65 லட்சங்களிலிருந்து 2 கோடியே 15 லட்சங்களாயிற்று எனக் கணக்குக் காட்டினார்கள்; நம்பினோம்; ஆனால் நம்பிக்கை இழந்து விட்டவர்கள், யார் என நினைக்கிறீர்கள்? டாக்ஸி, ஆட்டோ டிரைவர்கள்தான்! அதுவும் தங்கள் யூனியன் தலைவர்கள் மீதே! 'இந்த ஸ்டிரைக்கினால் எங்களுக்கென்ன லாபம்? மூன்று நாள் வருமானம் போனதுதான் மிச்சம்' எனப் புலம்புகிறார்கள். யூனியன் தலைவர்கள், தாங்கள் "இருப்பதை"க் காட்டிக் கொள்ள, அவ்வப்போது ஸ்ட்ரைக், தர்ணா மூலம் எதையாவது இல்லாமல் போகச் செய்வார்கள் என்பதைப் பாவம்.... கொஞ்சம் லேட்டாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்!

## கொடுப்பதும் எடுப்பதும்

CST யிலுள்ள "நகர் சௌக்"கை "லதா மங்கேஷ்கர் சௌக்" எனப் பெயர் மாற்றம் செய்ய வேண்டும் என்ற காங்கிரஸ் கார்ப்பொரேட்டர் கிஸன் ஜாதவ்வின் கோரிக்கையை, BMC மறுத்து விட்டது. உயிரோடிருப்பவர்களின் பெயரை வைக்கக் கூடாது என்ற தமது பாலிஸியைக் காரணம் காட்டி விட்டது; ஆனால் இதே போல் போர்விலி தியேட்டர்-கம்-ஆடிட்டோரிய விஷயத்தில் தப்பிக்க முடியவில்லை! அதை பாலா சாஹேப் தாக்கரேயின் தந்தை ப்ரோபதன்கர் தாக்கரேயின் பெயரால் நாமகரிணிக்க வேண்டும் என முனிசிபாலிடிகாரர்களும், 'கூடவே கூடாது; மராத்திய நாடகாசிரியர் ஜெயவந்த் தபல்வியின் பெயரால் அழைக்க வேண்டும்' என்று 'அகில பாரதீய நாட்ய பரிஷத்'காரர்களும் அடித்துக் கொள்கிறார்கள்; இருவருமே ஸ்வர்க்கவாசிகள்தாம்; அங்கே யாருக்கு மவுசு அதிகம் என்பதைத் தெரிந்து கொள்ள, எந்த பீர்பலை அனுப்ப முடியும்? இந்த மாதத்துக்குள்ளான, பெயர் மாற்றக் கோரிக்கைகள் இன்னும் ஒரு டஜன், நிலுவையில் நிற்கின்றன. "பழக்கப்பட்ட பெயர்களை மாற்றி எங்கள் உயிரை ஏன் எடுக்கிறீர்கள்?" என இட்லிக் கடைக்காரர், பால்காரர், கடத்தல் மன்னர் போன்றோரின் பெயர்களிலெல்லாம் தெருக்கள் வந்து விட்டதைக் கண்டு, நொந்து போகின்றனர் பொது மக்கள்!

## ஒரு போனில் ஒரு உயிர்

மகன், மருமகள், பேரன், பேத்தி... போன்றோரிடம் மாட்டிக் கொண்டு தவிக்கும் வயசானவர்கள் இனி 2678249ஐ டயல் செய்து அருணா நாயரை அழைத்தால் போதும்; கஷ்டங்களிலிருந்து விமோசனம் கிடைத்துவிடும். ஃபோனை உபயோகிக்கக் கூட அனுமதியில்லாத பெரிசுகளுக்காக, அக்கம் பக்கத்தவர், அறிந்தவர் தெரிந்தவர் கூட தொலைபேசலாம்! உதவ இருக்கும் நிறுவனத்துக்குப் பொருத்தமான பெயர் Outreach! கிழங்கள் 'அவுட்' ஆவதற்கு முன் 'ரீச்' ஆகிவிட்டால், ஒண்ணேகால் ரூபாயில் ஒரு உயிரைக் காப்பாற்றிய பெருமை கிடைக்கும்!

# இந்திய-பாக். உறவு பற்றி

## நாய் வால்

முதல் நிலை: நாயின் வாலை இடது கையால் நேராக்குங்கள்;

இரண்டாவது நிலை: வலது கையால் அதை ஒரு நீண்ட குழாய்க்குள் (pipe) திணியுங்கள்.

மூன்றாவது நிலை: 52 வருடங்கள் காத்திருங்கள்.

நான்காவது நிலை : 'பைப்'பை நீக்குங்கள்.

இறுதி நிலை: வால் முன்போலவே சுருண்டுக் கொள்வதைக் கவனியுங்கள்!'

பாகிஸ்தானுடன் இன்னும் பேச்சு வார்த்தை தேவைதானா?

இப்படி ஒரு சிந்தனையைத் தூண்டும் அறிக்கையை Bates Clarion, 'The Brief' ல் வெளியிட்டிருந்ததாக ஒரு மும்பை தினசரி தெரிவித்தது -

"IC814 ஐ ஹைஜாக்கியவர்களில், இரண்டு பாகிஸ்தானியர் மும்பையில் போலி இந்திய

பாஸ்போர்ட்டை பெற்றிருக்கிறார்கள் - டிச 30 மும்பையில் கைதான நான்கு ஐஎஸ்ஐ ஏஜெண்டுகள், ஹைஜாக்கர்களுடனும், பாகிஸ்தானியர்களுடனும் தொலைபேசியிருக்கிறார்கள் தானேவில் கைதாகியிருக்கும் இவர்கள் கூட்டாளிகளில் மூவர், பாக் குடியுரிமையுடையவர்கள்..."

இப்படிப்பட்ட செய்திகளை ஒரு வாரமாக தினசரிகளில் படித்துப் படித்து நொந்து போன மனங்களுக்கு, இந்த அறிக்கை சற்று வயிற்றெரிச்சலைத் தணித்தது என்னவோ உண்மைதான்!

### மிட்லி!

**மி**லெனியத்தை வரவேற்க 'கேக்'கைத்தான் வெட்ட வேண்டுமா என்ன? பிரிட்டிஷாரிடம் இருந்து சுதந்தரம் வாங்கி 52 வருடம் ஆகியும் அடிமைப் புத்தி போகவில்லையே...? பார்த்தார்கள், கோரேகானிலுள்ள காமத் க்னப் அண்ட் காமத் இன்ஸ்டிட்யூட் ஆஃப் ஹோட்டல் மானேஜ்மெண்ட்காரர்கள்! இந்தியக் கலாசாரத்தை ஒட்டி, பத்து நபர் அடங்கிய குழு ஒன்று, இரண்டு மணி நேரம் போராடி, 4 அடி டயாமீட்டரும், 37½ கிலோ வெயிட்டும் கொண்ட ஒரு ஜயண்ட் இட்லியை அவிக்க, அதையே மிலெனிய கொண்டாட்டங்களுக்கு உபயோகித்துக் கொண்டு விட்டார்கள்!

# ஒரு கிண்டல் விளம்பரம்!




• கிண்டல் விளம்பரம்



• மிலெனிய இட்லி!

### இனாம்தாருக்கு இனாம்!

**ஸ்**காட்லண்ட் யார்டில், ரிடையராகிப் போனவர்களையெல்லாம் திரும்ப வேலைக்கு அழைத்துக் கொண்டிருக்கிறார்களாம்! இங்கேயோ... இருப்பவர்களெல்லாம் ஒவ்வொருவராக கழன்று கொண்டிருக்கிறார்களே? முதலில் DGP ஆக இருந்த அரவிந்த இனாம்தாரை புனேவுக்கு மாற்றினார்கள் - அதுவும் Director General & Advisor என்று புதிதாக ஒரு பதவியை ஏற்படுத்தி! 'ரிடையராவதற்கு 11 மாதங்களே இருக்கும் போது, இந்தத் தலை குனிவு தேவைதானா?' என்று இனாம்தார் தம் ராஜினாமாவைக் கொடுத்து விட்டார்! உடனே நகர போலீஸ் கமிஷனர் மென்டோகஸா, தாம் நீண்ட விடுமுறையில் போவதாக, ஒரு விண்ணப்பத்தைச் சமர்ப்பித்தார். இவருக்கு, ஜாயிண்ட் கமிஷனராக சௌத்ரி வந்திருப்பதோ, இனாம்தார் இடத்தில் மல்ஹோத்ரா வந்திருப்பதோ சுத்தமாகப் பிடிக்கவில்லையாம். இத்தனை மாற்றங்களுக்கும் காரணம் சகன் புஜ்பல்தான் (ஹோம் டிபார்ட்மெண்டை வைத்திருக்கிறாரே?) என்று எல்லோருக்கும் அவர் மீது காட்டம்!

— ஜெயஸ்ரீ ராஜ்

## காதில் விழுந்தவை:

முதல்வருக்குத் தாங்கள் மட்டுமே நெருக்கமானவர்கள் என்று 'பிலிம்' காட்டுவதிலும் இவர்கள் வல்லவர்கள்'' என்றார் பொறகாக கிடைக்காத கவிஞர் ஒருவர். பொங்கலன்று சென்னை தூர்தர்ஷனில் கலைஞர் தலைமையில் நடந்த கவியரங்கத்தில் முதலில் லிஸ்டில் இருந்த பெண் கவிஞர் ஒருவர் பெயரையும் இந்த இரட்டையர் அணிதான் வெட்டி விட்டதாம்.

● சென்னை திருவான்மியூரில் கடற்கரையை ஒட்டியுள்ள பல பகுதிகள் கலாக்ஷேத்ராவுக்குச் சொந்தமாக இருந்தன. காலப்போக்கில் அவை பிளாட் போடப்பட்டு தனியார்களுக்கும் விற்கப்பட்டன. ஆனால் அந்தப் பிளாட்களை வாங்கியவர்கள் இப்போது கடும் சிக்கலில் இருக்கிறார்கள். அந்தச் சிக்கலுக்குக் காரணம் திருவான்மியூர் மீனவர் பஞ்சாயத்து சபை. நிலம் வாங்கியவர்கள் வீடு கட்டத் துவங்கினால், இத்தனை ஆண்டு காலம் நாங்கள்தான் இந்த நிலத்தைப் பாதுகாத்து வந்தோம். எனவே எங்களுக்கு 'ஏதாவது' கொடுக்க வேண்டுமென்று அடம் பிடிக்கிறார்களாம், மீனவ பஞ்சாயத்து பிரமுகர்கள். இந்தத் தொல்லையைச் சமாளிக்க போலீஸுக்குப் போனால் ''ஏன் ஸார் அவர்களோடு மோதுகிறீர்கள். 'ஏதாவது' கொடுத்து செட்டில் பண்ணிக்கோங்க'' என்கிறார்களாம். இதன் காரணமாக சிலர் லட்ச, லட்சமாக மீனவ பஞ்சாயத்து சபைக்கு அழுதிருக்கிறார்கள்.

● சென்னை கோட்டையில் இருந்து பல முக்கிய தகவல்கள் அ.தி.மு.க வட்டாரத்துக்கு லீக் ஆவதைத் தடுத்து நிறுத்தும் நடவடிக்கையாக பொதுப்பணித் துறையைச் சேர்ந்த பொறியாளர் ஒருவர் தூத்துக்குடிக்கு மாற்றப்பட்டார். இவர் முன்னாள் அ.தி.மு.க. அமைச்சரின் உறவினர். லீவில் சென்ற அவர் சில நாட்களில் சென்னைக்கே மீண்டும் வேறு துறைக்கு மாற்றப்பட்டார். ''அமைச்சர் செய்த மாற்றத்தை 'நீர்த்துப்' போகச் செய்யும் அதிகாரம் கொண்ட அதிகாரிகளும் பொதுப் பணித் துறையில் இருக்கிறார்கள்' என்று வியக்கிறார் கோட்டை அதிகாரி ஒருவர்.

● தி.மு.க.வுடன் ஊடலில் இருக்கும் பா.ம.க.வை நெல்லிக்குப்பம் இடைத் தேர்தலின்போது முழுமையாக நம்பலாமா? இதுதான் இப்போது தி.மு.க. பிரமுகர்களின் முன் உள்ள முக்கியக் கேள்வி. அதற்குக் காரணம் 'காலை வாரி விடும்' முயற்சியில் பா.ம.க. இறங்கலாம் என்று வந்திருக்கும் உளவுத்துறை தகவல்தான்.

# மறைந்திருந்து வாலியை நீ(தோ)க்கியது யார்?

● தமது பவள விழாவின்போது பிரமாதமாகக் கவிதை பாடிய கவிஞர் வாலியை அரசு நடத்தும் கவியரங்க நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளச் செய்ய வேண்டுமென்பது முதல்வரின் ஆசை.

அதன் காரணமாக குமரியில் நடந்த திருவள்ளுவர் சிலை திறப்பு விழாவில் தமது தலைமையில் நடந்த கவியரங்கத்தில் கலந்து கொள்ள அவரது பெயரையும் ஓ.கே. செய்தார் முதல்வர். ஆனால் இறுதியாக கவிதை படிப்பவர்களின் பட்டியல் வெளியிடப்பட்டபோது அதில் வாலியின் பெயர் இல்லை. இடையில் என்ன ஆயிற்று? ''மறைந்திருந்து வாலியை நீ(தா)க்கியது யார்?'' தகுதியுள்ளவர்களைப் புறக்கணித்துவிட்டு தங்களுக்கு ஜால்ரா அடிப்பவர்களை மேடையில் ஏற்றி விடும் கலையில் செம்மையாக விளங்கும் இரட்டையர் அணி செய்த வேலைதான் இது.

— சஞ்சயன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka